# ஸ்ரீவைஷ்ணவ லக்ஷணங்கள்

## ஓர் ஆய்வு


ஸ்ரீவைஷ்ணவஸ்ரீ

திருமதி ஸத்யபாமா பார்த்தசாரதி

M.A., (VAISHNAVISM)



கீதாசார்யன் பதிப்பகம்

7, தெற்கு மாட வீதி, திருவல்லிக்கேணி, சென்னை –5

# அணிந்துரை

டாக்டர் எம்.ஏ. பூமாவேங்கட கிருஷ்ணன்
துணை ஆசிரியர்
'கீதாசார்யன்' வைணவமாத இதழ்

ஸ்ரீவைஷ்ணவ மதம் என்பது ஸ்ரீயோடு கூடிய விஷ்ணுவைப் பரம்பொருளாகக் கொண்டுள்ளது. இப்படித் திருமகள் கேள்வனையே மனத்தில் எப்போதும் நினைத்துக் கொண்டிருப்பவர்களான ஸ்ரீவைஷ்ணவர்களைப் பற்றியும், அவர்களுக்கு உண்டான லக்ஷணங்களையும் பற்பல ஆசார்யர்கள் எடுத்துக் காட்டியதோடு மட்டுமல்லாமல் தங்கள் வாழ் நாட்களிலும் அவற்றையே பின்பற்றியும் காட்டியுள்ளனர்.

நஞ்சீயர் என்னும் ஆசார்யர் "மற்றொருவன் கஷ்டப்படும் போது, எவன் இரக்கம் கொள்ளுகிறானோ, அவனே வைஷ்ணவன் எனப்படுவான்" என்று அருளிச் செய்துள்ளார். இதே கருத்தை குஜராத்தி கவிஞர் நர்சி மேத்தா தமது "வைஷ்ணவ ஜனதோ" என்ற பாடலின் மூலமாக வைஷ்ணவ லக்ஷணத்தைத் தெரிவித்ததும், இந்த பாடல் மகாத்மாகாந்தி அவர்களை ஈர்த்ததும் நினைவில் கொள்ளதக்கன.

திருப்பாவையில் ஆண்டாளும், 'எல்லே இளங்கிளியே' என்ற பாசுரத்தில் "நானே தான் ஆயிடுக" என்ற வாக்கியத்தினால் ஒரு ஸ்ரீவைஷ்ணவன் எப்படி நடந்து கொள்ள வேண்டும் என்பதையும் குறிப்பிட்டுப் பாசுரம் அருளிச்செய்துள்ளாள்.

அநந்தாழ்வான் என்னும் ஆசார்யர் ஸ்ரீவைஷ்ணவ லக்ஷணத்தை, "கொக்கைப் போலிருக்கும் கோழியைப் போலிருக்கும், உப்பைப்போலிருக்கும், உம்மைப்போலிருக்கும்" என்று அருளிச்செய்துள்ளார்.

இவ்வாறு பற்பல ஆசார்யர்கள் அருளிச் செய்துள்ளவற்றை, கற்றறிந்த சான்றோர்களிடம் கேட்டு, அதனைச் சிறந்த முறையில் "ஸ்ரீவைஷ்ணவ

லக்ஷணங்கள் ஓர் ஆய்வு" என்ற தலைப்பில் ஆய்வு செய்து புத்தகமாக வெளியிட்டுள்ளார் திருமதி ஸத்யபாமா பார்த்தசாரதி அவர்கள்.

வைணவ சமயமாகிய ஆழ்கடலில் உட்புகுந்து, அருமையான முத்துப்போன்ற கருத்துக்களை எல்லாம் திருமதி ஸத்யபாமா தொகுத்து வெளியிட்டிருக்கிறார் என்றால், அது அவருக்கு வைணவத்தில் உண்டான ஞானம், பக்தி இவைகளையே காட்டி நிற்கிறது என்பதில் ஐயமில்லை.

புராணங்கள், இதிகாசங்கள், ஆழ்வார்களுடைய அருளிச் செயல்கள், அதற்கு அமைந்துள்ள பூர்வாசார்யர்களுடைய வ்யாக்யானங்கள், அதில் கூறப்பட்டுள்ள ஐதிஹ்யங்கள், முதலியற்றை இப்புத்தகத்தில் விரிவாகவும், கம்பீரமாகவும், படிப்பவர்கள் அனைவரும் எளிதில் புரிந்து கொள்ளும்படியாகவும், எழுதியுள்ளது பாராட்டிற்குரியது.

ஸ்ரீவைஷ்ணவர்களுடைய புறலக்ஷணங்கள், அகலக்ஷணங்கள் பற்றியும், ஸ்ரீவைஷ்ணவர்கள் ஒவ்வொருவரும் நடைமுறையில் அனுஷ்டிக்க வேண்டிய விஷயங்கள் பற்றியும் மிக அழகாகக் கூறப்பட்டுள்ளன. ஒரு ஸ்ரீவைஷ்ணவனுக்கு அவசியமாக இருக்கவேண்டும் என்று பிள்ளைலோகாசார்யர் குறிப்பிட்டுள்ள பத்து விஷயங்களை எடுத்துக் கொண்டு, அதற்கேற்ப பூர்வாசார்யர்களுடைய அநுஷ்டானங்களை எடுத்துக் காட்டி மிகவும் தெள்ளத் தெளிவாக எழுதியுள்ளார் திருமதி ஸத்யபாமா பார்த்தசாரதி அவர்கள்.

அனைவரும் படித்துப் பயன்பெறும் வகையில் இவ்வாய்வேடு இப்போது புத்தகவடிவிலும் வெளிவருவது மிகவும் போற்றத்தக்கதாகும்.நிச்சயம் இந்தப் புத்தகமானது ஆராய்ச்சியாளர்களுக்கு உதவியாக இருக்கும் என்பதில் எவ்வித ஐயமுமில்லை. உத்யோக நிமித்தம் காரணமாக பல அலுவல்கள் இருந்தாலும் இந்தப் புத்தகத்தை இவர் செவ்வனே செய்து முடித்தது மிகவும் பாராட்டத்தக்கது. இதே போல் மேன்மேலும் பல ஆய்வுகள் திருமதி ஸத்யபாமா பார்த்தசாரதி அவர்கள் மேலும் பல நூல்களை எழுதவேண்டும் என்றும், மேலும் பல பட்டங்களைப் பெற வேண்டும் என்று திருமால் திருவடிகளில் இறைஞ்சுகின்றேன்.

# முன்னுரை

திருமகள் கேள்வனான எம்பெருமானால் மயர்வற மதிநலம் அருளப் பெற்ற ஆழ்வார்கள், தாங்கள் எம்பெருமானை அனுபவித்தபடியை அழகுதமிழ்ப் பாசுரங்களில் வெளியிட்டனர். வேதாந்தக் கருத்துகள் உட்பொதிந்துள்ள அப்பாசுரங்கள் திராவிட வேதம் என்று உச்சிமேல் வைத்துப் போற்றப் பெறுகின்றன. ஆழ்வார்கள் அருளிச் செயல்களையே மிக முக்கியமானப் பிரமாணமாகக் கொண்டு ஸ்ரீராமாநுஜர் போன்ற ஆசார்யர்களால் வளர்க்கப் பெற்ற மதம் மட்டுமே ஸ்ரீவைஷ்ணவமதம் என்று போற்றப் பெறுகின்றது. ஆழ்வார்களுக்குப் பின்னர்த் தோன்றிய ஆசார்யர்கள் அப்பாசுரங்களை முக்கியமான பிரமாணங்களாகக் கொண்டு வைணவ சமயத்தைப் பரப்பினர்.

வைணவ சமயத்தில் கூறப்பெற்றுள்ள கொள்கைகளை தங்களுடைய வாழ்நாளில் பின்பற்றி நடப்பவர்களே ஸ்ரீவைஷ்ணவர்கள். ஸ்ரீவைஷ்ணவன் ஒருவன் எப்படி இருக்க வேண்டும் என்பதை பற்பல ஸ்ரீவைஷ்ணவ ஆசார்யர்கள் எடுத்துக் கூறியதோடு மட்டுமல்லாமல், அவற்றைத் தங்களுடைய வாழ்நாட்களில் பின்பற்றி நடந்தும் காட்டியுள்ளனர்.

"உலகில் ஒருவன் துன்பப்பட்டுக் கொண்டிருக்கும்போது, 'ஐயோ பாவம்' என்று இரக்கப்படுபவனே உண்மையான ஸ்ரீவைஷ்ணவன்; 'நன்றாகப் படட்டும்; அவனுக்கு இத்தனையும் வேண்டும்' என்று நினைப்பவன் வைஷ்ணவனே அல்லன்" என்று அருளிச்செய்வதன் மூலம் உண்மையான ஸ்ரீவைஷ்ணவன் என்பவன் யார் என்பதை நஞ்சீயர் சுட்டிக்காட்டியுள்ளார்.

ஸ்ரீவைஷ்ணவ லக்ஷணத்தைப் பற்றி ஸ்ரீராமாநுஜருடைய சீடரான அநந்தாழ்வான் என்பவர் நான்கு வாக்கியங்களில் அருளிச் செய்துள்ளார். அதாவது, "கொக்கைப் போலிருக்கும்: கோழியைப் போலிருக்கும்: உப்பைப் போலிருக்கும்; உம்மைப் போலிருக்கும்" என்று ஒரு ஸ்ரீவைஷ்ணவரை நோக்கி அவர் அருளிச் செய்துள்ளார்.

இவ்வாறு பூர்வாசார்யர்கள் அருளிச் செய்த ஸ்ரீவைஷ்ணவ லக்ஷணங்களைப் பற்றி ஸ்ரீ உ.வே. வேங்கடகிருஷ்ணன் ஸ்வாமி ஒருமுறை உபந்யஸித்ததைக் கேட்டது முதல், ஸ்ரீவைஷ்ணவ லக்ஷணங்கள் பற்றி ஒரு ஆய்வுக் கட்டுரை எழுதவேண்டும் என்ற எண்ணம் அடியேனுக்கு ஏற்பட்டது.

எம்பெருமானுடைய திருவருளால், சென்னைப் பல்கலைகழகத்தில் வைணவத்தில் முதுகலைப் பட்டம் பெற்று அதில் முதல் நிலையில் தேறினேன். அதற்குப்பிறகு ஸ்ரீவைஷ்ணவக் கல்வி நிறுவனமான ஸ்ரீ வைஷ்ணவ ஸ்ரீ என்ற அமைப்பு நடத்திய மூன்றாண்டு கல்விதிட்டத்தில் சேர்ந்தேன். அதில் மூன்றாவது ஆண்டில் நூறு பக்கங்களுக்கு ஆய்வுக் கட்டுரை எழுத வேண்டும் என்று கூறியபொழுது, அடியேன் ஏற்கெனவே நினைத்திருந்த "ஸ்ரீவைஷ்ணவ லக்ஷணங்கள்" என்ற தலைப்பிலேயே ஒரு ஆய்வுக் கட்டுரை எழுதிக் கொடுத்தேன். திருவல்லிக்கேணியில் எழுந்தருளியுள்ள எம்பெருமான் ஸ்ரீபார்த்தசாரதி ஸ்வாமியின் திருவருளால் அதிலும் முதல் நிலையில் தேறி ஸ்ரீவைஷ்ணவஸ்ரீ என்ற விருதையும் பெற்றேன்.

## நன்றியுரை

இந்த ஆய்வைத் தொகுப்பதற்கு ஆலோசனைகளைக் கூறி ஆய்வுக் குறிப்புகளை வகைப்படுத்தி, இவ்வாய்வேடு நன்முறையில் அமைவதற்கு உதவி புரிந்தவர் அடியேனுடைய உயிர்த்தோழியும், வைணவத் துறை பேராசிரியர் Dr.M.A. வேங்கடகிருஷ்ணன் ஸ்வாமியின் துணைவியுமான Dr. M.A. பூமா வேங்கடகிருஷ்ணன் M.A., Ph.D. அவர்கள் ஆவார். அவருக்குத் தலையல்லால் கைம்மாறு ஒன்றும் கண்டிடப்பெற்றிலேன் அடியேன்.

இந்த ஆய்வை மேற்கொள்ளுவதற்கு அனுமதியளித்த ஸ்ரீ வைஷ்ணவ ஸ்ரீ என்கிற அமைப்பிற்கும் என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

சிறுவயதிலிருந்தே அடியேனை வைஷ்ணவ ஸம்ப்ரதாயத்தில் ஈடுபாடு கொள்ளும்படி வளர்த்த அடியேனுடைய பெற்றோருக்கு சொற்களால் நன்றி கூறுவது இயலாத காரியமாகும்.

இந்த ஆய்வை நான் மேற்கொள்வதற்கு பலவகைகளிலும் என்னை ஊக்குவித்த என் கணவர் திரு பார்த்தசாரதி அவர்களுக்கும், அடியேனுடைய மாமியார் திருமதி வசந்தா கோபாலன் அவர்களுக்கும் என்னுடைய உளமார்ந்த நன்றியினைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

இந்த புத்தகம் வெளிவருவதற்கு நிதி உதவி அளித்த திருமலை திருப்பதி தேவஸ்தானத்திற்கும் அடியேனுடைய நன்றி உரித்தாகுக.

இவண்,

ஸத்யபாமா பார்த்தசாரதி

# பொருளடக்கம்

*இயல் - 1*

# ஸ்ரீவைஷ்ணவ லக்ஷணம்

## *ஸ்ரீவைஷ்ணவ மதம்*

எம்பெருமானார் தரிசனமென்றே இதற்கு நம்பெருமாள் பேரிட்டு நாட்டி வைத்தார் என்பது மணவாளமாமுனிகள் திருவாக்கு. இங்கு இதற்கு என்பது பரமவைதிக மதமான ஸ்ரீ வைஷ்ணவ மதத்தைக் குறிக்கும். நாராயணன், வாஸுதேவன், விஷ்ணு என்ற பெயர்களுடைய தெய்வமே பரமபுருஷன், ஜகத்காரணன், ஜகத்ரக்ஷகன் என்று நித்ய நிர்தோஷ ப்ரமாணமான வேதங்கள் கூறுகின்றன. வணங்கும் சமயம் பலபல என்கிறபடியே உலகில்மத பேதத்தால், பலபல மதங்கள் தோன்றியுள்ளன. அவற்றுள் நாராயணனை ஒத்தாரும் மிக்காருமில்லாத ஒரே பரம்பொருளாய்க் கொண்டாடும் மதம் வைஷ்ணவமதம். நாராயணன் ஸ்ரீ என்ற பெரிய பிராட்டியாருடன் எப்போதும் பிரியாமல் சேர்ந்தே இருப்பதால் இந்த மதம் ஸ்ரீவைஷ்ணவம் என்றழைக்கப்படுகிறது.

## *ஸ்ரீவைஷ்ணவம் பரம வைதிக மதம்*

"ஸத்யம் ஸத்யம் புநஸ்ஸத்யம் உத்ருத்ய புஜமுச்யதே
வேதாத் சாஸ்த்ரம் பரம் நாஸ்தி நதைவம் கேசவாத்பரம்"

"வேதத்தைவிட உயர்ந்த பிரமாணம் இல்லை; கேசவனை விட மேலான தெய்வம் இல்லை, இது முக்காலும் ஸத்யம் என்று கையை உயர்த்திச் சொல்வேன்" என்று ரிஷிச்ரேஷ்டரான வேதவியாசரே அறுதியிட்டிருப்பதால் வேதத்துக்கு மேலான ப்ரமாணம் எதுவும் இல்லை. வேதமாகிற உயர்ந்த சாஸ்த்ரத்துக்கு நாம் எப்போதும் கட்டுப்பட்டவர்கள் என்பதையும் அவற்றில் சொல்லப்பட்டதை மறுக்க எந்த வைதிகனுக்கும் உரிமை இல்லை என்பதையும் உணர வேண்டும். பிற மதத்தினரும் தங்கள் மத நூல்களில் முக்கியமானதை வேதம் என்று சொல்லிக் கொள்ளுமளவுக்கு இவற்றின் பெருமை உயர்ந்துள்ளதைக் காண்க. அறியாதன அறிவித்த அத்தா! என்று ஆழ்வார் எம்பெருமானை அழைக்கிறார். அவன் நமக்கு அறிவை உண்டாக்குவது வேதங்களின் மூலம்; இவையே அறியாதனவற்றை அறிவிப்பவை வேதத்தை ப்ரமாணமாக ஒப்புக் கொள்ளாதவர்களை பாஹ்யர்கள் என்றும், ப்ரமாணமாக ஒப்புக் கொண்டு, தம் கொள்கைகளுக்கு சாதகமான வேதப் பகுதிகளை

வைத்துக் கொண்டு பாதகமானவைகளைப் புறக்கணித்து வேதங்களுக்குத் தவறான அர்த்தங்களைச் செய்பவர்களை குத்ருஷ்டிகள் என்றும் அழைப்பர் பெரியோர். வேதவாக்யங்கள் எதையும் புறக்கணிக்காமல் முன்னுக்குப்பின் முரணில்லாமல் கோர்வையாக அர்த்தம் கொள்வது நம் ஸத்ஸம்ப்ரதாயமான எம்பெருமானார் தரிசனம் ஒன்றேதான். இதையே ஸ்ரீவைஷ்ணவம் என்கிறோம்.

## சரீராத்மபாவம்

ச்ருதிவாக்யங்கள் யாவும் வீணாகாமல் உயிர் பெறும்படி நம்மிரமாநுசன் வளர்த்த இந்த விசிஷ்டாத்வைத ஸித்தாந்தத்திற்குத் திறவுகோல் உடல் – உயிர் – உறவு என்னும் சரீராத்மபாவமாகும். கடகச்ருதிகளில் மூதலித்தபடி பரமாத்மாவுக்கு சித்து அசித்து இவைகளைச் சரீரமாகக் கொண்டு ஈச்வரன் நிற்கும் நிலையை சிதசித்விசிஷ்ட ப்ரஹ்மம் என்றும் சொல்லுகிறார்கள். ஆகாசம், தீ, வாயு, நீர், நிலம் என பஞ்ச பூதபடியாக உண்டாகின்ற ஸகலபதார்த்தங்களுக்கும் எம்பெருமானே உபாதான காரணமாய் இருக்கின்றான். உண்டான ஒவ்வொரு பொருளிலும் பகவான் குறைவற வியாபித்துள்ளான். ஜீவராசிகளின் சரீரங்களில் ஒரு ஆத்மா வியாபித்திருந்து அச்சரீரத்தைத் தாங்கி (தரித்து) நடத்தி (நியமித்து), ஸ்வாமியாய் இருந்து "இது உள்ளது' என்ற சொல்லுக்கு விஷயமாக்குகிறான். இதே போல ஜீவராசிகளின் சரீரம், ஆத்மா இவற்றினுள் உறைந்து, அற்றை நடத்தி சேஷியாய் விளங்குமவன் எம்பெருமான். ஜகத்ஸர்வம் சரீரம் தே என்கிறபடியே ஸகலசேதன அசேதன பதார்த்தங்களும் பரம் புருஷனுக்குச் சரீரமாய் அவனின்றும் வேறாயினும் வேறுபடாததாய் உள்ளமையால்,

> நீராய் நிலனாய்த் தீராய்க் காலாய் நெடுவானாய்
> சீரார் சுடர்களிரண்டாய்ச் சிவனாயயனானாய்!

என்று ஆழ்வார் அருளிச்செய்கிறபடி, நீர் முதலான பஞ்சபூதங்களென்ன, சுடர் மயமான சூரிய சந்திரகளென்ன, தெய்வங்கள் என்று கொண்டாடப்படும் பிரம்மருத்ரர்களென்ன(எல்லாவற்றிலும் அந்தராத்மாவாய் உள்ளபடியால்) எல்லாம் அவன் ஒருவனே ஆகிறான். அவனின்றும் ஸகல சேதன அசேதன வஸ்துக்களும், ஒரு விதத்தில் அவனின்றும் இவை வேறு பட்டவையாயினும் அவனாலே தரிக்கப்பட்டு அவனிடம் ஒன்றிக் கிடக்கையால் அவனே இவை என்று சொல்லலாம்படி உள்ளமையால் தேறும் ஒன்று (அத்வைதம்) விசிஷ்டாத்வைதம் எனப்படும். சரீராத்மபாவம் என்ற உடல் – உயிர் உறவை ப்ரதாநப்ரதிதந்த்ரமாக வைத்து எல்லா வேதவாக்கியங்களையும் ஸமஞ்ஜஸமாக

ஒருங்க விட்டுள்ளது நமது எதிகட்கிறைவனாரின் ஸ்ரீபாஷ்யத்தில் தனிச்சிறப்பாகும்.

## ஜகத்காரணத்வம்

ஒரு குடம் உண்டாக மண் என்னும் பொருள் உபாதானமாம். குடத்துக்கு மண் உபாதான காரணம். அசித் என்றும் ப்ரக்ருதி என்றும் சொல்லப்படும் பஞ்சபூதம் முதலான வஸ்துக்கள் பரமாத்வான எம்பெருமானுக்கு அவனின்றும் பிரிக்க முடியாத பிரகாரங்களாய் (சரீரஸ்தானத்தில்) உள்ளமையால் ப்ரக்ருதியின் மாறுபாடுகளான எல்லாப் படைப்புக்களும் அவனே உபாதான காரணமாகிறான்.

எம்பெருமானார் தரிசனமாக வளர்ந்துள்ள இந்த ஸ்ரீவைஷ்ணவ மதத்தில் நாம் ப்ரயத்க்ஷமாகக் காணும் பொருள்களெல்லாம் உண்மையான நித்தியமான வஸ்துக்கள். இவை பொய்த் தோற்றமல்ல. எல்லாவுலகும் கண்ணன் படைப்பு; அவனுடைய ஸொத்து (விபூதி). 'நான்' என்னும் ஜீவன், பரமாத்வான எம்பெருமானின்றும் வேறுபட்டவனாயினும், அவனுக்கு சரீரமாக வுள்ளபடியினால் அவனோடு ஒன்றி இருக்கிறான்.

திடவிசும்பெரிவளி நீர்நிலமிவைமிசை
படர்பொருள் முழுவதுமாய் அவையவைதொறும்
உடல் மிசையுயிரெனக் கரந்தெங்கும் பரந்துளன்சுடர்மிகு
சுருதியுள் வையுண்ட சுரனே

என்று ஆழ்வாரருளிச் செய்துள்ளபடி ஆகாசம், தீ, வாயு, நீர், நிலம் என பஞ்சபூதமடியாக உண்டாகிற ஸகலபதார்த்தங்களுக்கும் எம்பெருமானே உபாதான காரணமாய் இருக்கின்றான்.

## நாராயணனே பரம்பொருள்

**ப்ரஹ்மவிதாப்னோதிபரம்** என்று ஓதிய வேதம், **காரணம் து த்யேய;** என்று விதித்தது ப்ரஹ்மத்தை அறிபவன் மேலான பேற்றைப் பெறுகிறான் என்றும், காரணப் பொருளை அன்புடன் த்யானிப்பாயாக என்றும் இவ்வாக்கியங்களுக்குப் பொருளாகும். எவனிடமிருந்து இந்த ஜீவராசிகளெல்லாம் உண்டாயினவோ, எவனால் பிறந்தவை உயிருடன் ஜீவிக்கின்றனவோ, எவனிடத்தில் ப்ரளயத்தின் போது இவை புகுகின்றனவோ அவனே ப்ரஹ்மம். (தைத்ரீய உபநிஷத்) இந்த ப்ரஹ்மமே இவ்வுலகையும் ஜீவராசிகளையும் படைக்கிறான்; தான் படைத்ததை ரக்ஷிக்கிறான். ஒரு கால

விசேஷத்தில் இதைத் தன்னுள்ளே லயமடையச் செய்கிறான். இப்படி மூன்று தொழில்களையும் தானே செய்பவனே ப்ரஹ்மம் எனப்படுகிறான். இவனையே ஜகத்காரணவஸ்துவாக அறிந்து பக்தி பண்ணி ச்ரேயஸ்ஸை அடைய வேண்டும்.

மோக்ஷத்தில் இச்சையுள்ள சேதனன் ஜகதேக காரணனான பரமபுருஷனை உபாஸிக்க வேண்டும் என்று விதித்த வேதம் ஸ்ரீமந் நாராயணனே அக்காரண புருஷன் என்றும் காட்டித்தந்தது.

நாராயண பரம்ப்ரஹ்ம - தத்வம் நாராயண: பர:!
நாராயண பரோஜ்யோதி: ஆத்மா நாராயண: பர:!
யச்ச கிஞ்சித் ஜகத்யஸ்மை த்ருச்யதே ச்ரூயதேபிவா
அந்தர் பஹிச்ச தத்ஸர்வம் வ்யாப்ய நாராயணஸ்தித:
(தைத்ரீய உபநிஷத்)

என்றும் தெளிய வைத்தது வேதம். மேலான ப்ரஹ்மம் நாராயணனே, உயர்ந்த உண்மையான பொருள் நாராயணன்; மேலான ஆத்மாவும் நாராயணனே; இவ்வுலகில் காண்பனவும், கேட்பனவுமான எல்லா பொருள்களிலும் உள்ளும் புறமும் ஒக்கப் பரந்து நிறைந்திருப்பவன் நாராயணனே என்று விளக்குகிறது.

இப்படி உயிருக்கும் உயிராய் நிறைந்து நிற்கும் பரம்புருஷனையே காரணப் பொருளாய்க் காட்டிற்று வேதாந்தம். இப்பரமனை நாராயணன் என்ற அஸாதாரணமான பெயரையிட்டு அழைத்தது. அவன் அதிஸுந்தரமான, இவ்வுலகில் காணும் பொருள்களாலாகாத அப்ராக்ருத திருமேனி படைத்தவன் என்றும் சொல்லிற்று. இந்த நாராயணனே நமக்கு உபாஸக விஷயமாக அமைய வேண்டும். நாரயணன் என்ற அஸாதாரணப் பெயர் பெற்ற தெய்வமே பரம்பொருள் – மோக்ஷம் என்ற பெரும் பேற்றை அளிக்கவல்ல தெய்வம் இதுவே என்று ஸகல வைதிக மதங்களும் ஒப்புக் கொண்டுள்ளன. தெய்வங்கள் என்று பலரால் கொண்டாடப்படும் இதர தேவதைகள் நாராயண சரீரங்களே. நாட்டினான் தெய்வங்களாக அத்தெய்வ நாயகன் தானே என்ற ஆழ்வார் திருவாக்குப்படி பரமபுருஷனருளால் அவனையொழிந்த சில தேவர்கள் தெய்வங்களாகப் போற்றப்படுகின்றனர். இந்தத் தெய்வங்கள் தரவல்ல புருஷார்த்தங்கள் ஐஹிகமானவை. விண்ணாட்டில் பெரும் பேற்றையளிக்க வல்லவன் நாராயணன் ஒருவனே. இதர தெய்வங்கள், சிலவற்றைக் கொடுப்பதும் நாராயணன் இவர்களுள் அந்தராத்மாவாக இருந்து கொடுப்பதாலே தான் ஸித்திக்கிறது.

ச்ரிய: பதியான எம்பெருமானே ஸர்வஸ்மாத்பரம் (எல்லையற்ற மேன்மையன்) என்பதையும் பிறவி என்னும் பெரும் பிணியை ஒழிக்க மருந்திடவல்ல ஒரே ஒரு மருத்துவன் (மோக்ஷப்ரதன்) எனுபதையும் திருவாய் மொழியில் நம்மாழ்வார் பலபல இடங்களிலும் பேசி இருந்தாலும், உயர்வற திண்ணன் வீடு, அணைவது அரவணைமேல், ஒன்றும் தேவும் என்ற நான்கு பதிகங்களும் அவனுடைய பரத்வத்தையே பேசுவதில் நோக்காய் அமைந்துள்ளன. "அமரர்கள் அதிபதி" என்று பரமபதத்திலிருப்பைச் சொல்லி வேதாந்தம் காட்டிய வழியில் பரத்வத்தை முதலிப்பது "உயர்வற" பதிகம் நம் கண்ணன் கண்ணல்லது இல்லையோர் கண்ணே என் கையால் "திண்ணன் வீட்டில்" விபவே பரத்வம் முதலிக்கப்படுகிறது. இது புராணங்களில் காட்டிய வழியைப் பின்பற்றுவது, மூன்றாமதில் அணைவது அரவணைமேல் என்று நித்ய விபூதியில் இருப்பையும், தீர்த்தம் உலகளந்த சேவடி என்றும், பார்த்தன் தெளிந்தொழிந்த பைந்துழாயான் பெருமை என்றும் அவதாரத்தையும், பேசி பரத்வஸ்தாபனம் பண்ணினார். ஒன்றும் தேவும் என்ற நான்காமதில் திருக்குருகூரதனுள் நின்ற ஆதிப்பிரான் என்றும் பொலிந்து நின்ற பிரான் என்றும் பேசுகையாலே அர்ச்சாயாம் பரத்வம் முதலிக்கப்படுகிறது. இந்த நான்கு திருவாய்மொழிகளிலுமே எம்பெருமானுடைய ஜகத்காரணத்வத்தை திரும்பத் திரும்ப சோம்பலில்லாமலும் அலுப்பில்லாமலும் அருளிச் செய்வது நோக்கத் தக்கது. காரணம் துத்யேய: என்று வேதம் விதித்ததை நாம் பல்லவியாகக் கொள்ள வேண்டும். திருக்குருகூரில் எம்பெருமான் தானே காரணப் பொருள் என்பதை ப்ரஸித்தப்படுத்திக் கொண்டு ஆதிநாதன் என்ற பெயருடன் விளங்குகிறான். எது காரணப் பொருள் என்பதை சாஸ்த்ரம் கொண்டு அறிவது சிரமம். அந்த கஷ்டம் எதுவுமில்லாமல் "நாமே காரணப் பொருள்" என்று நாட்டாரெல்லாம் கண் கூடாகக் கண்டு கொள்ளும்படி காட்சி தருகிறானிங்கு நின்றவாதிப்பிரான் நிற்க மற்றைத் தெய்வம் நாடுதிறே! என்று, "ஸர்வஸ்மாத்மபரனான ஸர்வேச்வரன் எலியனாய் நம்மைக் கடைத்தேற்றுகைக்கென்றே ஸ்தாவரப்ரதிஷ்டையாய் வந்து நிற்க, இவனைப் பணிந்து வாழ்ச்சி பெறாமல் மற்றைய சிறு தெய்வங்களின் கால்களில் விழுந்து சீரழிந்து போகிறீர்களே!" என்று நம்மைத் தட்டி எழுப்புவதாய் அமைந்துள்ளது இத் திருவாய்மொழி.

## ஆழ்வார்கள்

ஆழ்வார்கள் பதின்மர்(10 பேர்), அவர்கள் பொய்கையாழ்வார், பூதத்தாழ்வார், பேயாழ்வார், திருமழிசையாழ்வார், நம்மாழ்வார்,

குலசேகராழ்வார், பெரியாழ்வார், தொண்டரடிப் பொடியாழ்வார், திருப்பாணாழ்வார், திருமங்கையாழ்வார், ஆண்டாளையும், மதுரகவிகளையும் சேர்த்துக் கொண்டு, ஆழ்வார்கள் பன்னிருவர் (12 பேர்) என்றும் சொல்வர்.

எம்பெருமானுடைய திருக்கல்யாண குணங்களிலேயே எப்போதும் ஆழ்ந்து இருந்ததால், இவர்களுக்கு ஆழ்வார்கள் என்று பெயர் ஏற்பட்டது. ஆழ்வார்களுக்குள் நம்மாழ்வார் மிக முக்கியமாக இருப்பவர். தம்முடைய ப்ரபந்தத்தின் மூலமாக ப்ரபத்தியின் பெருமையை விளக்கிக் கூறினார். தாமும் ப்ரபத்தியை அநுஷ்டித்தார். அதனால் ப்ரபத்தி அல்லது பரந்யாஸம் செய்து கொள்பவர்களுக்கு நம்மாழ்வார்தான் தலைவர், மூலபுருஷர். அதனால் நம்மாழ்வார் ப்ரபன்ன ஸந்தான கூடஸ்தர் என்று அழைக்கப்படுகிறார். இவர் அருளிச் செய்த திருவாய் மொழியின் வ்யாக்யானம் பகவத் விஷயம் என்று அழைக்கப்படுகிறது. முக்கியமாக காலக்ஷேபம் பண்ணவேண்டிய க்ரந்தம் இது.

## குருபரம்பரை

நமக்கெல்லாம் முதல் ஆசார்யன் (ஆதிகுரு) நாராயணன் தான். அடுத்தபடியாகப் பெரியபிராட்டி என்று சொல்லப்படும் மஹாலக்ஷ்மி. அதற்குப்பின் விஷ்வக்ஸேனர் (ஸேனை முதலியார்) அடுத்த ஆசார்யன் ஸ்ரீ வைகுண்டத்தில் எம்பெருமானுடைய ஸேவைக்குத் தலைவராக இருருப்பதால் ஸேனை முதலியார் என்று அழைக்கப்படுகிறார்.

அடுத்த ஆசார்யர் நம்மாழ்வார் ஆவார். விஷ்வக்ஸேனர் ஸ்ரீ வைகுண்டத்திருந்து எழுந்தருளி நம்மாழ்வார்க்கு உபதேசம் செய்தார். நம்மாழ்வாவாருடைய சிஷ்யர் நாதமுனிகள். இவர் நம்மாழ்வாருக்கு நெடுங்காலத்துக்குப் பிறகு தோன்றினார். ஆகிலும் யோகத்தால் நம்மாழ்வார் நாதமுனிகளுக்கு உபதேசித்து அருளினார்.

நாதமுனிகளுடைய சிஷ்யர் உய்யக் கொண்டார். அவருடைய சிஷ்யர் மணக்கால் நம்பி அவருடைய சிஷ்யர் ஆளவந்தார். இவர் நாதமுனிகளின் திருப்பேரன், ஆளவந்தாருடைய சிஷ்யர் பெரியநம்பி, அவருடைய சிஷ்யர் ஸ்ரீபாஷ்யகாரர் என்று சொல்லப்படும் ராமானுஜர்.

## ஸ்ரீபாஷ்யகாரர்:

இந்தக் கலியுகத்தில் நம் ஸம்ப்ரதாயத்தை திடமாக நிலை நிறுத்தியவர் ஸ்ரீபாஷ்யகாரர் எனப்படும் ராமானுஜர். இவருக்கு யதிராஜர், எம்பெருமானார், உடையவர் என்று பல திருநாமங்களும் உண்டு. ஸ்ரீபாஷ்யகாரர் இந்த

பூலோகத்தில் 120 வருஷங்கள் எழுந்தருளி இருந்தார். அவருடைய காலம் கி.பி.1017–1137.

ஸ்ரீபாஷ்யகாரர் அருளிச் செய்த க்ரந்தங்கள் 9 நவரத்தினம் போன்றவை இவை அவையாவன:– (1) ஸ்ரீபாஷ்யம் – வ்யாஸரின் ப்ரஹ்ம ஸூத்ரத்துக்கு உரை. (2)கீதா பாஷ்யம் – பகவத் கீதைக்கு உரை. (3) வேதார்த்த ஸங்க்ரஹம் – வேதத்தில், உபநிஷத்துக்களில், முக்கியமான பகுதிகளின் அர்த்தங்கள் (4) வேதாந்த தீபம் – வ்யாஸரின் ப்ரஹ்ம ஸூத்ரத்துக்குச் சுருக்கமான உரை (5) வேதாந்தஸாரம் – ப்ரஹ்ம ஸூத்ரத்துக்கு இன்னும் ஒரு சுருக்கமான உரை (6) சரணாகதிகத்யம் (7)ஸ்ரீரங்ககத்யம்(8)ஸ்ரீவைகுண்டகத்யம் (9)நித்யம் (ஸ்ரீ வைஷ்ணவன் தினந்தோறும் அனுஷ்டிக்க வேண்டியது பற்றிச் சொல்கிறது)

வ்யாஸரின் ப்ரஹ்ம ஸூத்ரத்துக்கு ராமானுஜர் அருளிச் செய்த பாஷ்யம் (உரை), பெருமதிப்புடன் "ஸ்ரீபாஷ்யம்" என்றே கூறப்படுகிறது. அதை அருளிச் செய்ததால், ராமானுஜரும் ஸ்ரீபாஷ்யகாரர் என்றே அழைக்கப்படுகிறார்.

நம் ஆசார்யர்களுக்குள் நடுநாயகமாக விளங்குபவர் ஸ்ரீபாஷ்யகாரர். ஆசார்யர்களாகிற ரத்னங்களால் விளங்கும் ஒரு ரத்னமாலை நமது குருபரம்பரை அந்த ரத்னமாலையில் நடுநாயகமணியாக விளங்குகிறார் ஸ்ரீபாஷ்யகாரர்.

மற்ற மதங்கள் கூறும் தவறான அர்த்தங்களைக் கண்டித்தும், நம் ஸித்தாந்தத்தின் உண்மைப் பொருளை விளக்கியும், நம் ஸித்ததாந்தத்துக்கு ஒரு வேலியாக விளங்கினார்.

இந்த குரு பரம்பரையை விளக்கும் ஸ்ரீதேசிகன் ஸ்ரீஸூக்தி.

என் உயிர்தந்தளித்தவரைச் சரணம் புக்கு
யான் அடைவே அவர் குருக்கள் நிரை வணங்கிப்
பின் அருளால் பெரும்பூதூர் வந்த வள்ளல்
பெரிய நம்பி ஆளவந்தார் மணக்கால் நம்பி
நன்னெறியை அவர்க்குரைத்த உய்யக் கொண்டார்
நாதமுனி சடகோபன் சேனைநாதன்
இன்னமுதத் திருமகள் என்றிவரை முன்னிட்டு
எம்பெருமான் திருவடிகள் அடைகின்றேனே.

இந்த பாசுரத்தை தினமும் சொல்லி, குருபரம்பரையை தியானம் செய்ய வேண்டும்.

## வைஷ்ணவனின் பாஹ்ய லக்ஷணங்கள்

ஸ்ரீ வைஷ்ணவர்கள் அவசியம் அறிந்து அதன்படி நடப்பதற்காக ஸ்ரீவைஷ்ணவனின் பாஹ்ய லக்ஷணங்களை வரிசைப்படுத்தி அறிவிக்கும் ஒரு ச்லோகம்.

யேகண்டலக்ந துலஸீநளிநாக்ஷ மாலா:
யேபாஹுமூலே பரிசிஹ்நித சங்கசக்ரா:
யேலலாட பலகேலஸதூர்த்வ புண்ட்ரா:
தே வைஷ்ணவா: ஸததமாசு பவித்ரஸந்தி

"பைங்கமலத்தண் தெரியல் பட்டர்பிரான்" என்று திருப்பாவையில் பெரியாழ்வார் வருணிக்கப்படுகிறார். தாமரை மணிமாலை, துளஸி மணிமாலை இவற்றைக் கழுத்திலணிவது ஸ்ரீவைஷ்ணவ லக்ஷணம் பெருமாள் சாத்திக்களைந்த "பவித்ரம்" என்னப்படும் பட்டுநூல் மாலைகளையும் அணிவர் வைணவப் பெரியோர்கள். கைகளின் மேல் பாகங்களில் பொறிக்கப்பட்ட எம்பெருமானின் திருவாழி திருச் சங்கங்களின் அடையாளம் இன்னொரு லக்ஷணமாகும். இதுவே திருவிலச்சினை என்பது நெற்றியிலும், உடலில் உசித ஸ்தானங்களிலும், நடுவில் ஸ்ரீசூர்ணரேகையுடன் கூடின ஊர்த்வபுண்ட்ரங்களை அணிவது மிக முக்கியமான லக்ஷணம்.

## பஞ்சஸம்ஸ்காரம்

ஆசார்யஸ் ஸ ஹரிஸ் ஸாக்ஷாத் என்கிறபடி ஆசார்யனானவன் எம்பெருமானின் ஸாக்ஷாவதாரம் என்ற நம்பிக்கை அவசியம் வேண்டும். அவரவர் குலத்திற்கு வாய்த்துள்ள ஆசாரியனை அறிந்து மேற்சொன்ன விச்வாஸத்துடன் அவரைஅணுகி ப்ரார்த்தித்துப் பஞ்ச ஸம்ஸ்காரங்களைப் பெற வேண்டும். ஸமாச்ரயணம் என்று சொல்லப்படும் இந்த பஞ்சஸம்ஸ்காரம் ஒவ்வொரு வைஷ்ணவனுக்கும் வைஷ்ணவ ஜன்மாலை அமைத்துத் தருகிறது.

பஞ்சஸம்ஸ்காரம் என்பது (1) தாபம் (2) புண்ட்ரம், (3) நாமம் (4) மந்த்ரம், (5)யாகம் என்ற ஐந்து ஸம்ஸ்காரங்களை உள்ளடக்கியது. தாபம் என்பது திருவாழி திருச்சங்கு அடையாளங்களை அக்நி மூலம் பெறுதல்; புண்ட்ரமாவது திருமண் காப்பணிதல்; நாமமாவது பெயர் சூட்டப் பெறுவது; மந்த்ரமாவது ரஹஸ்யமான ஸ்ரீவைஷ்ணவ மந்த்ரங்களை ஆசார்யனிடம் உபதேசமாகப் பெறுதல்; ப்ரபத்தி என்பது இதில் அடங்கி விடுகிறது. யாகம் பகவதாரதனத்திற்கு யோக்யராதல்.

## தாபஸம்ஸ்காரம்

தாபஸம்ஸ்காரத்தில் ஆசாரியன் திருவாழி திருச்சங்கரங்களின் அடையாளங்களை அதற்கென்று வளர்த்த பவித்ரமான ஹோமாக்நியில் காய்ச்சி அதை சிஷ்யனின் புஜங்களில் ஒற்றி அடையாளம் பண்ணுகிறார். தீயில் பொலிகின்ற செஞ்சுடராழி திகழ் திருச்சக்கரத்தின் கோயிற் பொறியாலே ஒற்றுண்டு நின்று குடிகுடியாட் செய்கின்றோம் என்று பெரியாழ்வார் திருவாக்கு,பவித்ரமித்யக்நி! ப்ராஹ்மணஸ்ஸாயுஜ்யமாப்நோதி ஸாலோகதாமாப்நோதி! என்று ச்ருதி. இது போல பல வசனங்களுண்டு.தீயிற் பொலிகின்ற திருவாழி திருச்சங்குகளாலே ஒற்றுண்டவன் பரம புருஷனின் பதத்தை ஸ்ரீ வைகுண்டத்தை நிச்சயமாக அடைகிறான் என்கிறது ஸாம வேதம். இப்படி ஆசார்யன் ஸுதர்சன பாஞ்சஜந்ய சின்னங்களால் அடையாளம் செய்து வைப்பது ஒரு முக்கியமான வைதிக வைஷ்ணவ ஸம்ஸ்காரம் ஆகும்.

## புண்ட்ரஸம்ஸ்காரம்:

திருமண்காப்பே ஒருவன் வைஷ்ணவன் என்று எளிதில் அறியும்படியான வெளி அடையாளமாக உள்ளது. வெளியிலிருந்தே இது நமக்குப் பலவிதங்களில் காப்பாக அமைந்துள்ளது விளங்கும். புண்ட்ரம் என்று மேல் நோக்கிச் செல்லும் ரேகைகளைக் சொன்னபடி, நம்மை இவை ஊர்த்வ – மேலான உலகங்களுக்கு நடத்தக் கூடியவை. திருமண் என்பது 'ச்வேதம் ருத்திகா'' எனப்படும் வெண்மையான களிமண்ணை இடைவெளியுடன் ஹரிபாதாகாரமாக ஊர்த்வபுண்ட்ரத்தை இம்மண்ணினால் அணிய வேண்டும் என்பதற்கு பல ப்ரமாணங்கள் உண்டு.

ஹரிபாதாகாரமான ரேகைகளுக்கு (எம்பெருமான் திருவடிகளின் வடிவம் போன்றது) நாஸிகாமூலத்தில் ஜமலபீடம் அமைக்க வேண்டும். (நாஸிகா மூலம் – மூக்கின் அடிபாகம் புருவ மத்திக்குக்கீழ்) இடைவெளியில் மத்தியில் சிவப்பு நிறமுடைய ஸ்ரீசூர்ணம் அணிய வேண்டும். ஸ்ரீ என்பதால் ஸகலமங்களங்களும் உண்டாகும் என்பது சொல்லாமலேயே விளங்கும். திருமண் ஸ்ரீசூர்ணம் இவை சேர்ந்த மூன்று ரேகைகளை திருமண் காப்புஎன்றும் ஊர்த்வபுண்ட்ரம் என்றும் அழைக்கின்றோம்.

ஸ்ரீபாஞ்சராத்ரம் முதலான சாஸ்த்ரங்களில் ஊர்த்வபுண்ட்ரத்தை நமது உடலில் 12 இடங்களில் எம்பெருமானின் முக்யமான பன்னிரு திருநாமங்களைச் சொல்லி அணிய வேண்டுமென விதிக்கப்பட்டுள்ளது.

அப்படியே பிராட்டியின் திருநாமங்களைச் சொல்லி ஸ்ரீசூர்ணம் அணிய வேண்டும். குழந்தைப் பருவத்திலிருந்தே நெற்றியில் திருமண் காப்பணிவித்து பெரியோர்கள் ரக்ஷையைச் செய்வித்தாலும், முதன் முதலில் ஆசார்யன் இதற்கான மந்த்ரங்களை உபதேசித்து நமது உடலில் தன் திருக்கையால் அணிவிப்பது ஒரு ஸம்ஸ்காரமாக அமைந்துள்ளது. எம்பெருமானின், பிராட்டியின், திருநாமங்களைச் சொல்லி அணிவதால் ஊர்த்வ புண்ட்ரம் "நாமம்" என்ற சொல்லாலும் அழைக்கப்படுகிறது. "கேசவன் தமர்" என்ற திருவாய் மொழியில் இந்தப் பன்னிரு திருநாமங்களும் நமக்கு உபதேசமாகக் கிடைக்கின்றன. இதன் ஈட்டின் ப்ரவேசத்தில் "ஆழ்வார் ஸ்ரீவைஷ்ணவன் ஆனேன்" என்கிறார். "வைஷ்ணவத்வ சின்னமிறே திருத்வாதசநாமம்" என்று எம்பார் திருவாக்காகக் காண்கிறது. ஒவ்வொரு திருமண் காப்பும் எம்பெருமானின் ஒவ்வொரு ஆகாரத்தைக் குறிக்கிறது. அவனே நம் உடலிருந்து நம்மை ரக்ஷிக்கிறான்.

பன்னிரு திருநாமங்களையும் தினமும் அணிய வேண்டும். இதுவே பெரியோர்களின் ஆசாரமும் கூட திருமண் காப்பணிவதால் ஆத்மக்ஷேமம் மட்டுமல்ல சரீர க்ஷேமமும் ஏற்படுகிறது. இது விஞ்ஞான ரீதியான உண்மை. நெற்றியிலுள்ள திருமண் காப்பைப் பார்த்தே ஒருவன் ஸ்ரீவைஷ்ணவன் என்று அறிய முடியும்.

திருமண்காப்பணிபவன் முக்தியடைகிறான் என்பதற்கு ப்ரமாணம் ஹரே: பாதாக்ருதிம் ஆத்மநோஹிதாய மத்யேச் சித்ர மூர்த்த்வ புண்ட்ரம் யேதாரயதி ஸ பரஸ்யப்ரியோபவதி: ஸமுக்தவத் பவதி என்னும் வேதவாக்கியம். "எவன் ஆத்மக்ஷேமத்திற்காக ஹரியின் திருவடிகளையொத்த ஊர்த்வபுண்ட்ரங்களை மத்தியில் இடைவெளியுடன் அணிகிறானோ அவன் பரமபுருஷனுக்கு ப்ரியனாய் தூய்மை யுற்றவனாய் மோக்ஷத்துக்கு ஏற்றவனாக ஆகிறான்" என்கிறது இந்த ப்ரமாணம்.

## நாம ஸம்ஸ்காரம்

நாம ஸம்ஸ்காரமாவது ராமாநுஜதாஸன், ஸ்ரீவைஷ்ணவதாஸன், மதுரகவிதாஸன் போன்ற தாஸ்யநாமத்தை ஆசாரியனால் சூட்டப் பெறுவது. பெரியோர்களை தண்டன் ஸமர்ப்பித்து வணங்கும்போது. அடியேன் ராமாநுஜதாஸன் போன்று தாஸ்ய நாமாவை அவர் காதுபடும்படி சொல்லி வணங்க வேண்டும்.

## மந்த்ர ஸம்ஸ்காரம்

மந்த்ர ஸம்ஸ்காரமாவது திருமந்திரம் அதன் விவரணமான த்வயம், சரமச்லோகங்கள் இவைகளை உபதேசமாகப் பெறுதல், இவற்றின் உள்ளுறை பொருள்களையும் ஆசார்யனிடமிருந்து அறிந்து கொள்ளல் அவசியம். அறிந்து அவ்வர்த்தங்களின்படி ஸ்வரூபமறிந்து அதன்படி நமது மனோபாவத்தையும் வாழ்க்கையையும் அமைத்துக் கொள்ளல் அவசியமானது. இம்மூன்று மந்த்ரங்களுள் த்வயத்தையே ஸதா அநுஸந்தித்து வந்துள்ளனர். நமது ஆசார்யர்கள். த்வயமர்த்தாநு ஸந்தாநேநஸஹ யாவச் சரீரபாதம் அத்ரைவ ஸ்ரீரங்கே ஸுகமாஸ்வ என்று நம்பெருமாள் உடையவருக்கு நியமனம் பண்ணியதாக சரணாகதி கத்யத்தில் காணலாம். மணவாளமாமுனிகளும்.

மந்த்ரரத்நாநுஸந்தான ஸந்ததஸ்புரிதாதரம்
ததர்த்த தத்வநித்யாநஸந்நத்த புலகோத்கமம்

மந்த்ரரத்நமான த்வயத்தை ஸதா அநுஸந்திப்பதனால் துடிப்பது போல அசையும் திருப்பவளத்தை உடையீர். அதன் ஆழ்பொருளைச் சிந்திப்பதனால் மகிழ்ச்சி பொங்கும் திருமேனியையுடையீர்! என்று தினசர்யையில் போற்றப்படுவது காணலாம்.

த்வயத்தை ஆசார்யன் உபதேசிக்கும் போது திரும்பச் சொல்லுவதால் நாம் எம்பெருமான் திருவடிகளில் சரணாகதி பண்ணியவர்களாகிறோம். த்வயத்தின் முன்பாதியினால் எம்பெருமானின் திருவடிகளை பெரிய பிராட்டியைப் புருஷகாரமாகக் கொண்டு புகலாகப் பற்றுகிறோம். பின்பாதியினால் திவ்ய தம்பதிகளின் மகிழ்ச்சிக்குறுப்பாக நித்ய கைங்கர்யம் பண்ணும் பேற்றை யாசிக்கிறோம். எல்லாக் காலங்களிலும் எல்லாவித கைங்கர்யங்களும் (மனம், மெய், வாக்கு இவை கொண்டு செய்பவை) உத்தேச்யமே.

## யாகம்

யாகம் என்பது எம்பெருமானுக்கு திருவாராதனம் ஸமர்ப்பிப்பது., இதை இஜ்யை என்றும் சொல்வர். நம்மை எம்பெருமானிடத்தில் அழைத்துச் சென்று, "இவன் ஸ்ரீவைஷ்ணவன், ராமாநுஜீய:, ராமாநுசனடியான்; இவனை மங்களாசாஸனபரனாக ஏற்று இவன் கையால் திருவாராதனம் கொள்ள வேண்டும் என்று சிபாரிசு செய்து ஏற்றுக் கொள்ளப் பண்ணுகிறார் நமது ஆசாரியர்.

பஞ்சஸம்ஸ்காரம் பெற்றவன் ஸ்ரீவைஷ்ணவ தீக்ஷை பெற்றவனாகிறான். எம்பெருமானாரின் திருவடி ஸம்பந்தம் பெற்று "இவன் நம்மவன்" என்று அபிமானிக்கப் பெற்றவனாகிறான். எம்பெருமானாரடியார் யாவருக்கும் பேறு நிச்சயம் என்று "பேசியிருப்பனகள் பேர்க்கவும் பேராவே" எனப்பட்ட திருவரங்கச் செல்வனுடைய திருவாக்காகும். ஸமாச்ரயணத்தின் போது ஆசார்யனால் பெறும் ஐந்து ஸம்ஸ்காரங்களும் நம்மைத் தூய்மை பெறச் செய்து ஸ்ரீவைஷ்ணவ ஜன்மத்தைத் தருகின்றன.

ஸ்ரீவைஷ்ணவனை எல்லா தேவதைகளும் கௌரவிக்கின்றனர் யமபடர்கள் இவனிடம் வர நடுங்குவார்கள். இவர்கள் மேலான பரமபதத்தையே அடைவார்கள்; ஸகல ப்ரமாணங்களும் இசையும் இந்த ஸம்ஸ்காரங்களை நாம் அடைவது மிகவும் அவசியம். இது பகவதாஜ்ஞையும் கூட.

## ஸ்ரீவைஷ்ணவனின் அகலக்ஷணங்கள்

பிள்ளைஉலகாசிரியர் அருளிச் செய்த முமுக்ஷுப்படி என்னும் ரஹஸ்ய நூலின் த்வரப்ரகரண அவதாரிகையில் முதல் முன்னம் "விலக்ஷண ஸ்ரீ வைஷ்ணவாதிகாரியின் லக்ஷணங்களை ஆச்சர்யமான முறையில் அருளிச் செய்கிறார். இந்த லக்ஷணங்கள் ஒரு நபரிடம் திரண்டு அமைந்திருப்பது மிகவும் அரிதாயிருக்குமாயினும், இவற்றை நாம் அறிந்து, கூடியவரை இவற்றின்படி நம் ஒழுக்கத்தை அமைத்துக் கொள்ளுதல் நலம். லோகாசார்யரின் ஸூத்ரம் (முமு116) வருமாறு

"புறம்புண்டான பற்றுக்களையடைய வாஸனையோடே விடுகையும், எம்பெருமானையே தஞ்சமென்று பற்றுகையும், பேறுதப்பாதென்று துணிந்திருக்கையும், பேற்றுக்கு த்வரிக்கையும், இருக்கும் நாள் உகந்தருளின நிலங்களிலே ப்ரவணனாய் குணாநுபவ கைங்கர்யங்களே போது போக்ககையும், இப்படியிருக்கும் ஸ்ரீவைஷ்ணவர்களேற்றம் அறிந்து உகந்திருக்கையும், திருமந்த்ரத்திலும், த்வயத்திலும் நியதனாகையும், ஆசார்யப்ரேமம் கனத்திருக்கையும் ஆசார்யன் பக்கலிலும் எம்பெருமான் பக்கலிலும் க்ருதஜ்ஞனாய்ப் போருகையும், ஜ்ஞானமும் விரக்தியும் சாந்தியுமுடையனாயிருக்கும் பரமஸாத்விகனோடே ஸஹவாஸம் பண்ணுகையும் வைஷ்ணவாதிகாரிக்கு அவச்யாபேக்ஷிதம்."

ஸ்ரீ வைஷ்ணவனுடைய மனப்பான்மையும் செயலும் அமைய வேண்டியபடியை விளக்குவது இந்த ஸூத்ரம். இங்கு பத்து விஷயங்கள் சொல்லப்படுகின்றன.

இந்த அனுஷ்டானங்களை நம் ஆசார்யர்கள் எவ்வாறு கொண்டிருந்தார்கள் என்பதை அவர்களுடைய வாழ்க்கையில் நடந்த சில நிகழ்ச்சிகளைக் கொண்டு விளக்குவோம்.

## 1. புறம்புண்டான பற்றுக்களை வாஸனையோடே விடுகை

ஆடி மாதத்தில் உத்திராட நக்ஷத்தில் ஸ்ரீமந்நாத முனிகளின் திருக்குமாரரான ஈச்வர முனிக்குக் குமாரராய் அவதரித்தவர் ஸ்ரீ ஆளவந்தார். இவர் அரசனுடைய ஆஸ்தான வித்வானான ஆக்கியாழ்வானை வாதத்தில் வென்றதால் அரசன் அளித்த பாதி ராஜ்யத்தைக் கொண்டு அதிஸந்துஷ்டராய் வாழ்ந்து வந்தார். நாத முனிகளின் சிஷ்யரான உய்யக் கொண்டாருடைய நியமனப்படி அவருடைய சிஷ்யரான மணக்கால்நம்பி நமக்கு உபதேசிக்கப்பட்டிருக்கும் ஸ்ரீ வைஷ்ணவ தர்சனத்தை ஆளவந்தாருக்கு உபதேசிக்க ப்ராப்த காலத்தை எதிர்பார்த்திருந்தார்.

அப்போது ஆளவந்தார் அரசருக்குரிய அரண்மனை ஆடம்பரங்களுடனும் கட்டுக் காவலுடனும் இருந்ததால், சுலபமாக உள்ளே சென்று அவரைக் காண முடியாமற் போகவே கவலை கொண்டார். பின்னர், ஆளவந்தாருக்குத் தூதுவளைக் கீரை மிகவும் விருப்பம் என்பதை விசாரித்துத் தெரிந்து கொண்டு ஒவ்வொரு நாளும் அக்கீரையைச் சமையலுக்குக் கொண்டு வந்து கொடுத்து வந்தார். இவ்வாறு ஆறு மாதங்கள் கடந்தன. ஆளவந்தாரிடமிருந்து எந்தவித மாறுதலும் தெரியவில்லை. அதனால் இரண்டு மூன்று நாள்கள் கீரையைக் கொடுப்பதைத் தவிர்த்தார்.

தினசரி உணவில் இருக்கும் தூதுவளைக்கீரை சில நாள்களாக இல்லாததைக் கண்ட ஆளவந்தாரும் சமையற்காரர்களைக் கூப்பிட்டு வழக்கம் போல தூதுவளைக் கீரையை ஏன் சமைக்கவில்லை என்று கேட்டார். அதற்கு சமையற்காரர்கள் ஆறு மாத காலமாக ஒரு பிராம்மணர் கொண்டு வந்து கொடுத்துக் கொண்டிருந்தார். இரண்டு நாளுண்டு தவிர்த்தது என்றார்கள். ஆயின் அவர் மறுபடியும் வந்தால், என்னிடம் அழைத்து வாருங்கள் எனப் பணித்தார்.

மணக்கால் நம்பிகளும் மறுபடியும் கீரையைக் கொண்டு போய் பரிசாரகரிடம் கொடுத்த போது ஆளவந்தாருடைய கட்டளைப்படி அவரை ஆளவந்தாரிடம் அழைத்துச் சென்றனர். நம்பிகளைப் பார்த்த ஆளவந்தார் நமஸ்கரித்து, "தங்களுக்கு என்ன வேணும்? பணம் வேணுமா? பசு வேணுமா?

கிராமம் வேணுமா?'' என வினவினார். நம்பியும், ''எமக்கு எதுவும் வேண்டாம். தங்கள் முன்னோர் எம்மிடம் சேமித்து வைத்துப் போன நிதியைத் தங்களிடம் நான் ஒப்படைக்கும் வரை தடையின்றித் தாங்களைக் காணும்படி செய்ய வேண்டும்'' என்றார். அப்படியே அவரும் செய்ய, நம்பியும் ஆளவந்தாருக்குக் கீதையின் செம்மைப் பொருள் தெரியும்படி பல நாள்கள் உபதேசித்து இறுதியில் சரமச்லோகார்த்தத்தையும் பரக்க உபதேசித்தார். இதைத் தெளிந்த ஆளவந்தாரும் பால் முற்ற முற்றத் தலைசாயும் பயிர்போலக் கீதையின் பொருள் நெஞ்சில் படப்பட ஆணவம் தலை சாய்ந்து உலகியலில் பற்று நீங்கி, வெறிதே அருள் செய்யும் மஹோபகாரகனான பெருமாளைச் சேவிக்க வேணுமென்னும் ஆசை மிகக் கொண்டார். மணக்கால் காக்கப்படும் பெருநிதியைக் காண வாரீர் என்று அவரை அழைத்துக் கொண்டு ஸ்ரீரங்கம் சென்று பெரிய பெருமாளைக் காட்டிக் கொடுத்து, ''இவரே நம் முன்னோர் தேடி அடியேனிடம் சேமித்து வைத்துப் போன நிதி!'' என்றார். அரங்கநாதனும், ''கரியவாகிப் புடைபரந்து மிளிர்ந்து செவ்வரியோடி நீண்ட அப்பெரியவாய கண்களோடு'' சேவை சாதித்து ஆளவந்தாரை ஆட்கொண்டார். அத்திருமேனியைச் சேவித்து அதுவே தமக்குத் தஞ்சமாகவும் பேறாகவும் கொண்டு, அரசபோக வாழ்க்கை, திரண்ட சொத்துக்கள், சுற்றத்தார் அனைத்தையும் துறந்து துறவறத்தை மேற் கொண்டு காஷாய த்ரிதண்டங்களை ஏற்றுக் கொண்டார். ஆளவந்தார் மேலும் திராவிட வேதங்களை நம்பிகளிடமிருந்து பெற்றுத் திருவரங்கம் திருப்பதியே உறைவிடமாகக் கொண்டு சிஷ்ய ஸம்பத்துடன் சமயத்தை வளர்த்துக் கொண்டிருந்தார்.

## பிள்ளையுறங்காவில்லி தாஸர்

இவர் உறையூரில் சோழ ராஜாவிடம் மெய்காப்பாளராக இருந்தார். அவருக்குப் பொன்னாச்சியார் என்ற மனைவி மிகவும் கண்ணழகு படைத்தவளாக இருந்தாள். கண்ணழகில் ஆழ்ந்த பிள்ளையுறங்காவில்லி தாஸர் அவளைப் பிரிய மனமில்லாமல் ஊழியத்துக்குப் போகும் போதும் உடன் அழைத்துச் செல்வது வழக்கம். ஒருசமயம் எம்பெருமானார் காவேரியில் நண்பகலில் சீடர்களுடன் இருக்கும் போது அச்சுடும் வெயிலில் தாஸர் தம் மனைவிக்கு வெயிலால் தாபம் உண்டாகமலிருக்குமாறு குடை பிடித்தும் நடைபாவாடை இட்டும் அழைத்து வந்தார். இந்நிலையைக் கண்ட எம்பெருமானார் "இப்படியொரு பெண்பித்தனா?" எனக் கூறித் தம் சீடரிடம் அவரை அழைத்து வரச் சொன்னார். வந்தடைந்த அவரைப் பார்த்து எம்பெருமானார், 'இதென்ன நீர் செய்வது!" என்று கேட்க, அவரும் இவள்

கண்ணழகில் ஈடுபட்டுச் செய்கிறேன்' என்று பதில் கூறினார். ஸ்வாமி, "இது அழிந்தோடு என்றோ! அழியாத கண்ணழகைக் காட்டினால் என் செய்வீர்" என்ன, "அதற்கு அடிமைப்படுவேன்' என்று தாஸர் பதில் சொன்னார். அவரை ஸ்வாமி அழைத்துப் போய் பெரிய பெருமாளை சேவிக்கப் பண்ணினார். பெருமாளும் தம்முடைய செவ்வரியோடி நீண்டு பரந்த அப்பெரியவாய கண்களின் அழகைக் காட்டியருளப் பிள்ளையுறங்காவில்லி தாஸரும் அவ்வழகில் ஆழ்ந்து அழகிய மணவாளரைப் பிரியாதவராகி, எம்பெருமானா ரின் திருவடிகளையடைந்து சீடராகி, ஆசார்யரையும் பிரியாதவராகி எம்பெருமானின் திருவடிகளையடைந்து சீடராகி, ஆசார்யரையும் பிரியாதவராகி வாழ்ந்து வந்தார். எம்பெருமானாரும் அவரைப் பூரணமாகக் கடாக்ஷித்தார். அதனால் அவருக்கு ஞான பக்தி வைராக்யங்கள் வளர்ந்தன.

## விபீஷணன்

ஸ்ரீராமன் படையுடன் வந்து விட்டான். இனி நாம் செய்ய வேண்டியது என்ன என்று ராவணன் மந்திராலோசனை செய்ய முற்பட, இதையே தக்க தருணமாகக் கொண்ட விபீஷணன், ராவணனுக்கு ஏற்பட்ட இவ்வழிவு காலத்தைப் போக்கும்படியான மேலான நல்வார்த்தைகளைச் சொல்லச் செய்தேயும், இது இராவணனுக்குப் பொறுக்க வொண்ணாததாயிருப்பதைப் பார்த்தவுடன் இவனிருக்கும் இடமும், இவன் ஸம்பந்தமும் விலக்கத்தக்கது. நல்லற மூர்த்தியான ராமபிரானிருக்குமிடமே நாம் சென்று சேரத்தக்கதுஎன்று நினைத்துப் புறப்பட்டு எரிகிற வீட்டிலிருந்து துடித்துக் கொண்டு ஒருவாரைப் போலே ராமனிருக்குமிடந்தேடி ஓடினான். பரமபுருஷனின் நினைவற்ற மக்களிடையேயிருக்கும் வாழ்வைவிட தீக்கொழுந்து விட்டெரியும் கூட்டினுள் வாழ்வது நன்று என்றும் காட்டுகிறார் பெரியவாச்சான் பிள்ளை. தீப்பற்றியெரியும் வீட்டிலிருந்து புறப்பட்டல்லது நிற்க முடியாதது போலே ராவண கோஷ்டியில் நிலை நிற்கமாட்டாதபடி தன் மனைவி, சுற்றத்தார்,அரச போக வாழ்க்கை, சொத்துக்கள் அனைத்தையும் துறந்து ஸ்ரீராமனைச் சரணடைய ராமனும் அவனை ஏற்றுக் கொண்டது அனைவரும் அறிந்ததே.

## எம்பெருமானார்

தன்னுடைய பகவத், பாகவத கைங்கர்யங்களுக்கு அனுகூலமாக இராத தம் தேவிகளை எம்பெருமானார் துறந்து சந்யாஸத்தை மேற்கொண்டார்.

ஒருநாள் ராமானுஜர் எண்ணெய் தேய்த்துக் கொள்ள வேண்டிய தினம் அன்று வழக்கம் போல் எண்ணெய் தேய்க்கும் ஸ்ரீவைஷ்ணவர் வந்தார். அவர்

ராமாநுஜரிடம் தனக்கு மிகவும் பசியாக இருப்பதாயும், ஆஹாரம் ஏதாவது கொடுத்தால் சாப்பிட்டுவிட்டு எண்ணெய் தேய்ப்பதாகவும் சொன்னார். உடனே ராமாநுஜர் தமது தேவிகளை அழைத்து'ஏதாவது பக்ஷயமிருந்தால் இந்த ஸ்ரீவைஷ்ணவருக்குக் கொடு, மிகவும் பசிக்கின்றது என்கிறார்' என்றார். தேவிகள்'இன்று கொடுப்பதற்கு ஒன்றுமில்லை'என்று பதிலுரைத்துச் சென்று விட்டாள். பின்பு ராமாநுஜர் உள்ளே சென்று கையலம்பி பாத்திரங்களைப் பார்க்க ஒரு பாத்திரத்தில் பக்ஷயங்கள் இருக்கக் கண்டு அவைகளை அந்த வைஷ்ணவருக்குக் கொடுத்து பசியாரச் செய்து பத்னியையும் கடிந்து கொண்டார்.

பின்பொரு ஸமயம் ராமாநுஜர் ஏதோ கார்யமாக ஸ்ரீபெரும்புதூர் போக நேரிட்டது. ஸ்ரீ ஆசார்யன் நியமனம் பெற்றுச் சென்றார். அப்பொழுது கிணற்றில் ஜலம் எடுக்கும் போது, பெரிய நம்பிகள் தேவிகளுக்கும், ராமாநுஜரின் தேவிகளுக்கும் அல்ப விஷயமாக (ஒரு குடத்தின் விஷயமாக) சண்டையுண்டாயிற்று. இவ்விஷயத்தைப் பெரிய நம்பிகள் கேட்டருவி தம்முடைய தேவிகளை கோபித்துக் கொண்டார். 'இனி நாம் இங்கிருப்பது உசிதமில்லை' என்றெண்ணி ராமாநுஜர் ஊரிலிருந்து திரும்பி வருவதற்குமுன் அவரிடம் சொல்லாமலேயே தம் தேவிகளை அழைத்துக்கொண்டு திருவரங்கம் பெரிய கோவிலுக்கு எழுந்தருளினார். ஸ்ரீபெரும்புதூரிலிருந்து திரும்பி வந்த ராமாநுஜர் தமது ஆசார்யரான பெரிய நம்பிகளைக் காணாமல் அதிர்ச்சியடைந்தார். தமது மனைவியைக் கேட்டார். கிணற்றடியில் நடந்த சண்டையையும், அதையறிந்த நம்பிகள் தமது தேவிகளை கோபித்துக் கொண்டதையும் சொல்லி இனி நாம் இங்கு இருப்பது உசிதமில்லை என்று சொல்லி எழுந்தருளிவிட்டார்' என்று பத்னி பதிலுரைதிதாள். கேட்கப் பிடிக்காத இவ்வார்த்தைகளைக் கேட்ட ராமாநுஜருக்கு உண்டான வருத்தத்திற்கும் கோபத்திற்கும் அளவேயில்லை. மனைவுயை மிகவும் கண்டித்தார். 'இனி நீ இவ்விடத்தில் வசிக்க வேண்டாம். உன் பிறந்தகம் போய்ச் சேர்ந்திடு. முன்பு திருக்கச்சி நம்பிகள் வீற்றிருந்த இடத்தை கோமயமிட்டு சுத்தி செய்தாய், பசி என்ற வைஷ்ணவனுக்கு உண்ண உணவில்லை என்று சொல்லி பாகவதாபசாரப்பட்டாள். மூன்றாவதாக பெரிய நம்பி தேவிகளை ஆசார்ய பத்னி என்கிற கௌரவம் கொஞ்சமுமின்றி சண்டையிட்டு அஸஹ்யாபசாரப் பட்டுவிட்டாய்' என்று கோபித்து ஸொத்துக்கள் யாவற்றையும் கொடுத்துப் பிறந்தகம் அனுப்பி விட்டார்.

ப்ரதி கூலையாயிருக்கிற பார்யையை விட்ட (இல்லறத்தை விட்ட) நாம் ஸந்யாஸம் பண்ணிக் கொள்வது நல்லது என்று எண்ணினார் ராமாநுஜர்.

## கூரத்தாழ்வான்

கூரத்தை ஸ்ரீவத்ஸாங்கர் என்றும் திருநாமமுடைய கூரத்தாழ்வான் நிர்வாகம் செய்துவந்தார். அவர் வரையாது வழங்கும் வள்ளலாக வாழ்ந்து வந்தார். ஒரு சமயம் வழக்கம் போல் ஆழ்வானின் அடையா நெடுங் கதவை, வேண்டுவோர்க்கு வேண்டுவன கொடுத்து அடைக்கும் போது இரவு நெடு நேரமாயிற்று. அடைக்கப்பட்ட கதவின் மணியோசை நெடுந்தூரம் கேட்டது. அச்சமயம் காஞ்சியில் ஸந்நிதியில் பேரருளாளனும் பெருந்தேவித் தாயாரும் தனியாக உரையாடிக் கொண்டிருந்தனர். தாயாரின் காதில் கூரத்துக் கதவின் மணியோசை ஒலித்தது. பிராட்டி அவ்வோசையின் காரணத்தைப் பெருமாளிடம் கேட்க, "கூரத்தாழ்வானுடைய நெடுங்கதவு வறியவர்களுக்கு வழங்குதல் இப்போது தான் முடிந்து அடைக்கப்படுகிறது. அதன் ஓசை தான் இது" என்று பெருமாள் பதில் கூறினன். இதனைப் பின்னர் உணர்ந்த கூரத்தாழ்வான், "ஐயோ! உபய விபூதியையும் தனக்கு ஐச்வர்யமாக உடைய தாயார் மதிக்கும் படியோ செல்வச் செருக்கால் வாழ்வது?" என்று தம் உடைமை அனைத்தையும் எல்லோர்க்கும் ஈந்து அந்நகரத்தைத் துறந்தார்.

ராமாநுஜர் காஞ்சிபுரத்தை விட்டு ஸ்ரீரங்கம் அடைந்த விஷயம் தெரிந்ததும், அவரும் ஸ்ரீரங்கம் நோக்கிப் புறப்பட்டார். காடு குறுக்கிட்டது. இரவு நேரம், பத்னியாகிய ஆண்டாள் ஆழ்வானிடம் வழியில் திருடர் பயமுண்டோ எனக் கேட்க, "மடியில் ஏதேனும் வைத்திருக்கிறாயோ?" என ஆழ்வான் வினவ, 'ஆம், அவசரத்துக்கு உதவும் என்று சுவர்ணவட்டில் ஒன்று கொண்டு வந்தேன்' என்று ஆண்டாள் பதில் கூறினாள். ஆழ்வானும் அதை வாங்கித் தூர எறிந்துவிட்டு, "இப்போது பயமில்லையே!" என்ன, 'இல்லை' என்று ஆண்டாள் உடன் நடந்தாள். ஒற்றுமைத் தம்பதிகளாக,வைராக்ய சீலர்களாக இறுதிவரை வாழ்ந்து வந்தது அனைவருக்கும் தெரிந்ததே.

## பொன்னாச்சியார்

பிள்ளைஉறங்காவில்லிதாசரின் மனைவி தான் பொன்னாச்சியார். இவரும் எம்பெருமானாருடைய சீடராவார். எம்பெருமானாரின் மற்ற சீடர்களுக்குப் பிள்ளைஉறங்காவில்லி தாசரிடத்து பொறாமை இருந்தது. அதனையறிந்த ராமாநுஜர், அவர்களுடைய எண்ணத்தை மாற்ற வேண்டும் என்பதற்காக ஒரு நாடகம் ஒன்றை நடத்தினார். அதாவது மடத்தின் நிதி நிலைமை மிகவும் குறைவாக இருப்பதாகக் கூறி, பிள்ளையுறங்கா வில்லிதாசர்

மிகவும் பணம் வைத்திருப்பதாகவும். அவருக்குத் தெரியாமல் அதை அபகரித்துவாருங்கள் என்று சீடர்களுக்குக் கட்டளையிட்டார். ராமாநுஜர் சொன்னது போலவே அவர்கள் இரவு தாசருடைய வீட்டிற்குச் சென்றனர். அங்கு பொன்னாச்சி மட்டும் கட்டிலில் படுத்திருந்தாள். அவள் கால்களில் நல்ல நகைகளைப் போட்டிருப்பது கண்டு, அதனை அவர்கள் அதனைக் கழற்றி எடுத்துக் கொண்டனர். இதையறிந்த பொன்னாச்சி அவர்கள் மற்றொரு காலில் இருந்த நகையையும் கழற்றிக் கொள்ளட்டுமே என்ற எண்ணத்தினால் காலை மாற்றிப் புரண்டு படுத்தாள். ஆனால் அந்தச் சீடர்களோ அவள் எழுந்து விட்டாள் என்று எண்ணி ஓடிவிட்டனர். பொன்னாச்சி, தன் கணவனான தாசரிடம் நடந்ததைக் கூறினாள். 'ஸ்ரீவைஷ்ணவர்கள் செய்தபடி செய்யட்டும் என்று இருக்க வேண்டிய நீ ஏன் புரண்டு படுத்தாய். அதனால் அன்றோ அவர்கள் மற்ற நகைகளைக் கொள்ளாமலே போய்விட்டார்கள்' என்று கோபித்துக் கொண்டு மடத்திற்கே சென்றுவிட்டார். இவ்வாறு இவர் நடந்து கொண்டதை அறிந்த மற்ற சீடர்கள் தங்களுடைய செயலை நினைத்து வெட்கித் தலை குனிந்தனர்.

## நஞ்சீயர்

பட்டரால் திருத்திப் பணிகொள்ளப்பட்ட வேதாந்திக்கு (நஞ்சீயர்) மனைவியர் இருவர் இருந்தனர். ஒருநாள் ஏழை அந்தணர்கள் சிலர் வந்து பசிக்கு உணவு கேட்க மனைவியர் இருவரும் அவர்களுக்கு உணவு இடாமலே இருந்து விட்டனர். பசித்தவர்களுக்கு உணவிடக்கூடத் தம் மனைவியருக்கு மனம் இல்லாததைக் கண்டு மனம் வருந்திய வேதாந்தி இல்லறத்தைத் துறந்து விடுவது என்று முடிவு செய்தார். தம்முடைய அளவற்ற செல்வத்தை மூன்று பங்காகப் பிரித்து இருபங்குகளைத் தம் மனைவியர் இருவருக்கும் வழங்கி விட்டு மூன்றாவது பங்கைத் தம் ஆசாரியரான பட்டருடைய திருவடிகளில் ஸமர்ப்பித்தார்.

## வேதாந்த தேசிகன்

விஜய நகரத்து அரச குமாரியைப் பிடித்த பிரஹ்மரக்ஷஸ்ஸை ஓட்டிய வித்யாரண்யர் அரசஸபையின் அத்யக்ஷரானார். அப்பொழுது தம்முடைய ஸ்நேஹிதரான தூப்புற்பிள்ளை உஞ்சவ்ருத்தி செய்து தேஹயாத்ரைக்குக் கஷ்டப்பட்டு வருவதை எண்ணினார். அவருக்கு வேண்டிய த்ரவ்ய ஸஹாயத்தை அரசனிடம் சொல்லிச் செய்ய நினைத்தார். உடனே ராஜஸபைக்கு வரும்படி ஒரு பத்ரிகை எழுதியனுப்பினார். அதில், "அதிக

ப்ரஸித்தியுள்ள தூப்புல் குலதிலகமே, அடியேன் மூலம் தேவரீருடைய கீர்த்தியை மஹாராஜர் கேள்வியுற்றார். அதுமுதல் தேவரீரை த்யானம் செய்து கொண்டிருக்கிறார். நேரில் ஸேவிக்க ஆசைப்படுகிறார். தேவரீரைத் தம் தனத்தால் ஆராதித்து, தேவரீருடைய முகாரவிந்தத்திலிருந்து வரும் வாகம்ருதத்தில் முழுக எண்ணுகிறார். ஆகையால், சிஷ்யர்களுடன் விஜய நகரத்துக்கு எழுந்தருளி மஹாராஜரையும், அடியேனையும் ஸந்தோஷிப்பிக்க வேண்டும்'' என்று எழுதியிருந்தார்.

இந்தப் பத்திரிகையைக் கடாக்ஷித்தார் ஸ்வாமி. 'க்ஷோணீகோண' என்னும் ச்லோகத்தைப் பதிலாக எழுதியனுப்பினார். 'இந்தப் பூமண்டலத்தில் ஏதோ ஒரு மூலையின் ஏகதேசத்தை அரசர்கள் ஆளுகிறார்கள். அவர்களை நம்முடைய அழகிய வார்த்தைகளினால் துதிக்க விரும்பவில்லை. அரசனைத் துதித்து வரும் பணத்தை ஒரு பொருட்டாகவும் எண்ணவில்லை. பகவானையே த்யானம் செய்ய நிச்சயித்துள்ளோம். அவனே ஸர்வ பலனையும் கொடுக்கவல்லவன். குசேல முனிக்குக் குபேர ஸம்பத்தைக் கண்ணன் அளித்ததை அறிந்திருக்கிறோமல்லவா?''என்பது ச்லோகத்தின் பொருள்.

சிலகாலம் கழித்து மறுபடியும் ஒரு பத்ரிகை அனுப்பி வைத்தார் வித்யாரண்யர். அதைக் கடாக்ஷித்து ஐந்து ச்லோகங்கள் செய்து, பதிலனுப்பினார். அந்த ஐந்து ச்லோகங்களே 'வைராக்ய பஞ்சகம்' எனப்பெறும்.

'நாம் அரசர்களிடம் பெறும் தனம் தாத்காலிகமாகப் பசிதாகங்களைப் போக்கக் கூடியதே. நம்முடைய மரணபர்யந்தம் அவர்கள் கொடுத்த ஸ்வல்ப த்ரவ்யத்துக்காக அவர்கள் தயவை எதிர்பார்த்து கொண்டிருக்கக்கூடிய பெரிய கஷ்டத்தை அந்தத் தனம் உண்டு பண்ணக் கூடியது. ஆகையால் அந்தத் தனம் ப்ரயோஜனமற்றது. நம்மால் ஆச்ரயிக்கப்பட்ட பகவானாகிற தனம் தனஞ்ஜயனுக்கு அர்ஜுனனுக்குக் கீதையை உபதேசித்து மேன்மையை உண்டாக்கியது. ஜாடராக்நியை ஸமிக்கச் செய்கிறது. பகவானாகிற தனம் கோவர்த்தனத்தைத் தூக்கி கோக்களையும் கோபாலர்களையும் காப்பாற்றியது. மேலும், தன்னை ஆச்ரயித்தவர்களையும் வித்வான்களையும் ஸந்தோஷப் படுத்தக் கூடியது. ஆகையினால் பகவானாகிற தனமே உயர்ந்த தனம்.'

நாம் ஸம்பாதித்ததோ, நம் தகப்பனார் ஸம்பாதித்ததோ ஒன்றும் கிடையாது. நம் பிதாமஹர் (ப்ரஹ்மா) ஸம்பாதித்த தனம், ஒருவராலும் அபகரிக்க முடியாதது, அத்திகிரியில் இருக்கிறது. அதாவது ப்ரஹ்மாவின் யாகத்தில் அவதரித்த பேரருளாளனே நமக்குப் பெரிய தனம் என்று ஐந்து ச்லோகங்களில் அருளிச் செய்தார்.

வைராக்யம் பொதிந்திருந்த இந்த ஐந்து ச்லோகங்களில் அருளிச் செய்த கருத்துக்களை படித்து வியந்தார் வித்யாரண்யர்., அதற்கு மேல் அவரால் ஸ்வாமியிடம் ஒன்றும் பேச முடியவில்லை.

## ஸ்வர்ணத்தைப் புழுவாகத் தள்ளினார்

இவ்விதம் மிக்க வைராக்யத்துடன் ஸ்வாமி எழுந்தருளி இருப்பது உலக ப்ரஸித்தமாயிற்று. ஸ்வாமி தினமும் உஞ்சவ்ருத்தி செய்து வருவதைப் பார்த்துத் தார்மிஷ்டர்களான சில தனிகர்கள் வருத்தப்பட்டனர். ஸ்வாமியோ தனத்தை ஸமர்ப்பித்தாலும் வாங்கிக் கொள்ள மாட்டார், என்ன செய்வது?' என்று கவலைப்பட்டனர். ஒரு தனிகர் ஒருநாள் சில தங்கக் காசுகளை அமுதுபடியுடன் கலந்து ஸ்வாமி உஞ்சவ்ருத்திக்கு எழுந்தருளும் போது ஸமர்ப்பித்து விட்டார். இதை ஸ்வாமி கவனிக்கவில்லை. வழக்கம் போல் தேவிகளிடம் அமுதுபடியைக் கொடுத்து விட்டார். தேவிகள் அன்றைத் திருவாராதனத்துக்கு வேண்டிய அரிசியைச் செம்பிலிருந்து கீழே சேர்க்கும் போது தங்கக் காசுகளும் கீழே விழுந்தன. அவற்றைக் கண்டு பயந்த தேவிகள் ஸ்ரீஸ்வாமியிடம் ஓடிச் சென்று, "இன்று அமுதுபடியில் பளபளப்பாக ஏதோ சில த்ரவ்யம் இருக்கிறது. அதைக் கடாக்ஷிக்க வேண்டும்" என்று சில ப்ரார்த்தித்தாள். ஸ்வாமி அதைக் கடாக்ஷித்து, 'அவை புழுக்கள்' என்று சொல்லி, ஒரு குச்சியால் அவற்றைத் தள்ளி விட்டார் என்று பெரியோர்கள் கூறக் கேட்டிருக்கிறோம். தேவிகள் ஸ்வாமி அருளிச் செய்த நவரத்ந மாலையையும் மும்மணிக்கோவையையுமே தமக்கு விலையுயர்ந்த திருவாபரணமாகக் கொண்டிருந்தார் என்றும் பணிப்பர்.

## மணவாள மாமுனிகள்

ஸ்ரீரங்கத்தில் வாழ்ந்து வரும் சமயத்தில் எல்லாக் காலங்களிலும் பெருமாளைச் சேவித்து அந்த அனுபவமே பேறாக வாழ்பவரான அழகிய மணவாளர் (மணவாள மாமுனிகள்) தன்னுடைய தேஹ பந்துக்கள் சம்பந்தமான தீட்டைப் பற்றிக் கேள்விப்பட்டு பெருமாள் சேவையை இழக்க வேண்டியுள்ளதே என்று கலங்கினார். இதுபோல அடிக்கடி தேஹபந்துக்களால் பெருமாள் சேவையை இழக்க நேரிட்டபோது அழகிய மணவாளர் மிகவும் சோகித்து, ஆலோசித்து பகவானையும் பாகவதர்களையும் பற்றிக் கிடப்பவர்களுக்கு மற்ற எல்லாம் பிரதிகூலமாகத் தோற்றுமாகையால் இல்லறத்தை துறந்து ஸந்யாச்ரமத்தை ஏற்றுக் கொண்டார்.

## வார்த்தாமாலையில் ஒரு ஐதிஹ்யம்

திருவரங்கத்துக்கு கிழக்கே ஓர் ஊரில் செல்வத்துடன் ஸௌகர்யமாக வாழ்ந்து வந்த அப்பன் என்பவர் ஆழ்வானை ஆச்ரயிக்க வேணுமென்று திருவரங்கத்துக்கு வந்தவளவில் ஆழ்வானுக்கு அந்திமதசையாயிருக்க, பட்டரைப் பார்த்து "ஆழ்வானிடம் ஆச்ரயிக்க முடியவில்லை; என்னுடைய ஹிதத்துக்கு உறுப்பான வார்த்தையை தேவரீர் அருளிச் செய்ய வேணும்" என்று கேட்டார். அதற்கு பட்டர் "இருந்த ஊரையும் ஸௌகர்யமாயிருந்த இருப்பையும் விட்டு, ஆழ்வானை ஆச்ரயிக்கவேணும் என்னும் எண்ணத்துடன் திருவரங்கத்தை நோக்கி மேற்கே ஓடியிட்ட போதே உம்முடைய ஹிதத்துக்காகச் செய்ய வேண்டியதை நீர் செய்து விட்டீர். இனி நான் ஹிதத்துக்காக எதுவும் சொல்ல வேண்டியதில்லை" என்று அருளிச் செய்தார். இதிலிருந்து "ஒரு ஸதாசார்யனை ஆச்ரயிக்கவேணும் என்னும் எண்ணம் ஏற்பட்டவுடனே ஹிதத்துக்குச் செய்ய வேண்டியதைச் செய்தாய்விட்டது; மற்ற செயல்களெல்லாம் காலக்ஷேபத்துக்கு (போது போக்குக்கு) உறுப்பானதே" என்று தேறுகிறது. இதிலிருந்து எம்பெருமானை பற்றுவதற்கு புறம்புண்டான பற்றுக்களை வாஸனையோடு விட்டே பற்ற வேண்டும். ஆனால் ஆசார்யனைப் பற்றுவதற்கு அந்த நினைவே ஹிதத்தைச் செய்யும் என்று தெரிகிறது.

## 2. எம்பெருமானே தஞ்சமென்று பற்றுகை

நமக்கு வாய்த்த ரக்ஷகனான எம்பெருமானையே எல்லாவித ரக்ஷணங்களுக்கும் தஞ்சமாகப் பற்ற வேண்டும். வேறொன்று தஞ்சமாகும் என்ற நினைவே கலக்காமல் விலக்க வேண்டும் என்ற கருத்தை இந்த வாக்யம் உணர்த்துகிறது.

முமுக்ஷுவான ஸ்ரீவைஷ்ணவனுக்கு மோக்ஷோபாயமும் மோக்ஷஸாம்ராஜ்யத்தில் அனுபவிக்கும் பலனுமாக ஸ்ரீமந்நாராயணனே அமைந்துள்ளபடியால் வேறு தெய்வங்களிடம் இவன் கேட்டுப் பெற வேண்டியது ஒன்றுமில்லை. மேலும் எம்பெருமானை யொழிந்த இதர தேவதைகள் பெயர் ஒன்றில் மட்டும் தேவதைகளே தவிர்த்து, பிறப்பு இறப்பு இவைகளுக்கு உட்பட்ட கர்மவச்யர்களான நம்மைப் போன்ற ஜீவாத்மாக்களே. "ஐயன் பாழியில் ஆனைபோர்க்கு உரித்தாமன்றாமிற்று அவ்வோ தேவதாந்தரங்களுக்கு பலப்ரதாந சக்தியுள்ளது" என்று மஹாசார்யரான நம்பிள்ளை திருவாக்கு (ஈடு 1–1–5) ஐயன் பாழி என்றது ஐயனாருக்காக ஏற்பட்ட ஆலயத்தை அங்கு முற்றத்தில் பெரிய அளவில் யானை குதிரை களிமண்ணினால் செய்யப்பட்டு

வர்ண அலங்காரங்களுடன் நிறுத்தப்பட்டிருக்கும். இந்த யானைகளும் குதிரைகளும் என்றைக்கு ராஜாவின் போர்ப்படையில் பயன்படுமோ அன்றைக்குத்தான் பெயரளவில் தேவதைகளாயுள்ள இவர்களும் தாமே பயன் தரவல்லவர்கள் என்பது கருத்து. இவர்கள் ஈட்டிய தவப்பயனால் தேவதைகள்என்ற கௌரவம் எம்பெருமானாலளிக்கப்பட்டுள்ளது. இவர்களுள்ளே அந்தராத்மாவாக இருந்து பகவானே காரியம் செய்கிறான். மனிசர்க்குத் தேவர் போல தேவர்களுக்குத் தேவனாய் உள்ள ஸர்வேச்வரனைத் தவிர்த்து வேறு எந்த தேவர்களையும் தொழ ஸ்ரீவைஷ்ணவனுக்கு ப்ராப்தி இல்லை. அந்த ஸம்பந்தமே கூடாது என்பது நமது ஆசார்யர்களின் திடமான கொள்கை.

நம்மாழ்வார் அருளிச் செய்துள்ள திருவாய் மொழியில் 'ஒன்றும் தேவும்' (4–10) என்ற பதிகமானது பரதத்வ நிர்ணயத்தை நிலை நிறுத்தக் கூடிய பதிகமாகும். இதில் மிகவும் ஈடுபட்ட எம்பார், "எல்லா சாத்திரங்களையும் அறிந்து கொண்டவர்களும் 'பரதத்துவம் எது? என்று தெரிந்து கொள்ளாமல் 'புல்லை அறுக்காத கத்தியும் உண்டோ? நமக்குப் பலன் கொடுக்காத தேவதையும் உண்டோ? வணங்கத் தகுந்தவர் அல்லாதாரும் உளரோ? என்று கண்ட கண்ட தெய்வங்களையும் (க்ஷுத்ர தேவதைகள்) வணங்கித் தடுமாறி நிற்கின்றனர். எம்பெருமானார் தர்சனத்தில் கல்வியறிவில்லாத பெண்களும் மற்றைத் தெய்வங்களை அடுப்பிற்கு இடும் கல்லைப் போன்று மிகவும் அற்பமாக நினைப்பதற்குக் காரணம் நம்மாழ்வார் அருளிச் செய்துள்ள 'ஒன்றும் தேவும்' பதிகமே என்றருளிச் செய்வராம். பிற சமயத்தில் சிலகாலமிருந்து ஸ்ரீவைஷ்ணவ சமயத்திற்கு வந்த எம்பார் இப்படிக் கூறியுள்ளது குறிப்பிடத்தக்கது.

ஸ்ரீவைஷ்ணவனுக்கு தேவதாந்தர வைராக்யம் மிகவும் முக்கியமானது. மனதில் எவ்விதமான த்வேஷத்திற்கும் இடம் தருவது வைஷ்ணவ லக்ஷணமல்ல.

## கைசிகபுராணம்

வராகபுராணத்தில் கைசிகமாஹாத்ம்யம் பரக்கப் பேசப்பட்டுள்ளது. கைசிகத்வாதசியன்று பகவத்ஸன்னிதிகளில், "கைசிகபுராணம்" வாசிக்கப் படுவது ப்ரஸித்தம். முக்கியமாக திருவரங்கத்திலும் திருக்குறுங்குடியிலும் விசேஷமாக இப்புராணபடனம் நடக்கிறது. இப்புராணம் வராகப் பெருமானால் ஸ்ரீபூமிப் பிராட்டிக்கு அருளிச் செய்யப்பட்டதாகையால் பகவத் வசனமாய் உயர்ந்த ப்ரமாணமாய் அமைந்தது. இதில் எம்பெருமானை இசை மூலம்

வழிபடுவதன் பெருமை பேசப்படுகின்றது. இதில் சொல்லப்பட்ட சரித்திரம் திருக்குறுங்குடியில் நடந்தது. அங்கு சண்டாள குலத்தைச் சேர்ந்த ஒரு பக்தன் திருப்பாணாழ்வார் போல தினமும் பலவிதமான பண்களினால் எம்பெருமானைப் பாடுவதையே பொழுது போக்காகக் கொண்டிருந்தான். இவனை வராகப்பிரான் "மமகாயக: – நம்பாடுவான்" என்று குறிப்பதால் இதுவே இவன் பெயராயிற்று. இந்த நம்பாடுவான் ஒரு கார்த்திகை ஏகாதசி தினத்தன்று இரவு தூங்காமல் விரதமிருந்து மறுநாள் விடியும்வரை பெருமாளைப் பாடுவதற்காகப் போய்க் கொண்டிருக்கையில் ஒரு பிரம்மராக்ஷஸ் இவனைப் பிடித்து விழுங்க வந்தது. பெருமாளைப் பாடாமல் மரணமடைய விரும்பாத நம்பாடுவான் "நான் சென்று பெருமாளை பாடி விட்டு வந்து விடுகிறேன். பிறகு என்னை புஜிப்பாயாக" என்று வேண்டினான். அவன் பேச்சை நம்பாத பிரம்மராக்ஷஸ் அவனை விட ஒப்பாததால், நம்பாடுவான், "நான் திரும்பி வராவிடில் பல கோரமான பாபங்களுக்கு ஆளாகிறேன்" என்று, பரதாரகமனம், பொன்னைத் திருடல், முதலிய சிலவற்றைச்சொல்ல, ரக்ஷஸ்ஸுக்கு நம்பிக்கை பிறவாமையால்

> வாஸுதேவம் பரித்யஜ்ய யோந்யம் தேவமுபாஸதே
> தேஷாம் கதிம் ப்ரபத்யே வை யத்யஹம் நாகமே புந:
>
> நாராயணம்ததாந்யைஸ்து தேவைஸ்துல்யம்கரோதி ய:
> தஸ்ய பாபேந லிப்யேயம் யத்யஹம் நாகமே புந:

என்று சபதம் பண்ண, ரக்ஷஸ் அவனை 'வைஷ்ணவன் இவன்' என்று மதித்து அவன் பேச்சை விச்வஸித்து அவனைப் போக அநுமதித்தது. வாசுதேவனான நாராயணனையும் மற்ற தெய்வங்களோடு ஒக்க நினைப்பவன், வாஸுதேவனை விட்டு அத்தெய்வங்களைத் தொழுபவன் எந்த கோரமான பாப பலனையனுபவிப்பானோ அப்பாவம் நான் திரும்பி வராவிடில் என்னைப் பீடிக்கட்டும் என்று சபதமிட இவனுடைய வைஷ்ணத்வத்தில் நம்பிக்கை வைத்து இவனைப் போகவிட்டது.

இதனால் வாஸுதேவனான எம்பெருமானைத் தவிர்த்து இதர தேவதைகளைத் தொழுவதும், ஒப்பாரும் மிக்காரும் இல்லாதவனும் எல்லாகர்மங்களாலும் பூசிக்கப்படுமவனும் எல்லா பூசைகளுக்கும் பலனளிப்பவனாயும் மோக்ஷப்ரதானாயுமுள்ள ஸ்ரீமந்நாராயணனை இதர தெய்வங்களோடு ஒக்க எண்ணுவதும் மிகக்கொடிய பாபம் என்று தெளிவாகிறது.

நம்பாடுவானும் பெருமாளைப் பாடித் துதித்து விட்டுத் திரும்பிவர, ரக்ஷஸ் அவனை அன்று பாடிய பாட்டின் பலனைத் தனக்குத் தந்து விட்டு உயிருடன் செல்லும்படி வேண்ட, நம்பாடுவான் மறுத்து விட்டான். அவனைச் சரணம் புகுந்து அந்த ப்ரமராக்ஷஸ் தன்னை பாபத்தினின்றும் விடுவித்து அருளவேணுமென மிகவும் ப்ரார்த்திக்க, நம்பாடுவானும் "இன்று கடைசியில் பாடிய கைசிகம் என்னு கீதபலனை நீ பெற்று இந்த ராக்ஷஸ ஜன்மத்திலிருந்து விடுபட்டு நற்கதியடைவாய்" என்று வாக்களித்தான். அப்படியே அந்த ரக்ஷஸ்ஸும் நல்ல அந்தணக் குடியில் பிறந்து அடைவே மோக்ஷம் அடையலாயிற்று. வராகப்பிரான் தாமே அருளிச் செய்த இச்சரித்திரத்தினால் நாம் அறிய வேண்டுவது கானமார்க்கத்தின் பெருமையும் தேவதாந்தரபஜனம் பெரும்பாபம் என்பதும் தான்.

## பூர்வாசார்யர்களின் அநுஷ்டானம்

நமது ஆசார்யர்கள் இவ்விஷயத்தில் எவ்விதமான அனுஷ்டானத்தைக் கடைப்பிடித்து வந்தனர் என்பதை விளக்க ஸ்வாமி எம்பெருமானாருடைய ஜீவிய காலத்தில் நடந்த ஒரு நிகழ்ச்சியை விவரிப்போம். ஒரு ஸமயம் எம்பெருமான் திருவரங்கத்திற்கு வெளியே எழுந்தருளும் புறப்பாட்டில் எம்பெருமானாரும் அநுயாத்ரையாய் எழுந்தருளா நிற்க, எதிர்ப்பாராமல் இடியும் மின்னலும் பெருமழையாக வர, பெருமாள் தற்செயலாய் ஒரு இதர தேவதாலயத்திற்கு அருகில் இருந்தமையால் அவ்வாலயத்தினுள் மழைக்கு ஒதுங்கினார். ஆனால் ஸ்வாமியோ, வெளியிலேயே கொட்டும் மழையில் நின்றிருந்தார். அவ்வாலய நிர்வாகிகள் இவரிடம் வந்து, "உமது பெருமாள் உள்ளே எழுந்தருளியிருக்க, நீர் இங்கே மழையில் நனைய வேண்டியதென்? உள்ளே எழுந்தருளலாகாதோ?" என்றழைக்க, அப்போது எம்பெருமானார் "எம்பெருமான் எல்லாவுலகங்களுக்கும் ஸ்வாமி. எல்லா இடங்களும் அவனுடையவை; எங்கு வேண்டுமானாலும் எழுந்தருள அவனுக்கு ப்ராப்தி உண்டு. புருஷோத்தமனான அவன் முன்பே நாமெல்லாரும் பெண்களை யொத்தவர்கள். ராஜாதிராஜனான அவனுடைய மஹிஷி ஸ்தானத்தில் உள்ளவர்கள். அவன் புகுந்தான் என்று நாம் அவன் புகுமிடங்களில் எல்லாம் புகக்கூடாது. அவனுடைய கோவில் ஒன்றில் தவிர பிறமனைகளில் அவனுடன் புக நமக்கு ப்ராப்தி இல்லை. "பிறமனை புகுந்தான்" என்ற அவச்சொல்லும் பாபமும் நம்மைச் சாரும். நான் பொது இடமான இந்த வீதியிலேயே இருப்பேன்" என்று சொல்லி அப்படியே மழை நின்று நம்பெருமாள் புறப்படுந்தனையும் வெளியே காத்திருந்து பெருமாளுடன் எழுந்தருளினாராம்.

## *கூரத்தாழ்வானின் அத்யவஸாயம்*

கூரத்தாண்டாள் ஒரு நாள் கூரத்தாழ்வானிடம் பட்டரையும் சீராமப்பிள்ளையையும் காட்டி இவர்கள் விவாகத்தைச் செய்வதற்குரிய பருவத்தை அடைந்தார்கள் பேசாதே இருக்கிறது என்? என்ன, பகவத் குடும்பத்துக்கு என்னை இன்று கரையச் சொல்கிறாயோ என்று கூறி வெறுமனே இருந்தார். மீண்டும் ஆண்டாள் வற்புறுத்தவே, இவர்களை நாளைப் பெருமாள்பாடே போனவாறே வரக் காட்டு என்ன, ஆண்டாளும் அவர்களைக் கொண்டு பெருமாள் திருமுன்பே நிறக்ச் செய்தாள். ஆழ்வான் பெருமாளுக்குப் புரோகிதம் வாசித்து முடித்து பெருமாள் திருவடிகளிலே ஒன்றும் பேசாதே நிற்க, பெருமாள் அருளப் பாடிட்டு, ஆழ்வான்! ஒன்று சொல்வாய் போலே இருந்தாயே என்று திருவுள்ளமாக, ஆழ்வானும், இவர்கள் விவாகத்தைச் செய்வதற்குரிய பருவத்தினர் ஆனார்கள் என்று சொல்கிறார்கள் என்று கூறி நிறுத்தினார். பெருமாளும் நாமே நல்ல இடத்தில் சம்பந்தம் செய்து தருகிறோம் என்று அருளிச் செய்ய பிற்றை நாள் மன்னியைக் கொண்டு நீர் வார்த்தார்கள். ஆக அத்தலையாலே வருமது ஒழிய தாம் ஒன்றை ஆசைப் படுகையும் பழி என்றிருப்பார்கள்.

இதனால் எந்த ஒரு கார்யத்திற்காகவும் கூட ஈச்வரனை ஒழியத் தானாகவே ஒரு முயற்சியைச் செய்தல் ஸ்வரூபத்திற்கு விரோதம் என்றிருப்பார்கள் ஸ்ரீவைஷ்ணவர்கள் என்று காட்டப்படுகிறது.

## *பட்டரின் பக்தி*

வீரசிகாமணி பல்லவராயன் பட்டரை ஸேவித்து, "அடியேன் ராஜ்யகார்யம் செய்து வருவதனால் பகவத்விஷய வைபவங்களைக் கேட்க எனக்கு அவகாசமில்லை. ஆகையால் எனக்குத் தஞ்சமாக இருக்கிற ஓர் அர்த்த விசேஷத்தை அருளிச் செய்ய வேண்டும்" என்று பிரார்த்தித்தான். பட்டர், "கடற்கரை வெளியை நினைத்திரும்" என்று உபதேசித்தார். இதன் பொருள் விளங்கவில்லையே?" என்றான் பல்லவராயன். அதற்கு அவர், "கடற்கரையிலே எழுபது கோடிவானர ஸைன்யங்களை அழைத்துக் கொண்டு போன பொழுது அவை வழிநடந்த களைப்பினால் கண்ணுறங்கிக் காலோய்ந்து, கைசோர்ந்து இருக்கிற அளவிலே, தாமும் தம் திருத்தம்பியாருமாகக் கையில் பிடித்த வில்லும் அம்புமாய் நடையாடும் மதிள்கள் போல் ரக்ஷித்துக் கொண்டு ஓர் இரவெல்லாம் உறங்காதிருந்த சக்ரவர்த்தி திருமகனுடைய கையும் வில்லுமே தஞ்சம் என்று ஸுகமாய் இரும்' என்று உபதேசித்தார். 'நாம் உறங்கும்போது நம்மை ரக்ஷிக்கிறவன், நாம் உணர்ந்தெழுந்தால் நம்மை

ரக்ஷிக்க வேண்டுமென்று பிரார்த்திக்கவும் வேண்டுமோ?' என்பது ஸாரார்த்தம்.

சாஸ்த்ரங்களில் வல்லவனாயிருப்பானொரு பிராமணன் பட்டர் திருலோகத்துக்கு அடிக்கடி வருவதுண்டு; அவனைக் காணும் போதெல்லாம் பட்டர் 'வந்தாயோ போனாயோ?' என்று ஸாமாந்யமாகப் பேசுவர்; சாஸ்திரம் வல்லவரல்லாத ஒரு பாகவதர் பலகாலும் பட்டர் ஸந்நிதியில் சேவிக்க எழுந்தருள்வர்; அவரைக் காணும் போதெல்லாம் பட்டர் மிகவும் கிருபை பண்ணி 'எழுந்தருள்க எழுந்தருள்க' என்று கொண்டாடி ஆதரித்தருள்வர். இந்தத் தாரதம்யத்தைப் பலமுறை கண்டிருந்த ஒருவர் பட்டரை நோக்கி ஸ்வாமி! தேவரீர், திருவோலக்கத்துக்குச் சாஸ்திரப்பிரவணரான ஒரு பிராமணர் வரும் போது ஸாமாந்யமாகப் பேசியருள்கிறது; சாஸ்திர ஞானமில்லாத வெறும் ஸாது வைஷ்ணவன் வரும் போது அவரை மிகவும் கொண்டாடியருள்கிறது. இந்த வேறுபாட்டின் காரணத்தை அடியேனுக்கு அருளிச் செய்ய வேண்டும்' என்று விண்ணப்பஞ் செய்தார். அதற்குப் பட்டர் 'எப்போதும் போல நாளைக்கும் அவர்களிரண்டு பேரும் வரக்கூடும்; அப்போது நீர் பார்த்திரும்'' என்று கூறினார். மறுநாள் இருவரும் வழக்கம் போல் வந்தனர். அப்போது அதில் ஒருவரான சாஸ்த்ரஜ்ஞன் வந்த போது அவனை நோக்கி 'நீர் யாரைப் பரதத்வமென்று நினைத்திருக்கிறீர்' என்று வினவியதற்கு, அவன் 'சில பிரமாணங்கள், விஷ்ணுவைப் பரமாத்மா என்று பேசுகின்றன; மற்றுஞ்சில பிரமாணங்கள், ருத்திரனைப் பரம் பொருளென்று உரைக்கின்றன; ஆதலால், அவ்விஷயம் நம்மால் நிச்சயிக்கத் தக்கதன்று' என்று சொன்னான்.

அவ்வளவோடு அவனைப் பட்டர் அனுப்பிவிட்டுப் பிறகு வந்த ஸாதுவை நோக்கி 'தேவரீர் யாரைப் பரதத்வமென்றிருக்கிறீர்?' என்று வினவ, அவர் 'தேவரீர் நாராயணனே பரதத்வமென்று அருளிச் செய்யுமே; அது தவிர வேறொன்றறியேன்' என்ன, இன்னமும் பட்டர் 'உமக்குத் தஞ்சமாக நினைத்திருப்பது எது?' என்ன, அவ்வடியவர் 'எம்பெருமானார் திருவடிகளே சரணம்' என்று தேவரீர் திருவாய் மலர்ந்தருளுமே; அதனையே தஞ்சமாக நினைத்திருக்கின்றேன்' என்ன, பட்டர் திருவுள்ளம் உவந்து, முந்தினநாளில் ஐயமுற்று வினவியரைப் பார்த்து 'இவ்விருவர்க்கும் உள்ள ஏற்றத் தாழ்வைக் கண்டீரா? இவரோ அவனோ நன்மதிப்பிற்கு உரியவர்?' என்று அருளிச் செய்ய, வினவியவர் தெளிவுபெற்றார். பரதத்வ நிர்ணயமில்லாத வெறும் சாஸ்திரஞானம் சிறப்புடையது ஆகாது என்றும், சாஸ்திரஞானம்

இல்லாதிருந்தாலும் குருவின் உபதேசத்தால் பரதத்வநிச்சயம் உண்டானால் அது சிறக்குமென்றும் அறிந்து கொண்டார்.

திரிபுவன வீரதேவராயன் என்றொரு சிற்றரசன் பட்டருடைய வைபவத்தைக் கேட்டு, "பட்டரே, ஒருநாள் நீர் என் இருப்பிடம் வந்துபோம்" என்று சொன்னான். பட்டர், "ஏதத் வ்ரதம் மம" என்று ஸ்வாஸ்ரித ரக்ஷணைகதீக்ஷிதனான எம்பெருமான் 'அஞ்சல்' என்ற கை மறுத்தாலும் அவ்வாசலொழிய வேறு ஒரு போக்கு உண்டோ?" தனமுடையவர் வாசலிலே துவளக்கடவோமல்லோம்" என்று அருளிச் செய்தார்.

## திரௌபதி சரணாகதி

திரௌபதியும், பாண்டவர்களும் பகவானான ஸ்ரீக்ருஷ்ணனையே ஸர்வரக்ஷகனாக வரித்திருந்தார்கள். சூதாட்ட அரங்கத்திற்கு இழுத்து வரப்பட்ட த்ரௌபதியை துரியோதனன் உத்தரவின் பேரில் துச்சாதனன் அவள் ஆடையைப் பிடித்திழுத்தான். தனக்கு அங்குள்ள எவரும் ரக்ஷகராகார் என்று கண்டு கொண்ட த்ரௌபதி உடனே புண்டரீகாக்ஷனான ஸ்ரீக்ருஷ்ணனை மனதில் ரக்ஷகனாக வரித்தாள். பேராபத்து வந்தக்கால் பகவானான ஹரியே ரக்ஷகனாக நினைக்கத் தக்கவன் என்று முன்னரே வஸிஷ்டமஹரிஷி உரைத்ததை நினைவு கூர்ந்து கண்ணபிரானை மனதில் கொண்டு எம்பெருமானே எனக்கருள்வாய் என்று கூப்பிட்டாள். முதலில் பெண்களின் இயல்புப்படி தானே தன் சேலையை இருத்திக் கொள்ள முயன்றாள். பின்னர் அது பயனற்றது என்று உணர்ந்து லஜ்ஜையை விட்டவளாய் பகவானே ஸர்வரக்ஷகன் என்று மஹாவிச்வாஸத்துடன் அத்யவஸித்து இருகைகளையும் உயரத்தூக்கி, எம்பெருமானை நோக்கி பின்வருமாறு அருளிச் செய்தாள்.

சங்கசக்ர கதாபாணே த்வாரகா நிலயாச்யுத
கோவிந்த புண்டரீகாக்ஷ ரக்ஷமாம் சரணாகதாம்

திருவாழி, திருச்சங்கம், கதை முதலான ஆயுதங்களை திருக்கைகளில் தரித்திருப்பவனே, த்வாரகா மன்னனே, உன்னைப் பற்றியவரை நழுவவிடாதவனே, கோவிந்தா, மலர்ந்த தாமரைக் கண்ணனே உன்னையே புகலாகப் பற்றிய என்னைக் காத்தருள்வாய் என்று கண்ணனைப் புகலாகச் சரணம் பற்றி உரக்கக் கூப்பிட்டு மயங்கி விழுந்தாள்.

அப்போது அங்கு ஒரு அற்புதம் நடந்தது. துச்சாதனன் த்ரௌபதி சேலையை இடுப்பிலிருந்து இழுக்க இழுக்க, மேலும் மேலும் புடவை சுரந்தது. மிக்க பலசாலியான துச்சாதனனும் மேலும் புடவைகளைக் களைய மாட்டாமல்

சோர்ந்து மயங்கி விழுந்தான். எம்பெருமானே தஞ்சம் என்று சரணடைந்த த்ரௌபதி ஓர் பேராபத்திலிருந்து இவ்வாறு காப்பாற்றப்பட்டாள்.

இப்படி ப்ரபந்நையாய் கூவியழைத்ததும், வஸ்த்ரவ்ருத்தி ஏற்பட்டு மானஸம்ரக்ஷணமும் ஆயினும், க்ருஷ்ணனுக்கு அன்று எங்கோயிருந்து தன்னையழைத்த கஜேந்திரனுக்கு மடுக்கரையில் வந்து குதித்து முகங்காட்டி ஆச்வாஸம் பண்ணியது போல இங்குப் பண்ணவில்லையே என்று பெருங்குறை உண்டு. பின்னர் அவள் சபதம் பண்ணினபடி அவள் பரிபவத்திற்குக் காரணமான எதிரிகள் அனைவரையும் மாளப் பண்ணி, அவள் குழல் முடியும்படி அவள் விரும்பிய ரக்ஷணத்தைப் பண்ணிய பின்பும் நாம் இவளுக்கு ஒன்றும் செய்திலோமே என்று வருத்தத்தோடே தன்னுடைச் சோதிக்கு எழுந்தருளினான்.

சங்குசக்ர கதாபாணே என்ற இந்தஸ்லோகம் த்வயத்தில் பூர்வகண்டத்திலுள்ள "நாராயண" பதத்தினால் உணர்த்தப்படும் ரக்ஷணத்துக்கு உபயோகியான குணங்களைச் சொல்லி அழைத்தாள் என்று பூர்வர்கள் அருளிச் செய்வார்கள். எங்ஙனேயென்னில், "சங்குசக்ர கதாபாணே" என்றதால் ஜ்ஞான ஸக்த்யாதிகள் உள்ளமையும், "த்வாரகாநிலயா, அச்யுதா, கோவிந்தா, புண்டரீகாக்ஷா" என்பதால், ஸௌலப்யம், வாத்ஸல்யம், ஸௌஸீல்யம், ஸ்வாமித்வம் எனும் ரக்ஷணத்துக்கு வேண்டிய குணங்கள் முழுமையாயுள்ளமையும் சொல்லி "ரக்ஷமாம்" என்று தான் கைம்முதலில்லாதவள் என்றும் அவனையே ரக்ஷகனாக வரித்தாள் என்பதையும் சொல்லி "ஸரணாகதாம்" என்கையாலே உபாயத்யவஸாயம் சொல்லி சரணம் புகுகிறாள் என்று அருளிச் செய்வார்கள்.

## கண்ணன் ஸஹாயம்

சமாதானப் பேச்சுக்கள் பயனன்றிப் போகவே பாண்டவர்கள் யுத்தத்துக்கு வேண்டிய முயற்சிகளை மேற்கொண்டனர். தங்கள் பக்கத்திலிருந்த போர் செய்யக் கூடிய அரசர்களுக்கெல்லாம் தக்க தூதர்கள் மூலம் செய்தி அனுப்பி அவர்களின் துணையை வேண்டினர். அப்படி கண்ணனைக் கண்டு வேண்ட அர்ஜுனனே நேரில் துவாரகாபுரிக்குச் சென்றான். இதை யறிந்த துரியோதனன், கண்ணனுடைய படைபலத்தை வேண்ட தானும் தேரே துவாரகைக்குப் பயணமானான். இருவரும் ஒரே தினத்தில் துவாரகையை வந்தடைந்தனர். இருவருமே கண்ணனுக்கு நெருங்கின உறவினராகையால், அரண்மனையில் கண்ணன்

இருக்குமிடத்துக்கு உரிமையுடன் சென்றனர். அப்போது கண்ணன் கட்டிலில் படுத்து நித்திரையில் ஆழ்ந்திருந்தான். துரியோதனன் கண்ணனுடைய தலைப்புறத்திலிருந்த ஒரு ஆஸனத்திலமர்ந்தான். பிறகு வந்த அர்ஜுனன் கண்ணனுடைய திருவடிப்பக்கம் வணங்கி நின்றிருந்தான்.

இவர்கள் வந்த சிறிது நேரத்தில் கண்ணன் கண்விழித்து திருவடியின் பக்கத்தில் நின்றிருந்த பார்த்தனைக் கண்டான். நலம் விசாரித்தான். துரியோதனன் தானும் வந்திருப்பதைக் கூற கண்ணன் திரும்பி அவனையும் பார்த்து நல்வரவு கூறி நலம் விசாரித்துப் பின்னர் அவர்கள் வந்த காரியத்தை வினவினான். துரியோதனனே முதலில் பேசினான். "ஜநார்த்தனனே பாண்டவர்களுக்கும் எங்களுக்கும் யுத்தம் வரக்கூடுமெனத் தோன்றுகிறது. அப்படி வந்தால், நீர் எமக்குத் துணைபுரிய வேண்டுமெனில் கேட்கவே வந்தேன். நாங்கள் இருவரும் உம்மிடம் சமமான உறவுமுறையுடையவர்களே. இதில் ஏற்றத் தாழ்வு ஏதுமில்லை. எங்களுள் நானே முதலில் வந்தவனாகையால், தரும நெறிப்படி பெரியோர்கள் ஆசாரப்படி நீர் என்னையே ஆதரிக்கவேணும்" என்றான். துரியோதனன் சொன்னதைக் கேட்ட கண்ணன், "நீ முதலில் வந்திருக்கலாமாயினும் நான் அர்ஜுனனையே முதலில் கண்டேன். முதலில் வந்தவனாகவும் முதலில் பார்க்கப்பட்டவனாகவும் இருவருமே சமமாகவே இருக்கிறீர்கள். ஆகையால் இருவருக்கும் வேற்றுமையின்றி நான் உதவக் கடமைப்பட்டவன். ஆனால் ஒன்று சொல்வேன். போர் என்று வந்தால் ஆயதமெடாமலும், நேரில் போர் புரியாதவனுமாக நான் ஒரு பக்ஷத்தில் துணையாக மட்டுமிருப்பேன். மகாவீரர்கள் அடங்கிய நவகோடிநாராயணர் என்ற பெரும்படை ஒரு புறமிருப்பார்கள். வயதில் சிறியவனான பார்த்தனே பழைய ஆசாரப்படி பதில் சொல்ல முதல் வாய்ப்பு பெறுவான். அர்ஜுனா நன்கு தீர்க்கமாக ஆலோசித்து, உனக்கு தனியனான ஆயுதமெடாத நான் வேணுமா? மாவீரர்களடங்கிய படை வேணுமா? என்பதைச் சொல்வாய்" என்றான். இது கேட்ட அர்ஜுனன் ஒரே நொடியில் ஒரு யோஜனையுமின்றி, "நீர் ஒருவருமே எங்கள் பக்ஷத்தில் பாண்டவஸகாயனாக இருந்தால் அதுவே பேருதவியாக இருக்கும். மற்றெதையும் நான் வேண்டவில்லை" என்று அன்பும் கௌரவ புத்தியும் ஒருபடச் சொன்னான்.

இதைக் கேட்ட துரியோதனன் மட்டிலா மகிழ்ச்சியடைந்தான். அர்ஜுனன் ஏமாந்துவிட்டதாகவே அவன் நம்பினான். லக்ஷக்கணக்கான திறமை வாய்ந்த பெருஞ்சேனையைக் கேட்டுப் பெற்றுக் கொண்டு வெற்றி பெற்றோமெனவே நிறைந்த மனதுடன் ஊர் திரும்பினான். துரியோதனன்

சென்ற உடனே கண்ணன் அர்ஜுனனிடம் சேனைகளை விட்டுவிட்டுத் தனி நபரான தன்னைத் துணையாய்ப் பெற்றதன் காரணத்தைக் கேட்டான். அர்ஜுனன், "க்ருஷ்ண, நீர் தனியாகவே நின்று பல அசுரர்களை முடித்திருக்கிறீர். நானும் உமது துணை மட்டுமே கொண்டு எதிரிகளை முடிக்க ஆசைப்படுகிறேன். நீர் ஆயதமெடுத்து யுத்தத்திலும் கலந்து கொள்ள வேண்டாம். எனக்குத் தேரோட்டியாக மட்டும் இருந்து என்னருகிலேயே இருக்க வேண்டுகிறேன். உமது முன்னிலையில் நான் போரிட்டு வெற்றி பெற ஆசைப்படுகிறேன். இதை நீரே பூர்த்தி செய்வீர்" என்று அவன் சொல்லக் கேட்டு கண்ணன் மகிழ்ந்து ஆசீர்வாதம் பண்ணினான்.

வெற்றிகளுக்கெல்லாம் அதிபதி ஸ்ரீலக்ஷ்மிபிராட்டியார். அவளைத்தன் மார்பிலே கொண்டுள்ளவன் மாதவனான கண்ணன். மாதவன் எங்கு வசிக்கிறானோ அங்கு தான் பிராட்டியும் வசிக்கிறாள்.

## 3. பேறுதப்பாதென்று துணிந்திருக்கை

ஸர்வேச்வரனை அடைதல் என்ற பெரும் பேற்றுக்குத் தகுந்த கைம்முதலோ உபாயமோ நம்மிடம் இல்லாமையும் நம்மிடம் தோஷங்கள் (பாபங்கள்) மிகுந்துள்ளமையையும் கண்டு பயப்படாமல் ஸர்வேச்வரனையே புகலாகப்பற்றி விட்டமையால் அவன் கட்டாயம் நம்மை ரக்ஷிப்பான் என்று ஆழ்ந்த நம்பிக்கை (மஹாவிச்வாஸம்) யோடிருக்க வேண்டும் என்ற கருத்தை இந்த வாக்யம் உணர்த்துகிறது.

"எம்பெருமானார் தரிசனம்" என்று புகழ் வாய்ந்த நம் விசிஷ்டாத்வைத மதத்தில் ஜீவாத்மாவுக்கு எம்பெருமான் ஸ்ரீமந்நாராயணனே ரக்ஷகன் அவனையொழிய வேறு யாருமே காப்பாரில்லை என்பது ஓர் மிக முக்கியமான கொள்கை. இவ்வுண்மைப் பொருளை அறிந்தவர்கள் தங்கள் ரக்ஷணத்துக்கு அவன் கையையே எதிர் நோக்கியிருப்பார்களே ஒழிய அவனையொழிந்த பிறரையும், தங்களையும், தங்களுக்கு ரக்ஷகர்களாக ஒரு காலும் நினைத்திரார்கள். அவனுடைய ரக்ஷகத்வத்தில் பரிபூரண நம்பிக்கையுடன் இருப்பர்கள்.

சரமச்லோகம் எம்பெருமானுடைய நியமனமாக கட்டளையாக அமைந்தது. "என்னையே பேற்றுக்குபாயமாகப் பற்று. மற்ற உபாயங்களை வாஸனையுமற்ற நிலையில் விட்டு விட்டு என் ஒருவனையே உபாயமாகப் பற்று. நீ பற்றும் பற்றுதலும் உபாயமன்று நானே நிரபேக்ஷமாக தனி உபாயமாக

இருந்து, பற்றும் உன்னை பேற்றுக்குத் தடையான எல்லா பாபங்களின்றும் விடுவித்து மோக்ஷாநந்தத்தை ஊட்டுவிப்பேன்" என்று திருத்தேர்த் தட்டில் இருந்து கண்ணன் அர்ஜுனனைக் குறித்து நமக்காகச் சொன்ன வார்த்தை. சரண்யனாய் நமக்குப் புகலாயிருந்து எல்லா பாங்களையும் போக்கித் தருவதாக அவன் திருவாய் மலர்ந்தருளுகிறான் இது ஸத்யம். நமது ரக்ஷணபரத்தை அவனிடம் ஒப்பபடைத்த பின்னர் பேற்றைப் பற்றிய கலக்கம் துளியும் கூடாது. சரண்யன் தன் காரியத்திலிருந்து தவறவே மாட்டான் என்ற அத்யவஸாயம் மிகவும் அவசியம்.

இதற்கு உதாஹரணம் சீதாபிராட்டிதான். ராவணன் சிறைப் படுத்தினான் என்ற பெயரில் அவ்விராவணனால் சிறைப்படுத்தப்பட்ட பல தேவ மாதர்களை சிறையிலிருந்து விடுவிக்கக் கோரி, தானே வலியச் சென்று த ா காலில் விலங்கிட்டுக் கொண்டு அசோகவனத்தில் சிறையிருந்தாள். இக்குணத்தில் ஈடுபட்டே ஸ்வாமி நம்மாழ்வார் "தனிச்சிறையில் விளப்புற்ற கிளிமொழியாள்" என்று போற்றிப் புகழ்ந்தார். அந்நேரத்தில் சிறிய திருவடி (ஹநூமான்) சமுத்திரத்தைக் கடந்து அவளிடம் வந்து அடையாளங்கள் பலகூறி, அங்குளீயகத்தை (மோதிரத்தை)யும் "ஈதவன் கைம் மோதிரமே" என்று சொல்லிக் கொடுக்க ஒக்குமால் அடையாளம் அநுமானென்று உச்சி மேல் வைத்துக் கொண்டு உகந்தாள். அப்போது சிறிய திருவடிதானே பிராட்டியை ராமனிடத்திற்கு அழைத்துச் செல்வதாகச் சொல்ல, பிராட்டி அப்போது கூறினாள்.

சரைஸ்து ஸங்குலாம் க்ருத்வா லங்காம் பரபுராத்தந:
மாம் நயேத் யதி காகுத்ஸ்த்த: தத்தஸ்ய ஸத்ருசம் பவேத்

பகைவர் பட்டணத்தை அழிப்பவரான ராமன் லங்கையைப் பாணங்களாலேயே நிறைந்தாகச் செய்து விட்டு என்னை அழைத்துக் கொண்டு போவாரேயாகில் அது அவருக்குப் பொருத்தமாக இருக்கும் என்று கூறினாள். இனி நம் பிள்ளையின் ஈடு தழுவி இதன் விளக்கம் வருமாறு: "ராக்ஷஸக் கூட்டம் நிறைந்த இந்த லங்கையை இராமபாணங்களால் நிறைந்ததாக ஆக்கிவிட்டுத் தான் நான் இவ்விடம் விட்டுப் புறப்படுவேன்; ராமனைத் தவிர வேறு ஒரு மனிதர் என்னை அழைத்துச் செல்லவோ? ராமனுடன் விரோதங் கொண்டு பின் சீரும் சிறப்புமாக வாழ்ந்த ஓர் பட்டணம் உண்டோ? இந்த ராமன் வராஹப் பெருமானாக அவதரித்த காலத்தில் சொன்ன வார்த்தை (ஸ்ரீவராக சரமச் லோகம்) பொய்யோ? அதாவது "என்னையொருகால் நினைத்தவனை அவன் சாகுந்தறுவாயில், நானே

நேரில் வந்து அழைத்துச் செல்கிறேன்" என்ற அவ்வார்த்தை சரணாகதையான என் விஷயத்தில் பொய்யாகுமோ? அவர் எவ்வளவு உயர்ந்த குலத்தில் பிறந்துள்ளார்? அவருடைய முன்னோர்களில் ஓர் அரசனுக்கு காகுத்தன் என்று பெயர். இவ்வரசன் இந்திரனுக்கும் அஸுரர்களுக்கும் ஏற்பட்ட, யுத்தத்தில், இந்திரனுடைய சேனையுடன் சென்று அஸுரர்களை அழித்து இந்திரனுக்கே உதவி புரிந்தான். இந்திரன் அப்போது ஓர் காளை வடிவு கொண்டு இவ்வரசனைத் தன் பிடரில், சுமந்து கொண்டு யுத்தகளத்துக்குச் சென்றான். அதனாலேயே அவ்வரசனுக்கு காகுத்ஸ்த்தன் என்ற பட்டப் பெயர் கிடைத்தது. இப்படி இந்திரன் முதலியவர்கள் விரோதிகளையும் போக்குங்குடியில் பிறந்தவர், தன் காரியத்தில் (அது என்னைக் காப்பதில் நின்றும்) சோர்ந்து நிற்பரோ? அவருக்குப் பொருத்த மானவற்றையோ நாம் சொல்ல வேணும் நாம் ம்முடைய ஆற்றாமையைப்போக்கிக் கொள்ளவேண்டி, அவருக்கு நிறக்கேடான (பெருமைக்கு குறை ஏற்படும்படியான) செயல்புரியவோ? 'ராமனின் பட்ட மகிஷியை ஒரு ராக்ஷஸன் பிரிக்க அவள் அவனைச் சபித்துத் தன்னை சிறையிலிருந்து மீட்டுக் கொண்டாள் என்றோ அல்லது 'ஒரு குரங்கு' இலங்கை சென்று அவளை மீட்டுக் கொண்டு வந்தது என்றோ ஏற்படுமாயின் அவர் வில்வலிக்குக் குறையாகும். அவர் வம்சத்துக்குக் கொற்றையாம் காண். அதாவது அரக்கர்களை யெல்லாம் அழித்து இச்சிறையிலிருந்து மீளும் வல்லமை எனக்கு இருந்தும், நான் இராமபிரானுக்கு மேன்மை விளைக்க வேண்டிய அங்ஙனம் செய்யாது அடங்கியிருத்தல் போல், நீயும் அடங்கி இருத்தலே முறைமை என்று சீதை அநுமானுக்கு அறிவுறுத்தினாள்.

ஸ்ரீவசநபூஷண திவ்ய சாஸ்த்ரத்தில் பிள்ளை லோகாசாரியர் (ஸூ82) "பிராட்டி ஸ்வசக்தியை விட்டாள்" என்றருளிச் செய்துள்ளார். அவ்விடம் மாமுனிகள் வ்யாக்யானம் பின் வருமாறு ஸ்வசக்தியை விடுகையாவது) – நாயகரான பெருமாள் ரக்ஷிக்கும் அத்தனையல்லது நம்முடைய சக்தியால் நம்மை ரக்ஷித்துக் கொள்ளுகை நம் பாரதந்த்ர்யத்துக்கு நாசமென்று ஸ்வசக்தியைக் கொண்டு கார்யம் கொள்ளாதொழிகை. ஆக, பிராட்டி சக்ரவர்த்தி திருமகனின் வில்லையே விச்வஸித்தாள். தன் சொல்லை (சாபமிட்டுத் தன்னைக் காத்துக் கொள்வதைச்) சார்ந்திருக்கவில்லை.

"உபாயத்துக்கு பிராட்டியையும், த்ரௌபதியையும், திருக்கண்ணமங்கை யாண்டானையும் போலே இருக்க வேணும்" என்று ஸ்ரீவசனபூஷணச் சூர்ணை ஒன்று இவ்விஷயத்தை விவரிக்கின்றது.

கீழ்க்கூறிய பிராட்டி முதலிய உபாயாதிகாரிகள் செய்ததென் என்னில்; பிராட்டி – " நாயகரான பெருமாள் நம்மை ரக்ஷிக்க வேணுமேயன்றி நம்முடைய சக்தியால் நாம் நம்மை ரக்ஷித்துக் கொள்ளுகை நம்முடைய பாரதந்திரியத்துக்குக் கெடுதியை விளைக்கு"மென்று தன் சக்தியைக் கொண்டு காரியங்கொள்ளா தொழிந்தாள். துச்சாஸநன் மிக்க பெருஞ்சபை நடுவில் துகிலை உரிகிறவளவில் த்ரௌபதி துகிலை இடுக்கிக் கொள்ள வேண்டிய லஜ்ஜையைத் துறந்து இரண்டு கையையும் விட்டாள். இது திரௌபதியினுடைய உபயாத்வஸாய நிஷ்டையைச் சொல்லுகிறது.

## திருக்கண்ணமங்கையாண்டான்

ஒரு சேவகனுடைய நாயை மற்றொரு ஸேவகன் அடிக்க அவன் பொறாமல் நாயை அடித்தவனோடே எதிர்த்துப் பொருது அவனைக் கொன்றுதானும் குத்திக் கொள்வதற்காக இருக்கிறபடியைக் கண்ட திருக்கண்ணமங்கையாண்டான் "ஒரு க்ஷுத்ர சேதநன் இந்த நாய் நம் அபிமானத்திலே ஒதுங்கிக் கிடக்கிறது என்னுமவ்வளவுக்காகத் தன்னை அழியமாறினபடி கண்டால், பரம சேதநனான எம்பெருமானுடைய அபிமாநத்திலே ஒதுங்கிக் கிடந்தால் அவன் அந்த ஆச்ரிதனுக்காக எவ்வளவு பரியக்கூடுமோ" என்று அநுஸந்தித்து அன்றுமுதல் தாம் ஸ்வரக்ஷண வ்யாபாரங்களையெல்லாம் விட்டு விட்டு அந்த நாயைப் போலே தம்மை அநுஸந்தித்துக் கொண்டு அப்போதே வந்து திருக்கண்ண மங்கையில் பத்தராவிப் பெருமாள் திருவாசலில் கோபுரவாசலிலுள்ள சிறிய அறையில் புகுந்து கண்வளர்ந்தருளினார். இது திருக்கண்ணமங்கையாண்டானுடைய உபாயாத்யவஸாய நிஷ்டையைச் சொல்லுகிறது. ஆகவே, பிராட்டி தன் சக்தியை விட்டாள்; த்ரௌபதி லஜ்ஜைவிட்டாள்; திருக்கண்ண மங்கையாண்டான் ஸ்வவ்யாபாரத்தை விட்டான் என்றதாயிற்று.

எம்பெருமானார் காலத்திலே ஒரு கல்தச்சன் கோசாலை கட்டுகிற போது ஒரு கல்லின் நடுவிலே தேரையும் தண்ணீரும் இருக்கக் கண்டு கல்லின் நடுவே இருந்த தேரைக்கு ஜீவநம் கல்பித்த ஈச்வரன் நமக்கும் நடத்துவர் என்று தொழிலை விட்டு பரந்யாஸம் பண்ணி திருமுடிக் குறையிலே நிர்வ்யாபாரனாயிருக்க, அதறிந்து அழகிய மணவாள பெருமாள் பிரதி தினமும் திருவொத்த சாதத்தைக் கொண்டு போய் அவனை புஜிப்பித்து கொண்டிருக்க, சிலகாலத்துக்குப் பின்பு அவன் மரித்த செய்தியைக் கேட்டு உடையவர் இன்றைக்கானாலும் அழகிய மணவாளப்பெருமாள் வெறும் தலையுமாய் சோறு சுமவாமல் சுகமாயிருப்பர் என்று அருளிச் செய்தார் என்று ஐதீகம் உண்டு.

### *விபீஷணச் சரணாகதி*

இலங்கை மண்ணைவிட்டுக் கிளம்பினவுடனேயே ராமகோஷ்டியிலே புகுந்தல்லது தரிக்கமாட்டாராய் லக்ஷ்மணனோடு எழுந்தருளியிருக்கிற ராமகோஷ்டி உத்தேசமாக இக்கரைக்கு வந்தார். சுக்ரீவனுக்கு விபீஷணனைக் கண்டதுமே கலக்கம் உண்டாகியிருந்தது. உடனே மற்ற வானரர்களைப் பார்த்து மரங்களையும், மலைகளையும் கையில் எடுத்துக் கொண்டு விபீஷணனை எதிர்த்துக் கொல்ல சித்தமாக இருக்கச் சொல்லுகிறார். அப்படித் தன்னை வதைக்க முயல்கிற வானரர்களைக் கண்டு விபீஷணன் சிறிதும் அஞ்சவில்லை. பிரதிகூலரான ராவணன் கோஷ்டியில் இருந்து வாழ்வதைக் காட்டிலும், பெரும் பாதகரானாலும் தன்னை வந்தடைந்தவர்களை கைவிடமாட்டாத தார்மிகரான ராமகோஷ்டியில் வந்து முடிந்தாலும் அதுவே அமையும் என்று வடகரைக்கு வந்து மேலே நின்றார். வானரர்களுக்கு உண்டான பரிவைக் கண்டு விபீஷணன் ஆச்சர்யப்படுகிறார்.இப்படிப்பட்ட பரிவை உடைய வாணரங்கள் நமக்காக புருஷகாரம் செய்யக்கூடும் என்ற நினைவாலே கேட்போர் மனம் இரங்கும்படி அதிக ஆர்த்தியோடே அந்த வானரர்களைப் பார்த்து சில ச்லோகங்களாலே கதறுகிறார் விபீஷணன்.

ராவணோநாம துர்வ்ருத்தோ ராக்ஷஸோராக்ஷஸேச்வர:
தஸ்யார்ஹம் அநுஜோப்ராதா விபீஷண இதிச்ருத:

என்று தொடங்கி ஐந்து சுலோகங்களாலே தம்முடைய தோஷத்தையும் தான் விடவேண்டியதை விட்டு பற்ற வேண்டியதைப் பற்றுவதையும் சொல்லிச் சரணம் புகுகிறார்.

இதில் முதல் சுலோகத்தாலே இராவணனுடைய தோஷத்தையும், அவன் ஸம்பந்தத்தால் தனக்கு உண்டான தோஷத்தையும் அதுதவிர தன் ஸ்வரூபத்தாலேயே தனக்கு உள்ள தோஷத்தையும் சொல்கிறார். இரண்டாம் சுலோகத்தில் "இராவணன், ராமனோடு ஒன்றிக்கிடந்த சீதாப்பிராட்டியை பிரித்ததோடு மட்டுமின்றி கொடூரமான ராக்ஷஸர்கள் மத்தியில் வைத்து ஹிம்ஸிக்கவும் செய்தான். உயிரான ஜடாயுவைக் கொன்றான். அப்படிப்பட்ட இராவணனுக்குத் தம்பி நான்" என்கிறான். மூன்றாம் நான்காம் சுலோகங்களில் "இப்படி அவன் பாபச் செயல்களைச் செய்தவுடன் அவனுக்கு சமயம் பார்த்து ஹிதத்தைச் சொன்னேன். என் வார்த்தைகள் அவன் செவியில் ஏறவில்லை என்னை பரிபவம் செய்தான் தன்மகன் சிறுபயல் இந்திரஜித்தைக் கொண்டும் என்னை அவமானமுறச் செய்தான். ஆகையால்

பெண்டுபிள்ளைகளையெல்லாம் விட்டு, விட்டு வுறவெல்லாம் ஸ்ரீராமன் தான் என்று ஸ்ரீராமனைச் சரணமாகப் பற்றுகிறேன்" என்றான்.

நிவேதயத மாம் க்ஷிப்ரம் விபீஷணம் உபஸ்திதம்.
ஸர்வலோக சரண்யாய ராகவாய மஹாத்மநே

விபீஷணன் வானரமுதலிகளைப் பார்த்து, நீங்கள் பகவானிடம் என்னைப் பற்றிச் சொல்லி புருஷகாரம் செய்ய வேண்டும் என்கிறார். பகவானுடைய மனத்தில் படும்படி நான் வந்தவிவரத்தைத் தெரிவிக்க வேண்டும். அப்படி நீங்கள் தெரிவித்து பகவான் என்னை அங்கீகரித்தால் தான் சரணாகதனை ரக்ஷித்தான் என்ற சிறப்பு பகவானுக்கு ஏற்படும். நீங்கள் தெரிவிக்காமல் அவனும் என்னை அங்கீகரிக்காமல் போனால் சரணாகதனைக் கைவிட்டான் என்ற பழியே அவனுக்கு ஏற்படும் என்கிறான்.பகவான் தன்னைக் கட்டாயம் ரக்ஷிப்பான் என்ற மஹாவிச்வாஸம் சரணம் பற்றுபவனுக்கு அவசியம் வேண்டும். ஸ்ரீராமனைப் பற்றிய சுக்ரீவனுக்கு அருள்புரிந்தமையைக் கண்டுநாமும்பகவானைக்கிட்டினால்நம்மையும் கட்டாயம் கைவிடமாட்டான் என்ற திட நம்பிக்கையுடனே விபீஷணன் பற்றியிருக்கிறான். ஸர்வலோக சரண்யன் என்கிற அவன் பெயர் நிலைத்திருக்க வேண்டுமானால் அவன் என்னை ரக்ஷித்தாகவேண்டும் என்கிறார். சுக்ரீவ கோஷ்டியின் நடுவே சரணம் என்று தன்னை யடைந்த விபீஷணனை ஏற்றுக் கொள்ள என்ன பாடுபடுகிறான் எவ்வளவு சமாதானங்களை அருளிச் செய்கிறான் எம்பெருமான். விபீஷணனை ஏற்றுக் கொள்ளக்கூடாது என்ற சுக்ரீவனையும் மற்றுமுள்ள வானரமுதலிகளையும் பலவிதங்களால் சமாதானப்படுத்தி தம்முடைய விரதமான சரணாகத ரக்ஷணத்தை எம்பெருமான் காத்தது நாம் அனைவரும் அறிந்ததே.

## அபய ப்ரதானம்

எம்பெருமானார் ஒரு சமயம் அபய ப்ரதானம் (விபீஷண சரணாகதி) பற்றி அருளிச் செய்து கொண்டிருந்தார். அப்போது பிள்ளையுறங்காவில்லி தாஸர் எழுந்து நின்று, "எல்லாவற்றையும் வாசனையோடே விட்டு வந்து ராகவனையே நஞ்சமாகப் பற்றி நின்ற விபீஷணனையே 'பிடியுங்கள்; கொல்லுங்கள்' என்ற ராம கோஷ்டிக்கு மாடு மனையோடு கூடியுள்ள அடியேன் எம்மாத்திரம்' என்று ஐயத்தோடு கூறி அழ ஆரம்பித்தார். உடனே .எம்பெருமானார் தாஸரைப் பார்த்து, "பிள்ளாய், பயப்பட வேண்டாம்; நான் பெற்றேனாகில் நீர் பேறு பெறுகிறீர்; பெரிய நம்பிகள் பெற்றால் நான்

பெறுகிறேன்; ஆளவந்தார் பெற்றால் பெரிய நம்பிகள் பெறுவர்; நாத முனிகள் பெற்றால் ஆளவந்தார் பெறுவர்; இப்படி 'அவா அற்று வீடு பெற்ற' என்று தம் வாயாலே அருளிய ஆழ்வாருக்குப் பேறு நிச்சயமான போது அவரடி உறவு கொண்ட நம் அனைவருக்கும் பேறு தப்பாது. தப்பாமைக்காகவே பிராட்டி 'அகலகில்லேன்' என்று அவன் மார்பைப் பற்றிக் கொண்டிருக்கிறாள். விபீஷணன் அங்கீகரிக்கப்பட்ட போதே அவனுடன் வந்த நால்வரும் அங்கீகரிக்கப்பட்டனரன்றோ. அதுபோலே உமக்கும் பேறு தப்பாதென்றிரும்' என்றருளினார். எம்பெருமானார் தாஸருக்காக அருளிச் செய்த வார்த்தை நம் அனைவருக்கும் பொதுவானதன்றோ.

### *பெரியவாச்சான்பிள்ளை*

ஒருசமயம் பெரியவாச்சான்பிள்ளையைச் சேவித்திருந்து அவருடைய சிறிய தாயாரின் குமாரர் புறப்படுகிற போது பிரிகிறோமே என்று மனம் கலங்க பிள்ளையும் கலக்கமேன் என்று கேட்டார். அதற்கு அவர், அநாதி காலம்நான் பண்ணின பாபத்தின் வாசனையின் பலத்தாலே மறுபடியும் பிறவிக்குக் காரணமான செய்கையில் ஈடுபடும்படியாகி அதனால் ஈசுவரன் என்னை மறுபடியும் பிறவியில் தள்ளப் போகிறானோ என்று அஞ்சுகிறேன் என்று பதில் கூறினார். ஆச்சான் பிள்ளையும் "இது யாருக்கு நஷ்டமென்றிருந்தாய்; உனக்காகவா அவன் சிருஷ்டி பண்ணினான்; உன் பிரயோஜனத்துக்காகவோ அவன் அவதாரங்கள் செய்தது; ஒருவனைப் பிடிக்கைக்காக ஊரை வளைப்பாரைப் போலே அகில ஜகத் ஸ்வாமியானமை அஸ்மத் ஸ்வாமியாகைக்காக வல்லவா (உலகங்களுக்கெல்லாம் ஸ்வாமியாயிருப்பது எனக்கு ஸ்வாமியாகைக்காகவல்லவா) ஆகையால், அவன் செய்யும் செயல்களெல்லாம் ஒரு ஆத்மாவைப் பெறுகைக்காகவே, எனவே பேறு, இழப்பு இரண்டும் தன்னுடையதாக அவன் ரக்ஷிக்கும் என்று கவலையற்றிரும்" என்று பதில் சொன்னார்.

## 4. பேற்றுக்குத்வரிக்கை

எம்பெருமானே ரக்ஷகன் என்று நம்பியிருந்தாலும் நாம் பெறக்கோரும் பேற்றின் பெருமை நெஞ்சில் பட்டு "தாவி வையங் கொண்ட தடந்தாமரைகட்கே கூவிக்கொள்ளும் காலம் இன்னம் குறுகாதோ" என்று "எப்போது பேறு ஸித்திக்கும்" என்று அதைக் கடுக அடைவதற்கு விரைந்து நிற்றலும் வேண்டும். மேற்கண்ட இரண்டும் ஒன்றுக்கொன்று முரணாகத் தோற்றலாமாயினும் முரண்பாடு ஒன்றுமில்லை. பற்றும் உபாயமான

ஸர்வேச்வரனின் பெருமை விச்வாஸத்தை உண்டாக்கியாக வேண்டும்; பெறப் போகும் பேற்றின் கனம் அதை விரைவில் பெற ஆசையுண்டாக்கும்.

"உபேயத்துக்கு ப்ரேமமும் தன்னைப் பேணாமையும் தரியாமையும் வேணும்" என்று காட்டுகிறது ஸ்ரீவசநபூஷணம். (85)

"உபேயத்துக்கு, இளைய பெருமாளையும் பெரியவுடையாரையும் பிள்ளை திருநரையூரரையரையும் சிந்தயந்தியையும் போலேயிருக்க வேணும்" என்பது பிள்ளைலோகாசார்யார் வார்த்தை (ஸ்ரீவசநபூஷணம்)

உபேயத்தில் அதிகரிக்கும் போது (1) சேஷியைப் பிரியாதே "எல்லாவடிமையும் அவன் ஏவினபடி செய்ய வேணும்" என்னும் ப்ரேமம் பிறக்க வேணும் (இளைய பெருமாளைப் போலே). (2) அத்தலைக்கு ஒரு கெடுதி வந்தால் அதுகண்டு ஆற்றாமல் தன் உடம்பை உபேக்ஷிக்கை வேணும் (பெரியவுடையார், பிள்ளைதிருநறையூரரைறயர் போலே). (3) அத்தலையோடே கூடி அநுபவிக்கப் பெறாவிடில் தரித்திருக்கமாட்டாமல் மூச்சடங்கும்படியான நிலையை நேரவேணும் (சிந்தயந்தியைப் போலே) என்று கருத்து.

## இளைய பெருமாள்

உபேயாதிகாரிகளில் தலைவரான இளைய பெருமாள் செய்ததென் என்னில்; மிக்க பசியுடையவர்கள் தங்கள் பசியின் கனத்தாலே "முன்பு சமைத்த சோறும் இப்போது சமைக்கிற சோறும் எல்லாம் நாமே உண்ண வேணும்" என்று பாரிப்பது போல், பெருமாள் காட்டுக்கு எழுந்தருளுகிற போது இளைய பெருமாள் தாமும் கூடப் புறப்படுவதாக முயன்றபடியைக் கண்டு பெருமாள் "நீர் நில்லும்" என்ன, நான் வில்லேந்தியவனாய் உமக்கு முன்னால் காட்டிற்கு கூடச் செல்வேன் என்கிறார்.

பவாம்ஸ்து ஸஹ வைதேஹ்யா கிரிஸாநுஷு ரம்ஸ்யதே
அஹம் ஸர்வம் கரிஷ்யாமி ஜாக்ரத: ஸ்வபதச்சதே

பெருமாளும் பிராட்டியும் கூடியிருக்கும் இருவருமான சேர்த்தியிலே அடிமை செய்யும் போதும், பர்ணசாலையில் எழுந்தருளியிருக்கும் போதும் மலை தாழ்வரைகளிலும் நதி ஜலங்களில் விளையாடிக் கொண்டிருக்கும் போதும் கைங்கர்யம் செய்யக் கடவேன். வேட்டையாடும் போது காவலாக இருந்தும், தேவரீரும் பிராட்டியும் கண் வளர்ந்தருளும் போது துஷ்ட மிருகங்களும் ராக்ஷஸ ஜாதியும் கிட்டாதபடி கையும் வில்லுமாய் நோக்கியும் அடிமை செய்ய கடவேன். வேட்டையாடப் போகும் இடத்தில் கையில் வில்லும் கொண்டு அடிமை செய்தும் காயும் கிழங்கும் வெட்டும் இடத்தில் மண்வெட்டியும்

கூடையும் சுமந்து அடிமை செய்தும் உணவை பக்குவம் செய்தும் இப்படி அடிமை செய்ய பெறாவிடில் நான் உயிர்தரியேன். என்னுடைய சேஷத்வ சொரூபம் நிலை நிற்பதற்காக கைங்கர்யம் கொண்டருள வேணும் என்று ப்ரார்த்தித்து காட்டிற்கு செல்ல முற்பட்டார்.

பிறகு கங்கையைக் கடந்து சென்றவளவிலே இவரைத் திருவயோத்திக்குத் திருப்பிப் போகவிடுவதாகப் பல அருளிச் செய்ய, அதற்கு

ந ச ஸீதா த்வயா ஹீநா ந சாஹமபி ராகவ
முஹூர்த்தமபிஜீவாவோ ஜலாந்மத்ஸ்யவிவோத்த்ருதௌ

பிராட்டியும் நானும் தேவரைப் பிரித்தால் உடனே நீரைப் பிரிந்த மீன் படுவது படுவோம் என்றும் சொல்லுகையாலே, எம்பெருமானைப் பிரியில் தாம் ஸத்தை பெற்றிருக்க மாட்டாமையை உணர்த்துகிறார்.

பர்ணசாலையைக் கட்டும் போது தேவரீரே அழகியதோர் இடத்தில் இப்படி இப்படி கட்டப்படவேண்டும் என கட்டளையிட வேண்டும் என்று லக்ஷ்மணன் கேட்டுக் கொண்டதற்கிணங்க ராமபிரானும் கட்ட வேண்டிய முறைகள் சிலவற்றைச் சொல்லியிருந்த போதிலும் இவனுக்கு எதனால் என்ன குறைவருமோ என்று சூழ்நிலைகளைப் பார்த்தும் தம் செல்லப்பிள்ளைக்கு தசரதசக்ரவர்த்தி செய்தவற்றை அறிந்த வனாகையால் ராமபிரானுடைய நினைவையறிந்து செய்தார். ராமபிரானுக்கு சேஷ பூதனாயிருக்கையே தனக்கு ஸ்வரூபமாயிருக்கும் போது அவருக்கு உபயோகப்படுவதைச் செய்வதே தனக்கு ஸ்வரூபம் என்றும் அவருக்காகச் செய்வதே சரியானது என்றுமிருப்பர். ராமபிரானும் தன்னுடைய தந்தை எனக்கு இறக்கவில்லை. தாமிருக்கும் போது எனக்கு வேண்டியவைகளை தாமே செய்தும், தாம் சென்ற பிறகும் அவைகளை செய்ய உன்னை வைத்துப் போனாரே என்று லக்ஷ்மணனை கொண்டாடும்படி சேஷத்வத்தின் எல்லை நிலையில் நின்றார்.

பிறகு வநவாஸம் முடிந்து திருவயோத்தியில் எழுந்தருளிப் பெருமாள் திருவபிஷேகம் பண்ணியருளின போது இளைய பெருமாள், தம்மோடு கூட அடிமை செய்கைக்கு ஒருவருமில்லாத தனிக்காட்டிலே தாம் ஒருவராகவே அடிமை செய்து கைங்கர்ய ருசியைப் பெருக்கிக் கொண்டபடியாலே ஸ்ரீபரதாழ்வான் முதலானாரோடு ஸமமாகத் தாமும் ஓரடிமை செய்து நிற்க மாட்டாமல் திருவெண்கொற்றக்குடையெடுக்கை, திருவெண் சாமரம் பணிமாறுகையாகிற இரண்டு அடிமையையும் ஏககாலத்திலே தாமே செய்தார். இது இலக்குமனனுடைய சேஷத்வத்தின் எல்லைநிலைக்கு ஓர் எடுத்துக்காட்டு.

## பெரியவுடையார்

"பெரியவுடையார் என்கிற ஸ்ரீஜடாயுமஹாராஜர் – பெருமாள் பஞ்ச வடியிலெழுந்தருளித் தம்மை அங்கீகரித்த நாள் தொடங்கித் திருவடிகளுக்கு மிகவும் அணுக்கராய்ப் பெருமாள் எழுந்தருளியிருக்கிற ஆச்ரமத்துக்கு அருகிலே வஸியா நிற்கச் செய்தே, பெருமாள் அருகில் இல்லாத சமயத்தில் அசிந்திதமாக இராவணன் வந்து பிராட்டியைப் பிரித்துக் கொண்டு போக, அப்போது பிராட்டி இவரை ஒரு மரத்தின் மேலே கண்டு "என்னை இவன் இப்படி அபஹரித்துக் கொண்டு போகாநின்றான்" என்று இவர் பேரைச் சொல்லிக் கூப்பிட, உறங்கிக் கொண்டிருந்த இவர் அக்கூக்குரல் கேட்டு உணர்ந்து இராவணன் கொண்டு போகிற படியைக் கண்டு "உனக்கு இந்த அநீதி ஆகாதுகாண்" என்று தர்மோபதேசம் பண்ணினவளவில் அவன் கேளாமையாலே "நாம் உயிரோட இந்தப் பரிபவத்தைக் கண்டிருக்கக் கடவோமல்லோம்; யுத்தம் பண்ணி மீட்குதல், இல்லையாகில் மரணமடைதல், ஆகிய இரண்டத்தொன்று செய்யக் கடவோம்" என்று துணிந்து அவனோடே பெரிய யுத்தத்தைப் பண்ணி அவன் கையாலே அடிபட்டு விழுந்து தம் திருமேனியை விட்டார்.

## பிள்ளை திருநறையூரரையர்

பிள்ளை திருநறையூரரையர், கீழ்நாட்டில் (தொட்டியம்) திருநாராயண புரமென்கிற திவ்ய தேசத்திலே வேத நாராயணப் பெருமாளை ஸேவிக்க வேணுமென்று ஸகுடும்பமாக அங்கு எழுந்தருளினவளவிலே சில ப்ரதிகூலர்கள் அந்த ஸந்நிதியிலே நெருப்பைப் பற்ற வைக்க, உள்ளிருப்பவர்களெல்லாரும் புறப்பட்டு ஓடிப் போகச் செய்தே அந்த எம்பெருமான் திருமேனிக்கு அழிவு வருகிறபடியைக் கண்டு பொறுக்கமாட்டாத ப்ரேமத்தின் கனத்தாலே தாமும் கூட முடிவதாக இவர் நிற்கையாலே மக்களும் இவரை விட்டுப் போகோம் என்றிருக்க ஸகுடும்பமாக திவ்ய மங்கள விக்ரஹத்தைக் கட்டிக் கொண்டு திருமேனியை விட்டார்.

## சிந்தயந்தி

கிருஷ்ணாவதாரத்தில் ராஸக்ரீடா ஸமயத்தில் கண்ணன் திருக்குழலோசையைக் கேட்ட ஆயர் பெண்கள் ஸ்ரீப்ருந்தாவநத்தேறப் போகப் புறப்பட்ட வளவிலே மாமியார் மாமனார் கட்டளையை மீறிப் போவார் சிலரும் அதற்கு அடங்கி நிற்பார் சிலருமாயிருக்க, ஒரு ஆய்ப்பெண்ணை அவளது

மாமனார் தடுத்து நிறுத்த அவரை மீறிப் போக மாட்டாமல் அங்கேயே நின்று கண்ணபிரானைத் தியானம் பண்ணி அவனிடத்தே நெஞ்சு பதித்திருக்கையாலே வந்த நிர்மல ஸுகத்தாலும், அவனைக் கிட்டப் பெறாமையாலுண்டான அளவற்ற துக்கத்தாலும் ஸகல புண்ய பாபங்களும் கழியப் பெற்று அவனைப் பெறாது தரிக்கமாட்டாமல் மூச்சடங்கி உயிர் நீங்கப்பெற்றாள்.

ஆக பகவானைக் கிட்டி அனுபவித்து அடிமைச் செய்பவனுக்கு இங்ஙனம் இளைய பெருமாளையும் பெரியவுடையாரையும் பிள்ளை திருநறையூரையரையும் சிந்தயந்தியையும் போலே விரைதல் இன்றியமையாதது என்று காட்டியுள்ளார்கள்.

## எம்பெருமானார்.

ஒரு அயன தினத்தன்று குன்றத்து சீயர் என்பவரிடம் எம்பெருமானார், "சிங்கப்பிரான் இன்றோடு ஒரு வருடம் முடிந்தது" என்று மகிழ்ச்சியோடு கூற, குன்றத்து சீயர் எம்பெருமானார் திருவுள்ளத்தில் நினைத்திருப்பது என்னவென்று அறியாமல் பேசாதிருக்க, எம்பெருமானார் பேற்றுக்கு விரோதியான இந்த சரீரம் முடிவடைவதற்கு ஓராண்டு கழியப் பெற்றதே என்று ஸ்ரீவைகுண்டத்தைச் சென்று அடையும் காலம் குறுகியதை மிக்க மகிழ்ச்சியோடு அருளிச் செய்ததாக ஒரு ஐதீஹ்யம் காணப்படுகிறது.

## நம்பிள்ளை

ஒருசமயம் நம்பிள்ளை நோயுற்றிருந்த போது பிள்ளை எங்களாழ்வான் என்ற ஸ்வாமியின் தூண்டுதலாலே அம்மங்கியம்மாள் என்கிற ஸ்வாமி ஒரு யந்த்ரத்தை (மந்திர சக்தி கொண்டது) நோய் போவதற்காக நம்பிள்ளையின் கையிலே வைத்துத் தொடப்புக, நம்பிள்ளை அதைப் பொறாமல் ஒதுங்கினார். ஒரு ஸ்ரீவைஷ்ணவனுக்குப் புருஷார்த்தம் பகவத் பாகவத குற்றேவல் தவிர வேறு கூடாதாகையாலும், த்வயம் தவிர வேறு மந்த்ரம் கூடாதாகையாலும் தன் சரீரத்துக்காகவும் ஆத்மாவுக்காகவும் தான் கரைதல் கூடாது. என்றும் கூறி இக்கார்யத்துக்கு நம்பிள்ளை இசையவில்லை. இதை எங்களாழ்வானும் அம்மங்கியம்மாளும் நம்பிள்ளையைப் பார்த்து 'உம்முடைய விஷயமாக நீர் செயல்பட்டாலன்றோ ஸ்வரூபஹாநி; உம் விஷயத்தில் நாங்கள் செய்தால் ஸ்வரூபஹாநி இல்லையே' என்றனர். அவர்களுக்கு நம்பிள்ளை, 'நான் இந்த நோயை நல்விருந்தாக எண்ணியுள்ளேன்' செய்ய வேண்டுவனவற்றைச் செய்து முடித்தவர்கள் தேசவிசேஷத்திலே சென்று எம்பெருமானை அடைந்து

அவன் திருவடிகளில் கைங்கர்யம் பண்ணப்போகும் காலத்தையே நோக்கியிருப்பார்கள். ஆகவே இந்தக் கார்யம் தனக்குத் தகாது என்றார்.

தன் அடியவர்களைப் பற்றிக் கூறும்போது கண்ணன் கீதையில்,

ஸததம் கீர்த்தயந்தோமாம் யதந்தஸ்ச த்ருடவ்ரதா:
நமஸ்யந்தஸ்ச மாம் பக்த்வா நித்யயுக்தா உபாஸதே

என்கிறான். அவர்கள் பக்தியோடு எப்போதும் என்திருநாமங்களை ஸங்கீர்த்தனம் செய்கிறவர்களாய், எப்போதும் என் விஷயமான முயற்சிகளைச் செய்கின்றவர்களாய், எப்போதும் என்னை வணங்குகின்றவர்களாய், என்னோடு என்றும் சேர்ந்திருப்பதை எப்போதும் விரும்புகின்றவர்களாய், எப்போதும் என்னை உபாஸிக்கிறார்கள் என்று கருத்து. ஏன் இப்படிச் செய்கிறார்கள் எனில் பக்தியாலே என்னை மிகவும் இனியவனாகக் கொண்டிருக்கையாலே என்னைப் பற்றி ஸங்கீர்த்தனம் செய்வது, முயல்வது, நமஸ்கரிப்பது முதலானவற்றைச் செய்யாவிடில் ஒரு கணத்தின் திவலையான நேரங்கூடத் தம் ஸ்வரூபம் தரிக்கப் பெறாதவர்களாய், கீர்த்தனம் முதலானவற்றைச் செய்கிறார்கள் என்று கருத்து. என்னுடைய ஸ்வரூபம், ரூபம், குணம், விபூதி, சேஷ்டிதங்கள் முதலானவற்றைச் சொல்லும் திருநாமங்களை நினைத்து எல்லா அவயங்களிலும் மயிர்க் கூச்செறியப் பெற்றவர்களாய், ஆனந்தத்தாலே தழுதழுத்த குரலை உடையவர்களாய், நாராயணன் முதலான பரத்வத்தைச் சொல்லும் திருநாமங்களையும், க்ருஷ்ணன்,வாஸுதேவன் முதலான ஸௌலப்யத்தைச் சொல்லும் திருநாமங்களையும், ஸ்வரூப ரூப குண விபூதிசேஷ்டிதங்களைச் சொல்லும் திருநாமங்களையும், அத்திருநாமங்களின் ஸப்தமாத்ரமே மிக இனியதாயிருக்கையாலே திரும்பித் திரும்பி அவற்றைச் சொல்வதே யாத்திரையாயிருக்கிறார்கள் என்று கருத்து.

உபாஸகர்களுக்குச் சொல்லப்படும் கீர்த்தன நமஸ்காராதிகள் எம்பெருமானைப் பற்றிக் கேட்டாலும் நினைத்தாலும் காலாழும் நெஞ்சழியும் கண் சுழலும் என்கிறபடியே ஸர்வாங்கங்களும் தளரும்படியான ஸ்வயம் ப்ரயோஜன பக்தியையுடைய மஹாத்மாக்களான ஆழ்வார்களுக்கும் மிகப் பொருந்துமாகையால் இந்த ஸ்லோகங்களிலெல்லாம் ஆர்த்தப்ரபந்நர்களான ஆழ்வார்களைத் திருவுள்ளத்தில் கொண்டே எம்பெருமானார் பாஷ்யமிட்டருளியிருக்கிறார் என்பது கூறிக் கொள்ளத்தக்கது.

## இடையாற்றுக்குடிநம்பி

திருவாய்மொழியில் கண்ணபிரான் தன் மலரடிப்போதுகளே எப்போதும் மனத்து ஈங்கு நினைக்கப்பெற வாய்க்குங்கோல் (7 10 4) என்ற பாசுரத்தில் ஆழ்வார் கண்ணபிரானுடைய மலர்ந்த திருவடித் தாமரைகளை இடைவீடின்றி இங்கேயிருந்து மனதில் நினைக்கும்படியான பாக்கியம் எப்போது வாய்க்குமோ என்று பொருள் அனுபவத்தைப் பெறுதலைவிட அதற்கு மநோரதிப்பதே பாரிப்பதே போக்யமாம். இதற்கு ஒரு ஐதீஹ்யம் உண்டு.

ஸ்ரீரங்கத்தில் பெருமாள் ஆண்டுதோறும் நாலு பிரம்மோத்ஸவம் கண்டருளுகிறார். இடையாற்றுக்குடிநம்பி என்பாரோடுவர் தம்முடைய ஊரிலிருந்து ஒவ்வொரு உத்ஸவத்திற்கும் திருமுனைக்கே எழுந்தருளி தீர்த்தவாரி முழுவதுமாக ஸேவித்துப் போய் மீண்டும் அடுத்த உத்ஸவம் வருந்தனையும் தாம் ஸேவித்தபடிகளையெல்லாம் இடைவிடாமல் நினைத்திருப்பதே போதுபோக்காக இருப்பாராம். அவருக்கு நூறு வயதாகி மூப்பினால் நம்மூர் விட்டு ஸ்ரீரங்கத்திற்கு செல்ல சிரமப்பட்டு ஒரு ப்ரம்மோத்ஸவத்திற்கு முதல் நாளே செல்ல இயலாமல் ஆறாந்திருநாளன்று சென்று பெருமாளை ஸேவித்தாராம். முதல் நாளன்றே இவர் வந்துள்ளாரா என்று பெருமாள் தேடிக் காணாமல் இடையாற்றுக்குடியான் நம் கண்ணால் காண வந்திலனே என்று திருவுள்ளம் வருத்தப்பட்டராம். ஆறாந்திருநாள் இவரைக் கண்டு மகிழ்ந்து நான் உமக்கு செய்யவேண்டுவதென் என்று பெருமாள் கேட்டருள, நம்பி ஒன்றும் கேளாமல் நீ தந்த சரீரத்தைக் கொண்டு பல திருநாள்கள் ஸேவித்தேன். அநுபவித்தேன். இப்பொழுது மூப்பு வந்து இவ்வுடல் போக்குவரத்துக்குத் தக்கதாக இல்லை என்று மட்டும் சொன்னார். பெருமாளும் நீ இங்கேயே இரு என்ன பெருமாள் அடுத்த வீதிக்கு எழுந்தருளும்போது நம்பி திருநாடலங்கரித்தார். பெருமாளையும் அவன் காணும் உத்ஸவங்களையும் இடைவிடாது அனுபவிக்கவேண்டும் என்ற நம்பியின் பாரிப்பை பெருமாள் அவருக்கு நித்யவிபூதியில் அனுபவமாக ஆக்கி வைத்தார் என்று தாத்பர்யம். இதுவும் பேற்றுக்குத்வரையாகும்.

## திர்யக்குகளின் கைங்கர்ய த்வரை

எம்பெருமான் ஸ்ரீராமானாக வந்தவதரித்த காலத்தில் குரங்குகள் தங்கள் ஸக்திக்குத் தகுந்தாற் போல் சில அடிமைகள் செய்தபோது, அணில்கள் நல்ல நெஞ்சத்தோடே தங்கள் ஸக்திக்குத் தக்கவாறு சில கைங்கர்யங்களைச் செய்ததை திருமாலையில் ஒரு பாசுரத்தில் விவரிக்கிறார்.

குரங்குகள்மலையைநூக்கக்குளித்துத்தாம்புரண்டிட்டோடித்
தரங்க நீரடைக்கலுற்ற சலமிலாவணிலும் போலேன்
மரங்கள் போல்வலியநெஞ்சம்வஞ்சனேன் நெஞ்ந்தன்னால்
அரங்கனார்க்காட்செய்யாதேஅளியத்தேனயர்க்கின்றேனே

மலைகளாலே கடலை அடைத்தபோது மலைகளைக் காட்டிலும் குரங்குகள் பல்லாயிரம் மடங்கு மிகுந்திருந்தமையாலே ஒருமலையைப் பலகுரங்குகள் கூடித் தொட்டுக் கொண்டு தூக்கி வந்ததைக் காட்டுகிறார். ஒவ்வொரு வாநர வீரரும் ஒவ்வொரு மலையை ஒரு சிறு கல்லைத் தூக்குவது போல தூக்கக் கூடிய பெரிய வலிமையை உடையவராயிருந்தபோதிலும், தங்கள் தொகைக்குத் தக்கபடி மலைகள் இல்லாமையாலே, ராமகைங்கர்யம் செய்ய வேணும் என்னும் ஆசையாலே பல குரங்குகள் ஒருமலையைத் தொட்டுக் கொண்டு தூக்கி வருகின்றன என்று கருத்து. விலங்குகளுக்கு இத்தகைய ஆசை ஏற்படக் கூடுமோ எனில் அடிமை கொள்பவர் வகுத்த ஸ்வாமியாகையாலே, அவர் கையும் வில்லுமாய் நிற்கும் நிலையைக் கண்டவுடன், ஸ்வரூப ஜ்ஞானம் உள்ளவர்களோடு இல்லாதவர்களோடு வாசியில்லாமல் துரும்பு போன்றவர்களுங் கூட கைங்கர்யம் செய்வார்களாகையாலே கூடும். மலையைக் கடலிலே போட என்று சொல்லாமல், தள்ளிக் கொண்டு வருவதைக் காட்டும் "நூக்க" என்னும் பதத்தை இட்டதற்குக் கருத்து என்ன? எனில் ஒரு வாநரக் கூட்டம் வந்து பற்ற அது முந்தியவர்கள் கையிலிருந்து பிந்தியவர்கள் கைக்குப் போய் இப்படி பல வாநரக் கூட்டங்களுடைய கைமேலே தள்ளப் பட்டே தரையைத் தொடாமல் மலை கடலிலே புகுகிறது என்று கருத்து. பெருமாள் பிராட்டியின் பிரிவாலே படாதபாடு, படுவதைப் பார்த்த வாநரவீரர்கள் கடல் அடைக்கும் கார்யத்தை ஒவ்வொருவரும் செய்ய வேண்டும் என்ற ஆர்வத்தாலே அனைவரும் ஈடுபட்டதைக் காட்டுகிறது. கடல் அடைக்கப் பட்டு, எப்போது நாம் அக்கரையை அடையப் போகிறோம் என்னும் வேகம் ஒவ்வொரு வாநர வீரனுக்கும் இருந்தபடியாலே எல்லோரும் இப்படிக் கார்யம் செய்தார்கள் என்று கருத்து.

வாநர வீரர்கள் கடலை அடைப்பதைச் சில அணில்கள் பார்த்துக் கொண்டிருந்தன. வாநரர்கள் கடல் அடைக்கும் வேகம் போதாதென்று அணில்களுக்குத் தோற்றிற்று. பெருமாள் பிராட்டியை மீட்க வேண்டுமென்று மிகுந்த ஆற்றாமையோடு இருக்கும் போது, இந்த வாநரர்கள் இவ்வளவு மெதுவாகக் கடலை அடைக்கின்றனரே, அதோடு இவர்களுக்குக் கடல் அடைக்கப் போதுமான ஸக்தி இல்லை. சந்துகளில் மணலை இட

ஆளுமில்லை என்றும் விளங்குகிறது. அதனால் தான் மலைகளுக்கிடையே உள்ள சந்துகளை அடைக்க மணல் கொண்டு போகாமல் இருக்கிறார்கள் என்று அணில்கள் எண்ணின. இக்குறையைப் போக்குவதற்காக அணில்கள் கடல் நீரில் மூழ்கித் தங்கள் உடலை நனைத்துக் கொண்டு, அணையில் மலைகளுக்கு இடையே உள்ள பகுதிகளுக்குச் சென்று அங்கு ஏற்கனவே தாம் கைகண்ட வழியிலே உடலை உதறி அந்த மணலைக் கொண்டு சந்துகளை அடைப்பதாக அபிமானித்து அடிக்கடி கடலில் மூழ்கி கரையில் மணலில் புரண்டு மலைகளின் சந்துகளுக்கிடையே மணலை உதறி, இந்த முறையிலே அணைகட்ட உதவிபுரியத் தொடங்கின.

இப்படி அடிக்கடி கடலில் மூழ்குவதால் கடலும் வற்றிப்போகும். கடல் அடைக்க மணல் கொண்டு வந்ததாகவும் ஆகும் என்று அணில்கள் கருதின. தாம் கடலில் மூழ்குவதால் சில துளி நீர்களே குறையும். அதனால் கடல் வற்றி விடாது. இவை உதறும் மணல் மிகக் குறைவாகையாலே பாறைகளுக்கிடையே உள்ள சந்துகள் அடைக்கப்பட மாட்டா என்று இவ்வணில்கள் அறியவில்லை. அடிமை செய்ய வேணும் என்ற வேகத்தாலும் அதனால் உண்டான கலக்கத்தாலும் இவ்வாறு செய்தன, அவ்வணில்கள் கடல் அடைப்பதற்காக இட்டிருக்கும் மலைகளுக்கு அருகிலுள்ள மணலில் புரண்டு அந்த மணலை உதிர்ப்பது போதாதென்று நினைத்து அதிகமான மணல் தம் உடலில் ஒட்டிக் கொள்ளும் என்னும் நினைவாலே, மணலில் புரண்டபின்பும் வெகு தூரம் ஓடிச் செல்கின்றன. உண்மையில் அப்படி ஓடுவதால் ஏற்கனவே உடலில் ஒட்டிக் கொண்டிருந்த மணலும் வழியில் உதிர்ந்து விடுகின்றன என்பதை இவை அறியவில்லை. வழியில் நின்ற வானர வீரர்கள் இவை இப்படி ஓடுவதைப் பார்த்து எதற்காக இவ்வளவு வேகத்தோடு ஓடுகிறீர்கள் என்று கேட்டால் பெருமாளுக்குப் பகல் உணவு லங்கையில் வடக்கு வாசலிலே ஆகவேண்டும் என்ற எண்ணத்தாலே நாங்கள் கார்யம் செய்கிறோம். உங்களுக்கு அவ்வளவு வேகமில்லையேஎன்று அணில்கள் பதில் கூறுகின்றன. பெருமாள் கார்யத்தில் உள்ள ஈடுபாடானது தம்மால் தாம் விரும்பும் இவ்வரிய செயலைச் செய்ய முடியுமா என்று ஆராயாதபடி செய்து விடுகிறது. உண்மையில் கைங்கர்ய த்வரை இதுதான்.

ஆழ்வார் பொங்குகின்ற கடலை அடைப்பதிலே மிகச் சிறிய அணில்கள் முயற்சி செய்தன என்று ஆச்சர்யப்படுகிறார். உண்மையில் கடல் அடைக்கிறவர்கள் தாங்களே என்றும் வாநரவீரர்கள் தங்களுக்கு கல் எடுத்துக் கொடுக்கும் சிற்றாள்களே என்றும் இவ்வணில்கள்

அபிமானித்திருக்கிறபடியைக் காட்டுகிறார். சலமிலா என்றதாலே இவ்வணில்கள் இக்கார்யத்தைக் கைங்கர்யமாகச் செய்கின்றனவேயொழிய இதற்குப் பயனாக வேறொன்றைக் கருதவில்லை என்று காட்டுகிறது. உண்மையில் இவ்வணில்கள் செய்யும் கார்யத்தாலே கடல் அடைப்பதற்கு அணுவளவும் உதவி இல்லாமல் இருக்க, இது எப்படிக் கைங்கர்யமாம் எனில் அடிமை கொள்ளும் எம்பெருமானுக்கு தாம் செய்யும் கார்யத்துக்கு ஒரு பயனைக் கருதாமல் இருக்கையாகிற நினைவில் பரிஶுத்தியே போதுமானது. கடல் அடைக்கப்பட்டு பெருமாள் விரைவில் அக்கரை சேர வேண்டுமே என்கிற நல்லெண்ணத்திலே இவைகளுக்குச் சிறிதும் குறைவில்லாமலிருப்பதைப் பெருமாள் பார்க்கிறாரே யொழிய இவை அரும் கார்யம் ஸாதித்தனவா என்று பார்க்க வேண்டிய அவச்யமில்லையே அவருக்கு. எல்லா விருப்பங்களும் என்றும் நிறைவேறப் பெற்றிருக்கும் எம்பெருமானுக்கு ஜீவனிடம் இத்தகைய நல்லெண்ணத்தைத் தவிர வேறொன்றும் வேண்டியதில்லை. எம்பெருமான் பூர்ணனாகையாலே நாம் ஓர் அணுவையிட்டாலும் அது கொண்டு த்ருப்தி அடைவான் என்று நினைத்துப் பயன் கருதாமல் கைங்கர்யம் செய்பவர்கள் பாக்யவான்கள். இளைய பெருமாளைப் போலே ஒழிவில் காலமெல்லாம் உடனாய் மன்னி வழுவிலா அடிமை செய்ய இட்டுப் பிறந்த அருமருந்தன்ன ஆத்மவஸ்துவன்றோ நாமெல்லாரும்.

## 5. இருக்கும் நாள் உகந்தருளின நிலங்களிலே ப்ரவணனாய் குணாநுபவகைங்கர்யங்களே போது போக்குகை

பரமபதத்திலே போய் பகவதநுபவ கைங்கர்யங்களை பண்ணுகையாகிற பேற்றில் த்வரை மிக்கிருப்பினும் இச்சரீரத்தோடே இருக்கும் நாள் வரை ஸர்வேச்வரன் உகந்த கோயில் கொண்டிருக்கும் திவ்ய தேசங்களில் மிக்க ஆர்வமுடையவனாய் ஆங்காங்கே எழுந்தருளியிருக்கும் எம்பெருமான் களுடைய திருக்கல்யாண குணங்களை அனுபவித்துக் கொண்டு மனோ வாக்காயங்களினால் எம்பெருமானுக்குக் கைங்கர்யம் செய்வதையே தனக்கு பொழுது போக்காக கொள்ளுதல் வேண்டும்.

"என் நெஞ்சமே எம்பெருமான் திருவுள்ளமுவந்து எழுந்தருளியிருக்கும் திருப்பதிகளுக்கெல்லாம் போந்து, அவனுடைய திருவடிகளைப் பாடி வளப்பம் பொருந்திய திருக்கோவலூரைச் சேவிப்போம் வருவாயாக" என்னும் பொருளை

தானுகந்த வூரெல்லாம் தன் தாள் பாடிப்
பூங்கோவலூர் தொழுதும் போது நெஞ்சே

என்கின்ற பாசுரத்தாலும்,

உலகத்தவர்களால் கொண்டாடப்படும் திருக்கண்டியூர், திருவரங்கம், திருமெய்யம், திருக்கச்சி, திருப்பேர், திருக்கடன்மல்லை ஆகிய இத்திருப்பதிகளைப் பற்றிப் போற்றிக் கொண்டு அவற்றை அடைந்தவர் எவரோ. அவர் உய்வை அடைவரே அல்லாமல் அங்ஙனம் செய்யாத மறையோர் உய்ய வழியுண்டோ? இல்லை என்பதை

உலகமேத்தும்கண்டியூரரங்கம்மெய்யம்கச்சிபேர்மல்லையென்று
மண்டினார் உய்ய லல்லால் மற்றையார்க்குய்யலாமே.

என்னும் பாசுரத்தாலும் திருமங்கைபாழ்வார் தெரிவிக்கிறார்.

ஒழிவில் காலமெல்லாம் உடனாய் மன்னி
வழுவிலா அடிமை செய்ய வேண்டும் நாம்
தெழிகுரலருவித் திருவேங்கடத்து
எழில் கொள் சோதி எந்தை தந்தை தந்தைக்கே.

என்றும்,

கார் கலந்த மேனியான் கைகலந்த ஆழியான்
பார் கலந்த வல் வயிற்றான் பாம்பணையான் சீர்கலந்த
சொல் நினைந்து போக்காரேல் சூழ்வினையினாழ்துயரை
என் நினைந்து போக்குவர் இப்போது.

என்று நம்மாழ்வார் பாரித்த படியும்

தரித்திருந்தேனாகவே தாராகணப்போர்
விரித்துரைத்த வெந்நாகத்துன்னை தெரித்தெழுதி
வாசித்தும் கேட்டும் வணங்கி வழிபட்டும்
பூசித்தும் போக்கினேன் போது.

என்று திருமழிசையாழ்வார் அருளிச் செய்துள்ளபடியும் எம்பெருமானுடைய குணங்களை வெளியிடும் ஸ்ரீஸூக்திகளை வாசித்தும் அவைகளைப் படிப்பதை கேட்டும் வணங்கியும் அதையே எப்போதும் செய்து கொண்டும் அவனை ஆராதிப்பதையே பொழுது போக்காக கொள்ள வேண்டும்.

திருவரங்கத் திவ்யதேசத்தில் தொண்டரடிப் பொடியாழ்வாருடைய அர்ச்சாவதார ப்ராவண்யம் கீழ்கண்டவாறு காட்டப்படுகிறது.

தொண்டரடிப்பொடியாழ்வார் அருளிச் செய்துள்ள திருமாலை என்ற திவ்யப்ரபந்தத்தில், இரண்டாவது பாசுரத்தில், பரமபதமாகிய அச்சுவைபெறினும் வேண்டாமென்றும், மூன்றாவது பாசுரத்தில், ஸம்ஸாரமாகிய இந்த லீலாவிபூதியும் வேண்டாமென்று தவிர்க்கிறார். "அச்சுவைப்பெறினும் வேண்டேன் என்று நித்ய விபூதியையும் வேண்டானென்கிறீர் ஆதலால் பிறவி வேண்டேன் என்று லீலா விபூதியையும் வேண்டானென்கிறீர். நின்றாலும் ஆணையிடுவேன் என்பது போலல்லவோ இது இருக்கிறது. நமக்கு இரண்டு விபூதிகள் தானே உள்ளது" என்று பெரியபெருமாள் திருவுள்ளமாக, இரண்டு விபூதிகளுக்கும் வெளிப்பட்டதாய், மூன்றாவது விபூதியான இத் திருவரங்கத்திலே எனக்கு ஓர் இருப்பிடம் கொடுக்கலாகாதோ என்கிறார்.

மூன்றாவது விபூதியான திருவரங்கத்திலே பேதை பாலகன் அதாகும் பிணிபசி மூப்புத் துன்பம் ஆகியவை இவையெல்லாம் இருக்காதோ என்று பெரியபெருமாள் திருவுள்ளமாக, அதற்கு பதில் அளிக்கிறார் ஆழ்வார். மூன்றாவது விபூதி என்று சொல்லலாம்படி திருவரங்கத்துக்குண்டான ஏற்றமென்ன எனில் இவ்வூரிலுள்ளார் ஒருவன் குழந்தையாயிருக்கும் போது அந்நப்ராஸனம் என்னும் ஸம்ஸ்காரத்தைச் செய்வதற்காக பெரியபெருமாளிடம் அக்குழந்தையைக் கொண்டு வருவர். சிறுவனாய் விளையாடும் போதும் மற்ற சிறுவர்களோடு சேர்ந்து கொண்டு செல்வர் எழுந்தருளுகிறபடியை விளையாட்டாக விளையாடுவான். யௌவனம் வந்த பின்பும் தான் விரும்பும் பெண்ணைக் காண்பதற்காகவாவது கோயிலுக்குள் வரநேரும். இப்படி பெருமாளுடைய நினைவு எல்லா நிலைகளிலும் ஏற்படுகையாலே பெருமாளுடைய வடிவழகும் இவ்வூரின் பாவனத்தன்மையுமாகச் சேர்ந்து சிறிது சிறிதாக இவனுக்கு மற்ற விஷயங்களில் உள்ள ஈடுபாட்டைப் போக்கிவிடும். முதுமைப்பருவம் வந்து கோயிலுக்குள் போகமுடியாதபடி அஸக்தி ஏற்பட்ட போதும், உத்ஸவ காலங்களிலே நம்பெருமாள் இவன் வாசலிலே வந்து நிற்பர். இப்படி இடைவிடாமல் நினைக்கையாலே இவன் கனவிலும் வடிவழகையே காணும்படி ஆகிவிடும். மிகப்புனிதமாகவும், இதில் வாழ்கின்ற மனிதர்களை நம்கதிக்கு அழைத்துச் செல்வதாகவும், அவர்களுடைய எல்லா இஷ்டங்களையும் கொடுப்பதாயுமிருக்கிறது. ஆகையால் தொண்டரடிப் பொடியாழ்வார் திருவரங்கத்தை மூன்றாவது விபூதி என்கிறார்.

### *திருக்கச்சிநம்பிகள்*

இவர் தினமும் தம்முடைய ஊரான பூவிருந்தவல்லியிலிருந்து காஞ்சிபுரத்திற்கு எழுந்தருளி பேரருளாளனுக்கு திருவாலவட்ட கைங்கர்யம் செய்து வந்தார். இதனால் பேரருளாளன் அவர்பக்கம் ப்ரீதியதிசயத்தோடு வார்த்தை சொல்லும் வழக்கத்தையும் கொண்டு இருந்தார் என்பதை குருபரம்பரையில் இருந்து தெரிந்து கொள்ளலாம்.

*கண்ணன் கீதையில்,*

அத சித்தம் ஸமாதாதும் ந ஸக்நோஷி மயி ஸ்திரம்
அப்யாஸயோகே ந ததோ மாமிச்சாப்தும் தநஞ்சய

என்று அருளிச் செய்கிறான். ஸப்தம் முதலான விஷயங்களிலேயே அநாதிகாலமாகப் பழகி அவற்றில் இழுக்கப்பட்ட நெஞ்சை எம்பெருமானிடம் வைக்க இயலவில்லையாகையால், ஸகல கல்யாண குணங்களையுமுடைய அவனிடம் ஒப்பற்ற அன்புடன் கூடிய நினைவைப் பழகுவதன் மூலம் அவனிடம் உறுதியாக நெஞ்சு செலுத்தப் பெற்று அவனையடைய விரும்புவாய். விஷயங்களில் ஈடுபடும் நெஞ்சை அவற்றிலிருந்து திருப்பி எம்பெருமானிடம் ஈடுபடுத்துவதற்கு அவனுடைய கல்யாணகுணங்களை அனுஸந்திப்பதே எளிய வழி அதுவே அப்யாஸயோகம் என்று கூறப்படுவதாக எம்பெருமானார் கீதாபாஷ்யத்தில் காட்டியுள்ளார்.

மேலும்,

அப்யாஸேப்யஸமர்த்தோஸி மத்கர்மபரமோ பவ
மதர்த்தமபி கர்மாணி குர்வந் ஸித்தி மவாப்யஸி

அருளிச் செய்கிறான். என்னிடம் நினைவைப் பழகுவதில் வல்லமை யில்லாதவனாகில் என் விஷயமான கர்மங்களைச் செய்வதில் பேரன்புடன் ஈடுபடுவாய். இவ்வண்ணமாக என் விஷயமான கர்மங்களைச் செய்வதாலும் விரைவிலேயே அப்யாஸ யோகத்தினால் என்னிடத்தில் உறுதிபெற்ற நெஞ்சையடைந்து என்னை அடைவாய், என்று கூறுகிறான் கண்ணன்.

என்னிடம் நினைவைப் பழகுவதற்கு நீ திறமையற்றவனாகில் என் விஷயமான கர்மங்களைச் செய்வதில் பேரன்புடன் ஈடுபடுவாய். ஆலய நிர்மாணம், நந்தவனம் அமைத்தல், திருவிளக்கெரித்தல், அர்ச்சாமூர்த்தி எழுந்தருளும் இடங்களைக் கூட்டுதல், நீர் தெளித்தல், மெழுகுதல், செப்பனிடுதல், கோலம் போடுதல், பூக்கொண்டுவருதல், திருவாராதனம்

செய்வித்தல், திருநாம ஸங்கீர்த்தனம் செய்தல், திருக்கோயிலை வலம்வருதல், துதித்தல் வணங்குதல் முதலான என் விஷயமான கர்மங்களைப் பேரன்புடன் செய்வாய். மிகவும் ப்ரஸித்தமானதான ஆலயநிர்மாணம், திருநாம ஸங்கீர்த்தனம் முதலிய கர்மமே இங்கு "மத்கர்ம" என்று சொல்லப்படுகிறது என விளங்குகிறது. 'மத்கர்மபரம:' என்றதால் அச்செயல்களைப் பேரன்புடன் இவன் செய்யவேண்டும். அதி பவித்திரமான பகவத்கர்மங்கள் பலவற்றை இவன் செய்கையாலும், ஒவ்வொரு கர்மத்தைச் செய்யும் போதும் எம்பெருமானை இவன் சிந்திக்கையாலும் எம்பெருமானைப் பற்றிய நினைவைப் பழகுவது இவனுக்கு விரைவிலேயே ஸித்திக்கும் என்று எம்பெருமானார் வ்யாக்யானித்து அருளினார்.

## எம்பெருமானார் அருளிச் செய்த ஆறு வார்த்தைகள்

எம்பெருமானார் திருநாட்டுக்கு எழுந்தருளும் முன்புதன் சிஷ்யர்களுக்கு அருளிச் செய்த ஆறு வார்த்தைகளுள் பகவத் குணாநுபவகைங்கர்யங்களே போது போக்குகையும் உகந்தருளின திவ்ய தேச வாசத்தைப் பற்றியும் வலியுறுத்தியுள்ளார்.

"ஆத்மயாத்ரை பகவததீனமாகையால், அதில் இவனுக்கு அந்வயமில்லை. உண்டென்று இருந்தானாகில் ஆத்மபர ஸமர்ப்பணம் பொய்யாகும். தேஹ யாத்ரை கர்மாதீனம். அதற்காகக் கஷ்டபட வேண்டாம். கரைந்தானாகில் நாஸ்திகனாகிறான். ஆனால் மநோவாக்காயங்களால் வேண்டிற்றைச் செய்து திரியலாகாது. அவற்றைக் கொண்டு இங்கிருக்கும் நாட்களில் பண்ணும் கைங்கர்யம் ஆறு உண்டு. அவையாவன:-

(1) ஸ்ரீபாஷ்யத்தை வாசித்து ப்ரவர்த்திப்பித்தல். அதற்கு யோக்யதை இல்லையாகில்.

(2) அருளிச் செயலைக் கேட்டு ப்ரவர்த்திப்பித்தல். அதற்கு யோக்யதை இல்லையாகில்,

(3) உகந்தருளின திவ்ய தேசங்களுக்கு அமுதுபடி, சாத்துப்படி, திருவிளக்கு, திருமாலை உண்டாகுதல்.

(4) அதுவும் மாட்டிலனாகில், திருநாராயணபுரத்தில் ஒரு குடில் கட்டி இருக்கவும் அதற்கு யோக்யதை இல்லையாகில்

(5) த்வயத்தினுடைய அர்த்தாநுஸந்தானம் பண்ணுதல். அதற்கு யோக்யதை இல்லையாகில்.

(6) என்னுடையவன் என்று அபிமானிப்பான் ஒரு ஸ்ரீவைஷ்ணவனுடைய அபிமானத்தில் ஒதுங்கி வர்த்தித்தல் செய்யலாம் என்று உடையவர் சிஷ்யர்களுக்கு நியமித்தருளினார்.

*எம்பெருமானார்உகந்தருளின திவ்ய தேஸங்களில் சில:*

## *திருவரங்கம்*

நம்முடைய கோயிலை திருத்திப் பணிகொள்ளக் கடவீர் என்று பெரிய பெருமாள் நியமிக்க கோவில் நிர்வாகம் அனைத்தையும் ஆய்ந்தருளி ஸ்ரீமத் ஸ்ரீரங்கராஜனுடைய சாஸனத்தின் படியே பெரிய கோயில் கைங்கர்யமானது குறைவின்றியே நடக்கும்படி கட்டளையிட்டருளி, நித்யோத்ஸவ பக்ஷோத்ஸவ மாஸோத்ஸவ, ஸம்வத்ஸரோத்ஸவங்களெல்லாம் குறைவற நடைபெறுமாறு சேமஞ் செய்தருளினார். இதனாலேயே "தென்னரங்கர் செல்வம் முற்றும் திருத்தி வைத்தான் வாழியே" என்கிற வாழி திருநாமம் இவருக்கு ஏற்பட்டது.

## *திருமலை*

இதர மதத்தவர்களால் திருமலையில் உள்ள பெருமாள் யாரென்று நிச்சயிக்க முடியாத இருந்த நிலையில் எம்பெருமானுக்கு ஆழியும், சங்கையும் அளித்து திருமலையில் உள்ள தெய்வம் பரத்துவமான திருவேங்கடமுடையான் தான் என்று நிர்ணயம் பண்ணினார்.

ஒரு சமயம் எம்பெருமானார் திருவாய்மொழிக்குப் பொருள் உரைத்துக் கொண்டிருந்தார். அப்போது 'ஒழிவில் காலமெல்லாம்' என்ற பதிகத்தில் சிந்துபூ மகிழும் திருவேங்கடம் என்ற தொடர் வந்ததும் தம் கோஷ்டியை நோக்கி, "திருவேங்கடமுடையானுக்கு நந்தவனம் திருந்திப் பூக்கொடுப்பார் இங்கு யாரேனும் உண்டோ" என்று கேட்டார். உடனே அநந்தாழ்வான். "அடியேன் அக்கைங்கர்யத்தை ஏற்றுக் கொள்கிறேன்; விடை தரவேணும்" என்றதும், ஸ்வாமியும் மிக உகந்து, "அப்படியே செய்க" என்று அநுமதி கொடுத்தனுப்பினார். அநந்தாழ்வானும் திருமலை சென்று திருநந்தவனம் திருத்தினார். இப்படி மலை திருத்தி நந்தவனம் செய்து அதற்கு ராமாநுஜன் என்று நாமம் சூட்டிப் பெருமானுக்கு நித்யமாகப் பூக்கொடுத்து வந்தார்.

## பெருமாள் கோவில் (காஞ்சீபுரம்)

எம்பெருமானார் சந்நியாசம் ஏற்பதற்கு முன்பு, சாலை கிணற்றிலிருந்து தினமும் எம்பெருமானுக்கு திருமஞ்சன தீர்த்த கைங்கர்யம் பண்ணிவந்தார்.

## திருநாராயணபுரம்

திருநாராயணனை கண்டெடுத்து, அவ்வூர் ராஜாவைக் கொண்டு மலைமேல் நாடாக்கி, பெருமாளுக்கு பெருங்கோவில் செய்து, பாஞ்சராத்ர முறைப்படி ஸம்ப்ரோக்ஷணாதிகளைச் செய்து நித்ய திருவாராதனம் நடைபெறும்படி செய்தார். உத்ஸவ மூர்த்தியை டெல்லி பாதுஷாவிடமிருந்து கொண்டு வந்து எழுந்தருளப் பண்ணி, பிரதிஷ்டை செய்து ஆராதனைக்கு தக்கவாறு ஐம்பத்திருவரை அங்கு குடியேற்றி அவர்களுக்குத் தக்க காரியங்களை நியமித்து உத்ஸவங்களை நடத்திக் கொண்டு போகும்படி ஏற்பாடுகளை செய்தார்.

## திருக்குறுங்குடி

உடையவர் திருக்குறுங்குடி எம்பெருமானை ஸேவித்து நிற்கும் அளவில், பெருமாள் அர்ச்சமுகேன, "ராமக்ருஷ்ணாத்யவதாரம் செய்து சேதநரைத் திருத்தப் பார்த்தவிடத்தில் அவர்கள் ஆஸுரப்ரக்ருதிகளாய் நம்மை வந்து சேர்ந்தார்களில்லை. நீர் இத்தனை பேரையும் எங்ஙனே திருத்தினீர்?" என்று கேட்டார். கேட்டதோடு நில்லாது உடையவருக்கு ஆசார்ய ஸ்தானமாக ஸிம்ஹாசனமிட்டு பெருமாள் கீழே ரத்ன கம்பளத்திலே இருந்து கேட்க, திவ்ய ஆசனத்தில் ஆசாரியரான பெரிய நம்பி இருப்பதாக நினைத்து உடையவர் நிலத்திலேயே இருந்து பெருமாள் வலத்திருச்செவியில் "த்வயத்தை" உபதேசித்து "ஸ்ரீவைஷ்ணவ நம்பி" என்கிற தாஸ்ய நாமமும் அவருக்கு இட்டருளினார்.

## திருச்சித்திரகூடம்

சோழராஜனின் உபத்ரவத்தால் திருச்சித்திரகூடத்திலிருந்த உத்ஸவ மூர்த்தியான கோவிந்தராஜர் திருப்பதிக்கு எழுந்தருளினார் என்று சிலர் சொல்லக் கேட்டு உடனே திருப்பதிக்கு எழுந்தருளி கோவிந்தராஜனுக்கு கோவிலெழுப்பி பிரதிஷ்டை செய்து வைத்தார்.

## திருமாலிருஞ் சோலை

ஒருசமயம் எம்பெருமானார் நாச்சியார் திருமொழிக்கு உரையருளுகின்ற போது, "நாறு நறும் பொழில்" என்ற பாட்டு வந்ததும் ஆண்டாளின் திருவுள்ளத்தை செய்துமுடிக்க வேண்டும் என்று எண்ணித் திருமாலிருஞ்சோலை மலைக்கு எழுந்தருளி கோதையின் திருவுள்ளப்படி நூறு

தடா வெண்ணெயையும் நூறு தடா நிறைந்த அக்கார அடிசிலையும் (சர்க்கரைப் பொங்கல்) பெருமாளுக்குச் சமர்ப்பித்து, அப்படியே ஸ்ரீவில்லிபுத்தூருக்கு எழுந்தருளி ஆண்டாளை வணங்கி நின்றார். அப்போது ஆண்டாளும் தம் மனோரதத்தைப் பூர்த்தி செய்ததற்கு அர்ச்சகர் மூலமாக 'நம் கோயிலண்ணர்' என்று கூறி தீர்த்த ப்ரஸாதங்களும் நல்கினாள். இதனால் ஆண்டாளுக்கும், "பெரும்பூதூர் மாமுநிக்குப் பின்னானாள் வாழியே" என்ற வாழி திருநாமம் ஏற்பட்டது.

## *பட்டர் திருவரங்க நாதனை அநுபவித்தது*

பட்டர் அழகிய மணவாளப் பெருமாள் என்னும் போதும், அனந்தாழ்வான் திருவேங்கடமுடையான் என்னும் போதும், அவர்களுடைய ஈடுபாடெல்லாம் தோற்றும்படியிருக்கும் என்றருளிச் செய்வாராம் நஞ்சீயர்.

வீரசுந்தரப் ப்ரஹ்மராயன் என்ற சிற்றரசன் ஒரு சமயம் பட்டரை ஸ்ரீரங்கத்தில் இருக்கவொட்டாது மிகவும் உபத்திரவிக்க பட்டர் யாரோடும் சொல்லாது கோயிலினின்று புறப்பட்டுத் திருக்கோட்டியூர்க்கு எழுந்தருளலானார். பிறகு அவர் திருக்கோட்டியூரில் எழுந்தருளியிருக்கும் போது, திருவரங்கத்தையும் பெருமாளையும் விட்டுப் பிரிய நேர்ந்ததைக் குறித்து மிகவும் கிலேசித்து, திருவரங்கப் பெருங்கோயிலிற் பிரணவாகார விமானத்திலே சேஷசயனத்தில் திருமகளும் நிலமகளும் திருவடிவருட வலக்கைகீழ் கொடுத்துப் பள்ளி கொண்டு அருள்கின்ற இந்திர நீலமணிவண்ணனான கமலக்கண்ணனை எளியேன் நணுகிக் கண்ணாரக் கண்டு வாயார வாழ்த்துவது எந்நாளோ! என அரற்றிக் கொண்டிருந்தார்.

இவ்வாறு நிகழ்கிற காலத்தில், பட்டர் திருவுள்ளத்தைக் கலக்கிப் பாகவத விரோதம் செய்தவனான வீரசுந்தரன் இறந்து போக, அது கேட்டளவிலே, பட்டர் திருக்கோட்டியூரிலிருந்து புறப்பட்டு ஸ்ரீரங்கத்துக்கு எழுந்தருளும் காலத்துத் திருக்காவிரியாற்றினருகே வந்தவாறே, இத்திருப்பதியைச் சிலகாலம் பிரிந்திருக்க நேர்ந்த வருத்தமும் இப்போது வந்து கூட நேர்ந்த மகிழ்ச்சியும் விரவி ச்லோக ரூபமாக வெளிப்படத் தொடங்கவே, அத் திருக்காவிரியில் படிந்தது முதலாகவே தம்முடைய ஸ்ரீரங்கதிவ்யதேச அனுபவங்களை வெளியிடும் முறைமையிலே ஸ்ரீரங்கராஜஸ்தவம் எனும் அற்புதமான ஸ்தோத்ரம் திருவவதரித்தது. இது பூர்வசதகம், உத்தரசதகம் என இரண்டு பிரிவுகளை கொண்டது. இந்த ஸ்தோத்ரம் பட்டருக்கு ஸ்ரீரங்க திவ்ய தேசத்தின் மீதிருந்த ஆழ்ந்த ஈடுபாட்டை விவரிக்கிறது.

ஒரு கைசிக துவாதசியன்று பெருமாள் ஸந்நிதியிலே பராசரபட்டர் கைசிகபுராணம் வாசித்தருளிய அழகினில் உகந்து, "பட்டரே! உமக்கு மேல் வீடு தந்தோம்" என்று அருளிச் செய்ய இவரும் "மஹாப்ரசாதம்" என்று அங்கீகரித்தருளி பெருமாள் தம்மை விசேஷகடாக்ஷம் செய்தருளின உபகாரத்தைச் சிந்தித்து, "நாயன்தே! ஆசன பத்மத்திலே அழுந்தியிட்ட திருவடித் தாமரைகளும் அஞ்சேல் என்ற கையும் கவித்த முடியும் முறுவல் பூரித்த சிவந்த திருமுகமண்டலமும் திருநுதலில் கஸ்தூரித் திருநாமமும் பரமபதத்தில் கண்டிலேனாகில் ஒரு மூலையடியே முறித்துக் கொண்டு குதித்து மீண்டு வருவேன்" என்று கூறினார்.

## நஞ்சீயரின் அநுபவம்

நஞ்சீயர் திருவாய் மொழி வியாக்யானம் அருளிச் செய்யும் போது, தம்முடைய அனுபவமாக ஒரு நிகழ்ச்சியை எடுத்துக் கூறுகிறார்.

பராங்குச நாயகி நிலையில் நம்மாழ்வார் திருவல்லவாழிலே எழுந்தருளியிருக்கும் எம்பெருமானைச் சென்று அடைய வேண்டும் என்று புறப்பட்டுச் சென்று, அவ்வவளவு தூரம் செல்லமுடியாமல் நடுவே தளர்ந்து விட்டாள். திருவல்லவாழ் நகரில் எழும் ஆரவாரங்களையெல்லாம் செவிப்பட்டும் அங்கே போகமுடியாமல் தாம் வருத்தப்படுகிறபடியை அருளிச் செய்கிறார் ஒரு திருவாய்மொழியில். இப்பதிகத்தை விளக்கும் போது நஞ்சீயர், "இதே போன்ற நிலையை ஒருமுறை மேல் நாட்டிற்குச் சென்றுவிட்டு மறுபடியும் திருநாளிற்காகத் திருவரங்கத்திற்கு விரைவாக வந்தேன். திருக்கரம்பன் துறையருகில் வந்தபோது திடீரென்று ஆற்றில் வெள்ளம் புரண்டோட, இரவெல்லாம் இக்கரையிலேயே தங்கியிருக்க நேர்ந்தது. அக்கரையில் நடைபெறுகிற திருநாளின் ஆரவாரமெல்லாம் காதில் விழச்செய்தேயும், அங்கே உடனே செல்ல முடியாமல் மிகவும் துன்பமடைந்தேன். அதே போன்ற நிலை தான் இங்குப் பராங்குச நாயகிக்கும்" என்று அழகாக விளக்கினார்.

திருமங்கையாழ்வார் அருளிச் செய்துள்ள பெரிய திருமொழியில் ஒவ்வொரு பதிகத்திலும் ஒரு திவ்யதேசத்தை மங்களாசாஸநம் செய்துள்ளார். ஆனால் "ஒருநல்சுற்றம்" என்று தொடங்கும் திருமொழியில் பத்துப் பாசுரங்களிலும் பற்பல திவ்யதேசங்களைப் பற்றி அருளிச் செய்கிறார். இப்படிப் பல திவ்ய தேசங்களை ஒரே பதிகத்தில் அருளிச் செய்வதன் கருத்து என்ன என்று நஞ்சீயர் கேட்டார். இதற்கு பட்டர், "புதிதாகத் திருமணமாகிய பெண் பிறந்த வீட்டிலிருந்து புகுந்த வீட்டிற்குச் செல்லும் போது நெடுநாள் தன்னுடன்

பழகியவர்களிடமும், உறவினர்களிடமும் தான் புகுந்த வீட்டிற்குச் செல்வதைச் சொல்லிக் கொண்டு செல்வது போல, ஆழ்வாரும் புக்ககமாகிய பரமபதத்திற்குச் செல்வதற்கு முன்னர் தான் மிகவும் ஈடுபட்ட திவ்யதேசங்களில் சொல்லிக் கொண்டு போகிறார்'' என்று விடையளித்தார்.

## அனந்தாழ்வானின் அர்ச்சையில் ஈடுபாடு

அனந்தாழ்வான் சோழ குலாந்தகனிலே பயிர்த் தொழில் செய்து கொண்டிருந்த ஒரு ஸ்ரீவைஷ்ணவனைக் கண்டு உம்முடைய ஊர் எது என்று கேட்க என்னுடைய ஊர் திருக்கோளூர் என்ன அங்கு நின்றும் இங்கு வந்தது எதனால் என்று கேட்க தேக யாத்திரை நடவாமே இங்கு வந்தேன் என்று கூற அவ்வூரில் ஒரு கழுதை மேய்த்தாவது ஜீவித்திருக்க மாட்டாயோ நிலை நின்ற ஜீவனத்தை விட்டுப் போந்தாயே என்றாராம். எம்பெருமான் உகந்து கோயில் கொண்டுள்ள திவ்ய தேஸங்களில் வாசத்தை விட்டு ஜீவனத்தைத் தேடி வேறு ஊருக்குச் செல்வது பாலைவனத்திலே வாழ்வதை ஒக்கும் என்று கருத்து.

''திருக்குறுங்குடியதன் மேல் இவைபத்தும் அறியக்கற்று வல்லார் வைட்டணவர் ஆழ்கடல் ஞாலத்துள்ளே'' என்பது ஆழ்வார் திருவாக்கு. ''இத்திருவாய்மொழியை அப்யஸிக்க வல்லார் (கற்றறியவல்லவர்) ஸம்ஸாரத்திலே இருக்கச் செய்தே வைஷ்ணவர்கள்'' என்கிறார் ஆழ்வார். ஸ்ரீவைகுண்டத்திலே நித்யஸூரிகள் நடுவே இருக்கிற இருப்பிலுங் காட்டில் திருக்குறுங்குடியில் நிற்கிற நிலையிலே குணாதிக்யமுள்ளது என்று நன்கறிந்து அவன் உகந்தருளின நிலமான திருக்குறுங்குடி திவ்யதேசத்திலே வாசம் செய்பவர்கள், மருமபூமியான ஸம்ஸாரத்திலே இருக்கச் செய்தே நித்ய ஸூரிகளோடொக்கச் சொல்லலாம் படியாவர்கள் என்கிறார் ஆழ்வார். மருமபூமி என்பது பாலைவனத்தை, உகந்தருளின நிலம் என்பது அவன் உகந்து கோயில் கொண்டுள்ள திருக்குறுங்குடி திவ்யதேசம். இது எல்லா உகந்தருளின நிலங்களான திவ்யதேசங்களுக்கும் திருத்தலங்களுக்கும் ஒக்கும்.

## 6. ஸ்ரீவைஷ்ணவர்களேற்றம் அறிந்து உகந்திருக்கை

ஸ்ரீவைஷ்ணவர்களைக் கண்டால், சந்தன குஸும தாம்பூலாதிகளைப் போலேயும், நிலாத்தென்றல் சந்தனம் போலேயும், அபிமதவிஷயம் போலேயும் உகந்து ''இருள் தருமா இந்த உலகத்திலும் இப்படிப்பட்ட உத்தம அதிகாரிகளைக் காணப் பெற்றோமே'' என்று அவர்கள் பெருமையறிந்து

அவர்களிடம் ஆதரம் காட்டுகையாகிற உயர்ந்த கருத்தை இந்த வாக்யம் உணர்த்துகிறது.

முன் இயம்பிய யாவும் ஒருவருக்கு ஏற்படினும் இப்பெருந்தகைமை உண்டாதல் அருமையினும் அருமையே! இஃது ஒரு வைணவருக்கு இருத்தல் இன்றியமையாதது என்றும் அவ்வைணவரின் பெருமை இன்னதென்றும் பிள்ளைலோகாசாரியர் ஸ்ரீவசனபூஷணத்தில் "வேதகப் பொன்போலே யிவர்களோட்டை ஸம்பந்தம்" என்றும், "இவர்கள் பக்கல் ஸாம்ய புத்தியும் ஆதிக்ய புத்தியும் நடக்க வேணும்" என்றும், "அதாவது, ஆசார்ய துல்யரென்றும் சம்சாரிகளிலும் தன்னிலும் ஈசுவரனிலும் அதிகரென்றும் நினைக்கை" என்றும் அருளிச் செய்துள்ளார்.

ஈதன்றியும் ஆழ்வார், இதைக்குறித்துப் பயிலுஞ்சுடரொளியிலும், நெடுமாற்கடிமையிலும் பரக்கப் பேசியிருக்கிறார். திருமங்கையாழ்வாரும், "கண்சோர வெங்குருதி" என்னும் திருமொழியில், சேறை எம்பெருமானிடத்தில் அன்புடையவர் என் சிரசின் மேலிருப்பவர்; கைங்கரியத்தில் நித்திய சூரிகளிலும் சிறந்தவர், அவர் தமை பிரிந்து ஆற்றகில்லேன். அவர்கள்பால் என் இருதயம் தேனூறி எப்பொழுதும் இனிதாயுள்ளது. அவர்களை நெஞ்சில் நினைக்கில் கூற்றுவனுக்கும் பாபத்திற்கும் அஞ்ச வேண்டுவதில்லை, என்னும் பொருள்பட அருளிச் செய்துள்ளதை நோக்க வேண்டும்.

உண்மையான ஸ்ரீவைஷ்ணவன் என்பவன் யார் என்ற ஸ்ரீவைஷ்ணவலக்ஷணத்தை நஞ்சீயர் அருளிச் செய்துள்ளார். அதாவது "உலகில் ஒருவன் துன்பப்பட்டுக் கொண்டிருக்கும் போது, "ஐயோ பாவம்" என்று இரக்கப்படுபவனே உண்மையான ஸ்ரீவைஷ்ணவன்: "நன்றாகப் படட்டும்; அவனுக்கு இத்தனையும் வேண்டும்" என்று நினைப்பவன் வைஷ்ணவனே அல்லன்" என்பாராம் நஞ்சீயர்.

"ஸ்ரீவைஷ்ணவர்கள்பால் நஞ்சீயருக்குண்டான பெருமதிப்பைப் பல இடங்களில் குறிப்பிடுகின்றார் நம்பிள்ளை. "அடியாரடியார்தம் அடியாரடியார் தமக்கு அடியார் அடியார்தம் அடியார் அடியோங்கே" என்றருளிச் செய்கிறார் நம்மாழ்வார். இப்படி எம்பெருமானுடைய அடியவர்களுடைய அடியவர்க்கு அடியவராக இருத்தலை ஆழ்வார் விரும்புவது போல் உலகோர் எவரும் ஆசைப்படுவதில்லை.. மற்றவர்களுக்கு மேலே மேலே தாம் இருக்க வேண்டும் என்று தான் அனைவரும் விரும்புகிறார்கள். இவ்விடத்தை நஞ்சீயர் அருளிச் செய்த போது, "இப்படி ஸ்ரீவைஷ்ணவர்களை விரும்புவது உலகோடு

பொருந்தாது என்றாலும், ஆழ்வார் விரும்பியதையே நாமும் விரும்பினோம் ஆகிறோம்'' என்றருளிச் செய்தார்.

## குலசேகர ஆழ்வாருக்கு வைணவரிடத்தே ஈடுபாடு

குலசேகர ஆழ்வார் தாம் அரசராய் இருந்த போதிலும், அரச போகங்களில் பற்றற்றவராய் ஸ்ரீவைஷ்ணவர்களைக் கண்டால் எதிர் கொண்டழைத்து, விசேஷமாய் உபசரிக்கும் பாகவத நிஷ்டையை உடையவராய் இருந்தார். இதிஹாஸ புராணங்களைக் கேட்பதில் ஆர்வம் உடையவராயும் திருவரங்கம் சென்று பெரிய பெருமாளை சேவிப்பதற்கும் ஆர்வம் உடைய வராயிருந்தார். "இவர் அங்கு சென்று பெரிய பெருமாளை ஸேவித்தால் மீண்டு வரமாட்டார்'' என்பதை உணர்ந்த மந்திரிகள் இவரது யாத்திரையைத் தடுத்து நிறுத்த ஓர் உபாயம் செய்தனர். அதாவது இவர் ததீயாராதனம் செய்வதில் மிக விருப்பம் உடையவராதலால், இவர் யாத்திரைக்குக் குறித்த நாளன்று ஏராளமான ஸ்ரீவைஷ்ணவர்களை வரவழைத்து, இவர் திருமுன்பே அனுப்பினர். இவரும் 'எம்பெருமானை ஆராதிப்பதிற்காட்டில் அவன் அடியார்களை ஆராதிப்பது தலைசிறந்தது'' என்று உணர்ந்தவராகையாலே, அவர்களை உபசரிப்பதற்காக யாத்திரையை நிறுத்தி விட்டார். இப்படியே இவர் ஸ்ரீரங்கம் செல்ல நாள் குறித்த போதெல்லாம் ஸ்ரீவைஷ்ணவர்களை அனுப்பி இவர் ஸ்ரீரங்கம் செல்லாமல் தடுத்து வந்தனர் மந்திரிகள். இவ்விஷயமே இவருடைய புகழ்பாடும் தனியன் ஒன்றில் "குஷ்யதே யஸ்ய நகரே ரங்க யாத்ரா திநே திநே'' (எவருடைய தலைநகரில் ஸ்ரீரங்க யாத்திரையைப் பற்றிய பேச்சு தினந்தோறும் முழங்குகிறதோ) என்று கூறப்படுகிறது.

இவரது அரண்மனையினுள்ளும் ஆலோசனை மண்டபத்திலும், மற்றும் அந்தரங்கமான இடங்களிலும் பாகவதர்கள் எக்காலத்திலும் போய் வருவதற்கு உரிமைப் பெற்றிருப்பதைக் கண்டு, பொறாமை கொண்ட சில மந்திரிகள், அவர்களிடம் குலசேகருக்கு வெறுப்பை உண்டாக்கக் கருதினர். அதற்காக ஒரு ஸ்ரீராமநவமி உத்ஸவத்தன்று, எம்பெருமானுக்குத் திருமஞ்சனம் நடைபெறும்போது, அதில் அனைவரும் ஈடுபட்டிருக்கையில், களைந்து வைத்திருந்த திருவாபரணங்களில் விலை மதிக்க முடியாததொரு முத்துமாலையை ஒருவரும் அறியாதபடி ஒளித்து வைத்தனர் மந்திரிகள். திருமஞ்சனம் முடிந்த பின்பு மாலையைக் காணாத அர்ச்சகர்கள் அரசனிடம் அறிவிக்க அவர் மந்திரிகளை அழைத்து "கள்வனை விரைவில் தேடிப் பிடியுங்கள்'' என்று கட்டளையிட்டார். அப்போது மந்திரிகள் அரண்மனையில் தங்கு தடையின்றி எங்கும் புக்கு திரியும் ஸ்ரீவைஷ்ணவர்களில் ஒருவரே

இம்மாலையை எடுத்திருக்க வேண்டும் என்று பழி சுமத்தினர். அது கேட்ட ஆழ்வார் செவி புடைத்து மந்திரிகளைக் கடிந்து எம்பெருமான் அடியார்கள் ஒருநாளும் இவ்வடாத செயலை நினைக்கவும் மாட்டார்கள் என்று கூறி பாம்பை உள்ளிட்டதொரு குடத்தை வரவழைத்து ஸ்ரீவைஷ்ணவர்களில் எவரேனும் அடாத செயலை செய்திருந்தால் இப்பாம்பு என்னை தீண்டிக் கொல்லட்டும். அப்படியல்லாமல் அவர்கள் பரிசுத்தராகில் இது என்னை தீண்டாது விடட்டும் என்று சபதம் செய்து அந்த குடத்தினுள்ளே கைவிட்டார். அப்போது சத்தியத்திற்கு கட்டுப்படும் இயல்புடைய ஸர்ப்பம் இவரை தீண்டாது தனிந்திருந்தது. இதை கண்ட அமைச்சர்கள் தங்கள் தவறை உணர்ந்து ஒளித்து வைத்திருந்த ஆபரணத்தை ஸமர்ப்பித்து, தாம் செய்த பெரும் பிழையை பொறுத்தருளுமாறு ஆழ்வாரை சரணடைந்தனர். ஆழ்வாரும், ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு செய்த பெரும் பிழைக்கு பிராயசித்தம் இனி எப்போதும் அவர்களுக்கு பணிவிடை செய்வதேயாகும். அதையே தேஹ யாத்திரையாக கொள்வீர்களாக என்று நியமித்து விட அவர்களும் அவ்வண்ணமே பாகவத கைங்கர்ய பரர்களாக இருந்து பேறு பெற்றனர்.

ஸ்ரீவசநபூஷண ஸ்ரீஸூக்தியொன்று சிறந்த ஸ்ரீவைஷ்ணவ லக்ஷணங்களை எடுத்துக் காட்டுகிறது.

"குற்றம் செய்தவர்கள் பக்கல், பொறையும் க்ருபையும் சிரிப்பும் உகப்பும் உபகார ஸ்ம்ருதியும் நடக்க வேணும்" (ஸ்ரீவசநபூஷணம். 365)

இதன் கருத்தாவது, (1) பிறர் நமக்கு செய்த குற்றத்திற்குத் தாம் ஒரு பதில் தீங்கு செய்யவாவது நெஞ்சிலே வருந்தியிருக்கவாவது கூடாது. (2) "நாம் பொறுத்திருந்தாலும் இவர்களை எம்பெருமான் தகுந்தபடி தண்டிக்கப் போகிறானே. ஐயோ! இதுக்கு என்ன பண்ணுவோம்" என்று இரங்கியிருக்க வேணும். (3) தம்முடைய பரலோக கதிக்கு இவர்களால் ஒரு கெடுதலும் செய்ய முடியாது. இஹலோக விரோதங்கள் ஏதாவது செய்யக் கூடும்; அப்படி சிலவற்றைச் செய்தால் அதை ஒரு ஹாநியாக நினைத்து நாமும் தங்களைப் போல வருத்தப்படுவோமாக நினைத்திருக்கிறார்களே! இப்படியும் ஒரு மூடபுத்தி இவர்களுக்கு இருக்குமோ என்று சிரிக்க வேண்டும். (4) அவர்கள் பண்ணும் பரிபவங்களுக்கு இலக்கான ஸ்வசரீரத்தைத் தனக்கு சத்ருவாகவும், அவர்கள் ஹாநி பண்ணும் த்ருஷ்டபதார்த்தங்கள் தனக்கு ப்ரதிகூலங்களாகவும் நினைத்திருக்க வேண்டியவனாகையாலே, தன்னுடைய சத்ருவிஷயமாக ஒருவன் பரிபவங்கள் பண்ணும் போதும் தனக்கு ப்ரதிகூலங்களானவற்றைப் போக்கும் போதும் தான் உகக்குமாபோலே

அவர்களிடத்தில் உகந்திருக்க வேணும். (5) "நம்முடைய தோஷங்களை நாம் மறந்திருக்கும் நிலைமையிலே அவற்றை நமக்கு நினைப்பூட்டி இவர்கள் நமக்குப் பண்ணுமுபகாரம் என்னே!" என்று நன்றி பாராட்ட வேணும்.

பிராட்டி தன்னை பத்து மாதம் அஸஹ்யமாக ஹிம்ஸித்த ராக்ஷஸிகளைக் குறித்துக் குற்றத்தையே நற்றமாக உபபாதித்து, அவர்களை ஹிம்ஸிக்க விரும்பிய திருவடியிடம் மன்றாடி அவர்களை திருவடியிடமிருந்து காப்பாற்றினாள். இதனால் பிராட்டி தன்னிடம் குற்றம் செய்தவர்கள் தோஷமே பச்சையாக அங்கீகரித்தமை விளங்குகிறது.

ஒரு சமயம் ஸ்ரீபராசரபட்டரிடம் பொறாமை கொண்ட ஒருவன் கோயிலில் நாலு பேர் நடுவே பருஷ வார்த்தைகளால் கேட்பார் செவிசுடு கீழ்மை வசவுகள் வைதான். பட்டரிடம் பரிவுள்ளவர்கள் அவனுடன் சண்டையிடப்புக பட்டர் அவர்களைத் தடுத்து , தன்னை வைதவனை அழைத்து அவனுக்கு தாம் கையிலணிந்திருந்த தங்க மோதிரத்தைப் பரிசாக அளித்தாராம். அப்படி அளித்து விட்டுத் தமக்குப் பரிந்தவரிடம் அவனை வாய் மூடப் பண்ண தான் மோதிரத்தை அளிக்கவில்லை. என்னிடம் நான் மறந்திருப்பதும் என்னிடமுள்ளதாக அறியாததுமான தோஷங்களைப் பெருமாள் எதிரே எடுத்துச் சொன்னது பற்றி உகப்பாலும் உபகாரஸ்ம்ருதியாலும் கொடுத்தேன் என்று கூறினாராம். பட்டரின் செயலும் சொல்லும் இதய பூர்வமானவை யாகையால் அவரின் வைஷ்ணவ பூர்த்தியையே இது காட்டும். கூரத்தாழ்வான் ஆண்டாள் இவர்கள் வாழ்க்கையிலும் எதிரிகளிடம் இப்படி நடந்து கொண்ட நிகழ்ச்சிகள் உண்டு.

இந்த ஸ்ரீவசனபூஷண திவ்ய சாஸ்த்திரத்திற்கு த்ருஷ்டாந்த பூதர்களாக வாழ்ந்தவர்கள் நம்பூர்வாசார்யர்கள்.

## *கூரத்தாழ்வானின் தரிசனம்*

ஸ்ரீவைஷ்ணவ தரிசனத்திற்காகத் தம் தரிசனத்தையே (கண்களையே) கொடுத்தவர் கூரத்தாழ்வான். பாகவதபசாரத்தில் ஆழ்ந்த சோழன் திடீரென்று கழுத்தில் நோய் தோன்றி துடிதுடித்து இறந்தான். இந்தச் செய்தியை அறிந்த பின்னர் உடையவரும் திருவரங்கத்திற்கு எழுந்தருளினார். ஆழ்வானும் திருவரங்கத்திற்குத் திரும்பினார். உடையவர் ஆழ்வானிடம் இந்த தரிசனத்திற்கு திருஷ்டிபூதரான உமக்கு இப்படிக் கண்போனதே என்று திருவுள்ளம் மிகவும் புண்பட்டு மீண்டும் கண்பெறுவதற்காகக் கண்கொடுக்கும் பெருமானாகிய வரதராஜனைக் குறித்து ஒரு

ஸ்தோத்திரத்தை அருளிச் செய்யுமாறு நியமிக்க ஆழ்வானும் அடியேனுக்கு இக்கண்வேண்டா என்று விண்ணப்பஞ் செய்ய எம்பெருமானாரும் அப்படியன்று, சொல்லவேணும் என்று பலகாலும் நிர்பந்தித்து அருளிச் செய்தார். ஆழ்வானுக்கோ மீண்டும் கண்களை எம்பெருமானிடம் வேண்டிப் பெற விருப்பமில்லை. ஆனால் தம் ஆசார்யரான எம்பெருமானாருடைய நியமனத்தை புறக்கணிக்க முடியாது வரதராஜ ஸ்தவத்தை இயற்றி அதில் 90வது சுலோகத்தில் "எனக்கு எது ச்ரேயஸ்ஸை – நன்மையை விளைவிக்குமோ அது உனக்குத் தெரியாதா என்ன? நீ அனைத்தும் அறிந்தவன். எனக்கு எது தேவை என்று நீ நினைக்கிறாயோ அதை நீயே அருள்வாயாக" என்று வரதராஜனிடம் பிரார்த்தித்தார். பின்பு பேரருளாளனும் கூரத்தாழ்வானுக்கு ஸ்வப்நமுகேந காட்சி அளித்து "நித்ய விபூதியில் நாமிருக்கும் இருப்பை எப்போதும் ஸேவித்துக் கொண்டிருக்க உமக்கு திவ்யமான பார்வையை அளிக்கிறேன்" என்று அருளிச் செய்ய இதனால் ஆழ்வான் மிகவும் ப்ரீதரானார். இதை ஆழ்வான் உடையவரிடம் விண்ணப்பிக்க, உடையவர் அங்ஙனன்று என்று ஆழ்வான் கையைப்பிடித்துக் கொண்டு பெருமாள் கோயிலுக்கு (திருக்கச்சி) எழுந்தருளி, ஆழ்வான் அருளிச் செய்த வரதராஜஸ்தவத்தை விண்ணப்பஞ் செய்யுமாறு நியமிக்க, ஆழ்வானும் விண்ணப்பஞ் செய்து தலைக்கட்டுகிறபோது, உடையவர் வேறு ஓர் கார்யமாய் அவ்விடத்தை விட்டு அகன்றிருக்கும் சமயத்திலே பேரருளாளன் ப்ரஸன்னமாகி ஆழ்வானிடம் உமக்கு அபேக்ஷிதமென் என்று கேட்டருள, ஆழ்வானும் உடையவர் திருவுள்ளப்படி தம் கண்களை வேண்டாதே, தான் பெற்றபேறு நாலூரானும் பெறவேணும் என்று சோழனுடையான மந்திரியான நாலூரானுக்குப் பேற்றினை வேண்டிப் பெற்றார். இந்த நாலூரான் தான் தம் கண்கள் போவதற்கும், பெரிய நம்பிகள் திருநாட்டுக்கெழுந்தருள்வதற்கும், உடையவர் தம்மைப்பிரிந்து மேல்நாடு செல்வதற்கும் காரணமானவன். இவன் பேற்றை இழந்துவிடப்போகிறானேயென்று தமக்கு ஒரு நன்மையைப் பெறாது தன்னுடைய சிஷ்யனான நாலூரானுடைய பேற்றுக்காக பேரருளாளனிடம் வேண்டிப் பெற்றார்.

உண்மையான ஸ்ரீவைஷ்ணவன் தனக்குத் தீங்குசெய்யும் விரோதிக்கும் அருள் புரிந்து "இன்னா செய்தார்க்கும் இனியவே செய்யக்கால் என்ன பயத்ததோ சால்பு" என்கிறபடியும் வாழ்வதே கடன் என்பதை நமக்கெல்லாம் அறிவுறுத்துகிறது கூரத்தாழ்வானின் உள்ளப்பாங்கு. ஆழ்வானுடைய வைராக்கியத்தைப் பாராட்டுவதா அல்லது தனக்கு தீங்கிழைத்த தன் சிஷ்யனிடம் கொண்டுள்ள பரிவைத்தான் பேசுவதா? ஆழ்வானுடைய

ஆத்மகுணபூர்த்திதான் என்னே, இதுவன்றோ உயர்ந்த ஸ்ரீவைஷ்ணவ லக்ஷணங்கள்.

### கூரத்தாண்டாள்

கூரத்தாழ்வானின் தர்மபத்நீயான கூரத்தாண்டாளுடைய சரித்திரத்தில் காணும் ஒரு நிகழ்ச்சி:

கூரத்தாழ்வானும் ஸ்ரீராமானுஜரும் பரமபதித்த பின்பு ஸ்ரீரங்கத்தில் ஆசார்ய பீடத்தை அலங்கரித்தவர் கூரத்தாழ்வானின் புத்ரரும் அதிமேதாவியுமான பராசரபட்டர் ஆவார்.

கூரத்தாழ்வானின் சிஷ்யனான வீரசுந்தரப்பிரமராயன் "அகளங்க பிரமராயன்" என்கிற அரசன் பெரிய கோவிலின் ஆறாவது பிராகாரமான திருவிக்ரமனின் மதிலைச் செப்பனிட்டு கட்டத் தொடங்கினான். அப்போது ஆழ்வானின் மற்றொரு சீடரான பிள்ளைப் பிள்ளையாழ்வான் என்பவரின் குடில் மதிலுக்குத் தடையாக இருந்தது. இதை அந்த அரசன் இடித்துவிட முற்பட்டான். பராசரபட்டர் பிரமராயனிடத்தில், எப்படி திருமங்கையாழ்வார் தொண்டரடிப் பொடியாழ்வாரின் குடிலுக்கு ஊறுவிளைவிக்காமல் மதிலை வளைத்துக் கட்டினாரோ அதேபோல் பிள்ளைப் பிள்ளை ஆழ்வானின் திருமாளிகைக்கு எந்தவித சேதமும் ஏற்படுத்தாமல் மதிலை வளைத்துக் கட்டும் படி பரிந்துரைத்தார். ஆனால் பிரமராயன், பராசரபட்டர் தம் ஆசார்யரான ஆழ்வானின் புத்திரர் என்பதையும் உணராமல், பிள்ளைப்பிள்ளை ஆழ்வான் திருமாளிகையை இடித்துப் போட்டு மதிலைக் கட்டியதோடன்றி பட்டரிடமும் விரோதம் பாராட்டி அவருக்கு பல இன்னல்களை விளைவித்தான். பட்டரும் ஸ்ரீரங்கத்தை துறந்து திருக்கோட்டியூருக்குச் சென்று அங்கு வாழ்ந்து வரவேண்டிய நிர்பந்தத்தை உண்டாக்கினான்.

பின்னர் வீர சுந்தர பாண்டியன் இறந்து விடவே, பட்டரின் பகைவன் மாண்டொழிந்தான் என பட்டரின் சீடர்கள் ஆரவாரித்தனர். கூரத்தாண்டாளிடம் இந்த நிகழ்ச்சியை மகிழ்ச்சியுடன் தெரிவித்தனர். தம் திருப்புதல்வரின் பகைவன் ஒழிந்தான் என்பதைக் கேட்டு ஆண்டாள் மகிழ்வார் என்று அவர்கள் எதிர்ப்பார்த்தனர். ஆனால் ஆண்டாளோ திருவுள்ளம் கலங்கி தம் திரு மாளிகையினுள் புகுந்து கதவைச் சாத்திக் கொண்டு வயிறு பிடித்து பெருங்குரலாக கதறி அழத் தொடங்கினார்.

இச்செயல் சீடர்களுக்கு புரியாத புதிராகவே இருந்து வந்தது. அவர்கள் ஆண்டாளை விளித்து, "பட்டரின் பகைவன் போனான் என்று மகிழ்ந்து அழுத

புலம்புவானேன்? பட்டர் திருவரங்கம் திரும்புவதும் நாம் மறுபடியும் கூடி வாழ்வதும் உமக்குப் பிடிக்கவில்லையா?'' என்று கேட்டனர். அதற்கு ஆண்டாள், ''நீங்கள் ஒன்றும் அறிகிறீர்கள் இல்லை. வீரசுந்தரன் நேரே ஆழ்வானின் சீடனாயிருந்ததும் அவர்க்கு அந்தரங்க சீடராயிருந்த பிள்ளைப் பிள்ளை ஆழ்வான் பக்கல் அபசாரப்பட்டு, ஆசாரிய புத்திரரான பட்டரைத் திண்டாட்டம் கண்டு அவர் திறத்திலும் மிகவும் அபராதம் பண்ணினான். பின்பாவது நான் அறியாமல் செய்தேன். பொருத்தருள வேண்டும்'' என்று பட்டரின் பாதத்தில் வீழ்ந்து வணங்குவதும் செய்யாமல் இப்படிச் செய்தோமே என்றுஅனுதாபமும் இல்லாமல் மாண்டு போனான். ஆதலால் அவன் உயிரை விட்ட போதே யமதூதர் கையில் அகப்பட்டு கலங்கி அடியுண்டு மிக வருந்துவானே! இறைவனுக்குத் தொண்டு செய்துவரும் பாகவதர்பால் அபசாரப்படுவராயின் அவர் ஆத்மா ஈடேறாதன்றோ! ஆதலால் அவன் மறுமை இன்பத்தையாவது அனுபவிப்பான் என்றிருந்தேன். அதனையும் இழந்துவிட்டானே! ஆழ்வானின் திருவடி சம்பந்தம் உடையதோர் உயிர் இப்படி இருமையையும் இழந்து சீர்கெடுவதே என்பதை நினைத்து என் வயிறு எரிகிற வகை உங்கள் ஒருவர்க்கும் தெரிகிறதில்லை?'' என்று விடை பகர்ந்தாள் ஆழ்வானின் தர்மபத்தினியான ஆண்டாள்.

இப்படி பகைவனுக்கும் அருள்பாவிக்கும் பண்பும், அவனுடைய அனர்த்தம் கண்டு அவனுக்காக இரங்கும் இயல்பும் கண்டு வியக்காதவர் யார்? கூரத்தாழ்வான் நாலூரானுக்காக பரிந்து பேரருளாளப்பெருமாளிடம் பேற்றை வேண்டியது நாம் அனைவரும் அறிந்ததே. இவ்வாறு கூரத்தாழ்வானும் ஆண்டாளும், ஒத்த கருத்துடையவர்கள் என்பதை அவர்களது தூய சரித்திரம் நமக்கு நல்வழி காட்டும் கலங்கரை விளக்கமாகும்.

## ஆட்கொண்டவில்லி ஜீயர்

எம்பெருமானாருடைய சிஷ்யரான ஆட்கொண்டவில்லி ஜீயர் எழுந்தருளும் போது, நஞ்சீயர் அவரை ஸேவித்து நிற்க, பகவத் விஷயத்தில் நமக்கு ருசி மெய்யாகப் பிறந்ததில்லை காணும் என்று ஆட்கொண்டவில்லி ஜீயர் அருளிச் செய்ய, உம்மைப் போலே ஆசார்யவான்களுண்டோ? இங்ஙனே அருளிச் செய்வானேன்? என்று நஞ்சீயர் கேட்க, பகவத் விஷயத்திலே மெய்யேருசியுண்டென்றிருக்கையாவது பாகவதர்களைக் கண்டால் உகக்குமன்று காணும் என்றருளிச் செய்தார். பாகவத ஸம்ருத்திக்கு ஸந்தோஷிப்பதே பாகவதத்வ பூர்த்தியாகும். இதையே தான் எம்பெருமான் உகக்கிறான் என்று கருத்து. இதையே நம் பூருவர்கள் அந்தமில்

பேரின்பத்தடியரோடிருந்தமை என்றும் சொல்லுகிறபடியே இக்குழாத்திலினிமை உண்டானாலிரே அங்கும் இனிமையுண்டாவது என்று அருளிச் செய்வார்.

## நஞ்சீயர்

ரஸவாதம் கைப்பட்டவன் இருந்தவிடமெல்லாம் பொன்னாகுமாப் போலே ப்ரமேயம் கைப்பட்டவனுக்குச் சொல்லிற்றெல்லாம் வார்த்தையாம். இவ்வார்த்தை நஞ்சீயர் நம்பிள்ளைக்குச் சொன்ன வார்த்தை. அதாவது ரஸவாத வித்தை கைவந்தவன், தன் கைப்பட்ட பொருள்களையெல்லாம் பொன்னாக மாறச்செய்வது போலே, எம்பெருமானுக்கு (ப்ரமேயம்) ப்ரீதி ரூபமான கைங்கர்யங்களைச் செய்து அவனை மகிழ்வித்து அவனைத் தன் வசத்தில் வைத்திருக்கும் உயர்ந்த ஸ்ரீவைஷ்ணவர்கள் கேவல சாஸ்த்ர ஜ்ஞானத்தை உடையவர்களைக் காட்டிலும் உயர்ந்தவர்கள். அவர்கள் சொல்லும் செயலுமே உயர்ந்த சாஸ்த்ரார்த்தத்தை உணர்த்தக் கூடியது. ஆகவே, வேதம் வல்லார்களைக் கொண்டு விண்ணோர் பெருமான் திருப்பாதம் பணிந்து என்று ஆழ்வார் கூறியுள்ளபடி இப்படிப்பட்ட உயர்ந்த பாகவதர்களை முன்னிட்டுக் கொண்டு நான் எம்பெருமானைப் பற்ற வேண்டும். இப்படி பாகவதர்களை முன்னிட்டுக் கொண்டு பற்றாதவர்கள் சூர்ப்பணகை பட்டது படுவார்கள், என்ற கருத்தை வலியுறுத்தவே நஞ்சீயர் மேலே கூறியுள்ள வார்த்தையை நம்பிள்ளைக்கு அருளிச் செய்தார்.

## மிளகாழ்வான்

மிளகாழ்வான் ஒருசமயம் அந்த தேசத்து இராஜா வித்வபரீட்சை வைக்கிறானாய் அங்கே செல்ல, அங்கு நின்றிருந்த வாயிற் காப்போன் அவரை உள்ளே செல்ல விடாது தடுக்க, மிளகாழ்வானும் ஏன் என்னைத் தடுக்கிறாய் எனக்கு வேதப் பரீட்சை சாஸ்திரப் பரீட்சை எல்லாமே நன்கு வருமே அத்தைப் பரீட்சிப்பதில் ஆக்ஷேபம் என்ன என்று கேட்கவே, அதற்கு அவன் "உமக்கு அவையெல்லாம் போகும், அதற்கு உம்மைச் சொல்லவொண்ணாது என்ன?" ஆனால் எனக்கு என்ன குறை என்று மிளகாழ்வான் கேட்க, அவன் நீர் வைஷ்ணவரன்றோ? அதனால் கூடாது என்று தடுத்தேன் என்றான். இதைக் கேட்டு மிளகாழ்வான் தன் உத்திரியத்தை மேலே ஏறிட்டு ஆனந்தக் கூத்தாடினான் என்று ஒரு ஐதீகம் உள்ளது. ஸ்ரீவைஷ்ணவர்களால் தான் மதிக்கப்படுவதைக் காட்டிலும் வைஷ்ணவரல்லாதரான மற்றையோரால் தான் வைஷ்ணவன் என்று அழைக்கப்பட்டதை பெரிதும் உகந்தார்.

## கூரத்து ஆழ்வார்

கூரத்து ஆழ்வாருடைய (கூரத்தாழ்வானின் தந்தை) தேவியாராகிய நங்கையார் ஆசார்யன் திருவடி சார்ந்தவாறே, ஒருவன் ப்ரஹ்ம சாரியாகவாவது இல்லறத்தானாகவாவது வானப்ரஸ்தனாகவாவது சந்நியாசியாகாவாவது இருக்க வேண்டும். ஒருநாள் கூட ஓர் ஆச்ரமத்திலும் சேராதவனாக இருக்கக் கூடாது என்று சாஸ்த்ரம் சொல்கிறது. அதனால் இன்னமும் ஒரு விவாகம் செய்து கொள்ளவேண்டும் என்று உறவினர்கள் வற்புறுத்த, கூரத்தாழ்வாரும் இது தான் கிரமத்திலே வந்து ஆழ்வானுக்கு விரோதமாகத் தலைக்காட்டும் இனித்தான் இந்த சாஸ்திரத்தை அனுஷ்டிக்கப் போமா அல்லது பாகவத பரிசர்யையைச் செய்வோமோ என்று ஆராய்ந்து அந்தச் சாமான்ய தர்மத்திற் காட்டில் இந்த விசேஷ தர்மமே சிறந்தது என்று தான் இன்னொரு விவாகம் செய்துக் கொள்வதைத் தவிர்த்தார்.

## யமுனைக்கு அமைந்த தூய்மை

ஸ்ரீவைஷ்ணவ ஸம்ப்ரதாயத்தில் பகவத் பாகவத கைங்கர்யங்களில் ஊன்றியிருப்பவர்களை மிகவும் கொண்டாடுவது வழக்கம். மதுரா நகரத்திலுள்ள யமுனையாற்றை "தூய பெருநீர் யமுனை என்றே அழைப்பார்கள்". க்ருஷ்ணனும் கோபியர்களுமாக ஜலக்ரீடை பண்ணி ஒருவருக்கொருவர் கொப்பளித்ததாலே வந்த ஸூத்தியாலும் தெளிந்த நீரையுடைத்தாயிருத்தாலும், ஜலக்ரீடைக்குப் போதுமான நீர் ஸம்ருத்தியை யுடைத்ததாயிருத்தலாலும், திருவடி, திருவநந்தாழ்வான் போலே கருத்தறிந்து அவ்விருளிலே க்ருஷ்ணனை வஸுதேவர் எழுந்தருளவித்துக் கொண்டு போக, கம்ஸனுக்கு அருகிலேயே இருந்து கொண்டும் அவனிடத்தில் சிறிதும் பயமில்லாமலே, எம்பெருமான் எழுந்தருளுவதற்குப் பாங்காகத் தன்னை வஸுதேவருக்கு முழங்கால் அளவு வற்றிக் கொடுத்து அவருக்கு வழி செய்து கொடுத்ததாலும் (பாகவத – பகவத் கைங்கர்யத்தினால்) வந்த தூய்மை. காவேரி நதியானது எப்போதும் எம்பெருமானின் திருவடிநிலையைத் தொட்டுக் கொண்டிருப்பதால் கங்கையைக் காட்டிலும் புனிதமானது.

## ஸ்ரீபாத தீர்த்த மகிமை

சோழ அரசன் கொடுமைக்குப் பயந்து இராமாநுஜர் ஸ்ரீரங்கத்தை விட்டு மேல் நாட்டிற்கு எழுந்தருளிய போது எம்பெருமானார் முதலியாண்டானைத் தம்முடன் அழைத்துச் சென்றார். மேல் நாட்டிற்கு செல்லும் போது வழியில் வஹ்நிபுஷ்கரணி என்னும் கிராமத்தை அடைந்து

அங்கு மூன்று நாட்கள் தங்கி பிறகு மிதிலாபுரி என்ற கிராமத்திற்கு சென்று சில நாள் தங்கி அதன் சமீபத்தில் உள்ள சாரகிராமம் என்ற ஊரை அடைந்தார். அவ்வூரில் உள்ளார் அத்வைதிகளாயிருந்தமையால் ஸ்ரீவைஷ்ணவர்களான எம்பெருமானார் முதலானாரை ஸத்கரிக்கவில்லை. அவர்கள் அறியாமையை அறிந்த எம்பெருமானார் அவ்வூரார் குடிநீர் முகக்கும் துறையிலே தம் திருவடிகளை நனைத்துக் கொண்டிருக்கும்படி முதலியாண்டானை பணித்தார். அந்த ஸ்ரீபாத தீர்த்த மகிமையாலே அதை உபயோகித்த மற்றை நாள்முதல் அந்த ஊரிலுள்ள எல்லோரும் அஹங்காரம் கழியப் பெற்று எம்பெருமானாரை வணங்கி அவரை அடைந்தார்கள் அது முதல் அவ்வூர் சாளக்கிராமம் என்று எம்பெருமானாரால் பேரிடப்பெற்றது.

## ஸ்ரீபாத தூளி

திருவாய்மொழி வ்யாக்யானத்தில் 'மாயன் தமரடி நீறு கொண்டு நீர் அணிய முயலில்' என்ற இடத்துக்குப் பொருளாய் அத்புதமான ஐதிஹ்யம் ஒன்று காட்டப்படுகிறது. "வண்டரும் செண்டரும் அகளங்க நாட்டாழ்வானுடன் செல்லா நிற்க, இவர்களுக்கு அமணன் பாழியில் ஸிம்ஹத்தைக் காட்டி, "திருமுற்றம்; தொழுங்கோள்" என்ன, அவர்களும் மெய்யென்று நம்பி திருவடிதொழுது, பின் அது அமணன் பாழி என்றறிந்தவாறே மோஹித்து விழ, பிள்ளையுறங்காவில்லி தாஸர் தம் ஸ்ரீபாத தூளியை அவர்களுக்கு இட உணர்ந்து எழுந்திருந்தார்கள்.

வண்டர் என்பவரும் செண்டர் என்பவரும் அகளங்க நாட்டாழ்வான் என்ற அரசனின் மெய்க் காப்பாளர்களான மல்லர்கள். பிள்ளையுறங்காவில்லி தாஸர் இவர்களை எம்பெருமானாரிடம் ஆச்ரயிப்பித்து ஸ்ரீவைஷ்ணவர்களாக்கி வைத்தார். அரசனும் எம்பெருமானாரிடம் ஆச்ரயித்தான். ஒருநாள் இவர்கள் ஒன்றாக வரும் போது அரசன் வேடிக்கையாக ஒரு ஜைந ஆலயத்தைக் காட்டி "எம்பெருமான் திருமுற்றம்; தெண்டன் ஸமர்ப்பியுங்கோள்" என்ன, அவர்களும் இவன் சொல்லை விச்வஸித்து அப்படியே செய்தனர். பின்னர் அது பெருமான் திருமுற்றமல்ல என்றறிந்து தாம் செய்த மஹா பாபத்துக்குப் பரிகாரம் காணாது மூர்ச்சித்து விட்டனர். அரசனும் செய்வதேதுமறியாமல் பிள்ளையுறங்காவில்லி தாஸருடைய ஸ்ரீபாதரேணுவைக் கொண்டு வந்து அவர்கள் மீது தடவ, அவர்கள் பாகவத ப்ராபவத்தால் உணர்ந்தெழுந்தனர். தமதாசார்யரான எம்பெருமானார் உபதேசத்தில் அந்த மல்லர்களுக்கிருந்த மஹாவிச்வாஸமும் பாகவத பாததுளி ப்ரபாவமும் மிகச் சிறந்தது என்பது அறியப்படுகிறது.

வைஷ்ணவனின் அகத்தை விளக்கும் லக்ஷணங்கள் எறும்பியப்பாவினால் மிகவும் அழகாகக் காட்டப்பட்டுள்ளன காண்மின்.

அபகதமதமாநை: அந்திமோபாயநிஷ்டை:
அதிகதபரமார்த்தை: அர்த்தகாமாநபேக்ஷை:
நிகிலஜநஸுஹ்ருத்பி: நிர்ஜிதக்ரோதலோபை:
வரவரமுநிப்ருத்யை: அஸ்துமே நித்யயோக:

ஸ்ரீவைஷ்ணவர்களாய் மணவாளமாமுனிகளுடைய அடியார் அடங்கிய குழாத்துடன் அடியேன் நிச்சலும் ஸம்பந்தமுடையவனாக வேணும் என்று இங்கு ப்ரார்த்திக்கிறார் எறும்பியப்பா. அந்த அடியார்களுக்கு இலக்கணம் வகுக்கப்பட்டுள்ளது. இந்தப் பாசுரத்தில், இங்கு காட்டப்பட்ட ஆறுலக்ஷணங்களும் ஒவ்வொன்றும் இன்றியமையாதவையே.

அடியார்கள் வாழ! அரங்கநகர் வாழ!
சடகோபன் தண்தமிழ் நூல் வாழ!
கடல் சூழ்ந்தமண்ணுலகம் வாழ!

என்று, கடல் சூழ்ந்த இவ்வுலகத்தில் யாவரும் யாவையும் நன்றாக வாழ்ந்து இன்புற்றிருக்க வேண்டும் என்று தினமும் முக்காலமும் வேண்டுமவர் வைஷ்ணவர்களேயன்றோ? 'ஸர்வே ஜநா: ஸுகிநோபவந்து' என்று நயங்கனிந்து வேண்டுமவர்கள் இவர்கள். இவர்களுக்கு யாரிடத்திலும் வெறுப்பென்பதே கிடையாது. எதையும் ஸர்வேச்வரனுடைய விபூதி (ஐச்வர்யம்) என்ற கண்ணோக்குடன் கண்டு செயல்படுவதால் யாவரும் (யாவையும்) நண்பரே; பகைவரே கிடையாது. ஸுஹ்ருத் என்றால் நல்லெண்ணமுடையவன் என்று பொருள். "நிகிலஜநஸுஹ்ருத்" என்றால் யாதொரு விலக்குமில்லாமல் யாவரிடத்திலும் நல்லெண்ணமேயுடையவர் மாமுனிவனடியாரான ஸ்ரீவைஷ்ணவர்கள் என்றதாயிற்று. எம்பெருமானிடத்தும், தன்னுடைய அடியவர்களிடத்தும் நல்லெண்ணம் கொண்டவர்களாய் இருப்பர்கள். யாராவது வெறுப்பு ஏற்படும்படி நடந்து கொண்டாலும் அதனை தன்னுடைய பாவமாக நினைத்துக் கொள்வர்.

## அபகதமதமாநை:

விஷயஸுகங்களை அநுபவிப்பதில் களிப்பற்றவர்கள் தம்மிடம் என்ன விதமான பெருமை இருந்தாலும் அதனால் சிறிதும் செருக்கில்லாதவர்கள். வைராக்யமும் அடக்கமும் குடிகொண்டவர்கள் இவர்கள்.

ஒரு சமயம் ஸ்ரீபராசர பட்டர் தமக்கு அந்தரங்கரான ஒரு ஸ்ரீவைஷ்ணவரை "திருமலை அநந்தாழ்வானிடம் சென்று ஸ்ரீவைஷ்ணவ லக்ஷணம் இருக்கும்படியை அறிந்து வாரும்" என்று அனுப்பினார். அவர் அநந்தாழ்வானிடம் சென்று சேர்ந்த போது அங்கு ஒரு விசேஷ ததியாராதனம் நடந்து கொண்டிருந்தது. பந்தி பந்தியாக ஸ்ரீவைஷ்ணவர்கள் அமுது செய்து கொண்டிருந்தனர். இதனால் அநந்தாழ்வானால் வந்தவரை உடனே கவனிக்க இயலவில்லை. இவரும் நெடும் போது காத்துக் கொண்டிருந்தார். பின்னர் அநந்தாழ்வான் வந்து, "நெடும் போது காத்திருக்க வைத்து விட்டேன். சோர்வுடன் இருக்கிறீர். உடனே அமுது செய்ய வேணும்" என்று அழைத்து உபசரித்து, அவர் உண்ட பின்னர் வந்த காரியத்தைப் பற்றிவினவ, அவரும் பட்டர் தம்மை வரவிட்டதை உணர்த்தினார்.

அநந்தாழ்வான், "கொக்கைப் போலிருக்கும்; கோழி போலிருக்கும்; உப்பைப் போலிருக்கும்; உம்மைப் போலிருக்கும்" என்று சொல்லி அவரை போகவிட்டராம்.

கொக்கு, நீர் நிலையில் நின்று சிறு மீன்களைக் கணிசியாமல் போகவிட்டுப் பெரியமீன் வரும்போது அதைக் கடுகப்பிடித்து உண்ணும். அதேபோல; "அதிகதபரமார்த்தை; அர்த்தகாமாந பேக்ஷை" என்கிறபடி உபேயத்தை (வாழ்வின் பயனை) தெளிய அறிந்தவனாய் ஐச்வர்யம், கைல்வயப் முதலான சிறிய பயன்களில் கண்வையாமல், 'மற்றை நங்காமங்கள் மாற்று' என்கிறபடி எம்பெருமானுடைய திருமுக மலர்த்தியொன்றையே தன் பேறாகக் கருதி அதற்குறுப்பான கைங்கர்யத்திலேயே கண்வைத்திருப்பான்.

கோழி, குப்பையைக் கிளறி அதிலுள்ளபயனற்ற பொருள்களை விலக்கி, பயனுள்ளவைகளான தான்யங்களை உட்கொள்ளும். ஸ்ரீவைஷ்ணவனும் சாஸ்த்ரங்களை ஆராய்ந்து பேற்றுக்கு உபாயமாய் விதிக்கப்பட்டவற்றுள் கர்மயோக ஞானயோகாதிகளை அஸாரம் என்று கழித்து, "உன் மனத்தால் என் நினைத்திருந்தாய்" என்று எம்பெருமானின் அருளைத் தஞ்சமாகப் பற்றி, பாகவதர்களின் நிழலிலே ஒதுங்குதல், ஆசார்யனிட்ட வழக்காயிருத்தல் போன்ற இவற்றை ஸாரமென க்ரஹித்து அந்திமோபாயநிஷ்டனாக இருப்பான்.

உப்பு, நீரில் கரைந்து மறைந்து நின்று உணவுக்கு ருசியை பிறப்பிக்கும். ஸ்ரீவைஷ்ணவனும் தனக்குள்ள பெருமைகளை ஒரு சரக்காக நினையாமல் அடியார் குழாத்தில் தன்னடக்கத்துடன் தாழ்ந்து நின்று பரிமாறி (இது தன்னை மறைத்துக் கொள்ளுதலையொக்கும்) அக்குழாத்திற்கு இனிமையை உண்டு பண்ணுவான்.

கடைசியாக, "உம்மைப் போலிருக்கும்" என்றது வந்த ஸ்ரீவைஷ்ணவர் பெருமையை அநந்தாழ்வான் கண்டு கொண்டமையால், ஞானநுஷ்டான பூர்ணரான ஒருவரே பட்டருக்கு அந்தரங்கராக இருத்தல் கூடும். ஆயினும் பாகவதர்கள் அமுது செய்யும் போது முகம் சுளிக்காமல் காத்திருந்து, "போனகம் செய்த சேடம்" ஆன ப்ரஸாதத்தை உண்பதைப் பேறாப்பேறாக மதித்து உண்டமையாலும், வந்த அலுப்புடன் நெடுநேரம் காத்திருக்க நேர்ந்ததற்குத் துளியும் வருந்தாமல் தன்னடக்கத்துடன் நடந்து கொண்டமையாலும் அவர் எல்லா ஸ்ரீவைஷ்ணவலக்ஷணங்களும் பொருந்தியவர் என்பதால் "உம்மைப் போலிருக்கும்" என்று அதை உயர்ந்த லக்ஷணமாகச் சொன்னார். "அபகதமதமானை: நிர்ஜித க்ரோத லோபை:" என்ற லக்ஷணங்கள் பொருந்தியபடி.

## உய்யக் கொண்டார்

நாதமுனிகளுடைய மாமனார் வங்கீபுரத்தாச்சி என்னும் மஹாநுபாவர். (யசோதை ஆச்சி கண்ணனிடம் வைத்திருந்த அன்பும் பாசமும் போல, பகவானிடம் அன்பும் பாசமும் வைத்திருந்ததால், வங்கீபுரத்து ஆச்சி என்று திருநாமம்) நாதமுனிகளுடைய முக்கிய சிஷ்யர் புண்டரீகாக்ஷர்.

ஒருசமயம் நாதமுனிகள் அரவிந்தப் பாவை என்ற தம் தேவியாரைப் பிறந்தகத்துக்கு அனுப்பினார். துணைக்குச் சிஷ்யரான புண்டரீகாக்ஷரையும் உடன் அனுப்பினார். வங்கீபுரத்து ஆச்சி திருமாளிகையில் ஆசார்ய பத்னியைக் கொண்டு விட்டார் புண்டரீகாக்ஷர். திரும்பிச் செல்ல, ஆச்சியிடம் அனுமதி கேட்டார். உணவு உண்டு போகச் சொன்னார் ஆச்சி. அப்போது அங்கிருந்த சில குறும்பர்கள் புண்டரீகாக்ஷரை வெளியே முற்றத்தில் போஜனம் செய்ய உட்கார்த்தி வைத்தனர். வேண்டுமென்றே தண்ணீரில் வைத்திருந்த பழைய சோற்றைப் போட்டனர். புண்டரீகாக்ஷர் சிறிதும் மனம் வருந்தவில்லை. மஹாப்ரஸாதம் என்று சந்தோஷத்துடனே அந்தப் பழைய சோற்றை உண்டார். அஹங்காரத்தை வென்றவர் அன்றோ அவர்.

பிறகு ஆச்சியிடம் விடைப்பெற்றுக் கொண்டு நாதமுனிகளிடம் திரும்பி வந்தார். நாதமுனிகள் நடந்த விவரங்களைக் கேட்டார். புண்டரீகாக்ஷரும் மகிழ்ச்சியுடன் ஆச்சி வீட்டில் முற்றத்தில், முதல் நாள் வைத்திருந்த பழைய சோற்றை உண்டதைக் கூறினார். இப்படிப்பட்ட பாகவத ப்ரஸாதம் தனக்குக் கிடைத்தது தன் பாக்யம் என்று பெருமிதத்துடன் கூறினார்.

அதைக் கேட்ட நாதமுனிகள் அவருடைய ஆத்ம குணத்தை மெச்சி, "நம்மை உய்யக் கொண்டீர்" என்று சொல்லிப் புண்டரீகாக்ஷரை ஆரத்தழுவினார். அதுமுதல் உய்யக் கொண்டார் என்ற திருநாமம் ஏற்பட்டது.

## மணக்கால் நம்பி

உய்யக்கொண்டாருடைய சிஷ்யர் மணக்கால் நம்பி. உய்யக்கொண்டாருடைய தேவிகள் பரமபதித்தபின் மணக்கால் நம்பி, ஆசார்யருடைய வீட்டில் தளிகையும் செய்து வந்தார்.

ஒருநாள் ஊரிலுள்ள பெண்கள் கட்டுச் சாதம் கட்டிக் கொண்டு, காவிரியில் நீராடி, விளையாடி வரப் புறப்பட்டனர். உய்யக் கொண்டாருடைய இரண்டு பெண்களும் மற்ற பெண்களுடன் சேர்ந்து விளையாடி மகிழ்ந்து வர ஆசைப்பட்டனர். நம்பியும் துணையாக உடன் சென்றார்.

திரும்பி வரும் போது, பெண்கள் இருவரும் வழிதப்பிச் சென்றனர். வழியில் ஒரு வாய்க்கால் சேறும் சகதியுமாக இருக்கக் கண்டு திகைத்தனர். பின் தொடர்ந்து வந்த மணக்கால் நம்பி அவர்களைத் தேற்றினார். "பெண்களே, அஞ்ச வேண்டாம். நான் இந்த வாய்க்காலில் படுத்துக் கொள்கிறேன். நீங்கள் என் முதுகின் மேல் அடியிட்டு நடந்து வாய்க்காலைக் கடந்து செல்லுங்கள்"என்றார். பெண்களும் அவ்வாறே செய்தனர். ஆசார்ய பக்தியால் நம்பி இப்படிச் செய்தாலும், அஹங்காரத்தை முற்றிலும் வெல்லாத வரால் இப்படி நடந்து கொள்ள முடியாது என்பதைச் சொல்லவும் வேண்டுமோ?

## பெரிய திருமலைநம்பி

எம்பெருமானார் திருவேங்கடமலைக்கு எழுந்தருளினார். அப்போது அவருடைய மாதுலரான (அம்மான்) பெரிய திருமலைநம்பி எதிர் கொண்டு வரவேற்றார். ராமானுஜர் மனமுருகி, "என்னை வரவேற்க இவ்வளவு பெரியவரான தேவரீர் வரவேண்டுமா? வேறு யாரையாவது அனுப்பக் கூடாதா?" என்று கேட்டார். திருமலை நம்பிகள் "இங்கு எல்லா இடத்திலும் தேடிப் பார்த்தேன். என்னை விடச் சிறியவர் எவரையும் காணவில்லை" என்றார். இது அன்றோ ஆத்மகுணபூர்த்தி?

## எம்பெருமானார்

எம்பெருமானார் நீராடப் போகும் போது முதலியாண்டான் திருக்கரம் பற்றி யெழுந்தருளி நீராடி மீளும் போது பிள்ளையுறங்காவில்லி தாஸரின் திருக்கரம் பற்றியெழுந்தருள்வர். இது வர்ணாச்ரம தர்மத்துக்கு விருத்தமாக

இருந்ததால் மற்றவர்கள் ஸ்வாமியைக் காரணம் கேட்டனர். அதற்கு, "எத்தனை தான் ஞானம் பெற்றேனாயினும் உயர்குலத்தில் பிறந்தோம் என்ற எண்ணம் ஓங்கி நின்று ஆணவங் காட்டி, அடியார்க்கு அடியோம் என்ற நைச்சியம் (தாழ்ந்த நிலை) பெறமுடியாமற் செய்து விடுகிறது. அந்த பிறவியால் உண்டான அஹங்காரத்தை, அஹங்காரம் சிறிதும் எவ்வாற்றானும் கலசாத நிலைமையுடைய இவரைத் தீண்டிக் காயசுத்தி செய்து கொள்கிறேன்" என்று ஸ்வாமி பதில் கூறினார்.

## அந்திமோபாய நிஷ்டை:

"ஆசார்யாபிமாநமே உத்தாரகம்" (ஸ்ரீவசனபூஷணம் -447) என்று நிஷ்கர்ஷிக்கப்பட்ட சரமோபாயநிஷ்டையில் ஊன்றியவர்கள் காட்டும் மேலான அர்த்தம். முன் சொன்ன நிலையினும் *சீரியது* எம்பெருமானாரிடத்தும் அவரடியாரிடத்தும் மெய்யன்புடன் ஒழுகுகை. எம்பெருமானாரே உத்தாரக ஆசார்யர்; அவரபிமானத்தைப் பெற்றுத்தரும் ஸ்வாசார்யனின் உபகாரத்தை நெஞ்சில் கொண்டு அவனே எல்லாம் என்று ஒழுகுவது அந்திமோபாய நிஷ்டையாகும். இத்தகைய ஜ்ஞாநம் பிறந்த ஒருவன், ஆசார்யன் எப்படி விநியோகங் கொண்டாலும் சிஷ்யன் தன்னை சேஷபூதனாகவே யெண்ணுவான் என்பது உறுதியாம், இப்படிப்பட்ட பெருமை ஸ்ரீவைஷ்ணவ ஸம்ப்ரதாயத்திற்கே சிறப்பானது எனலாம். "சேஷத்வமாவது - சந்தந குஸுமதாம்பூலாதிகளைப் போலே ஆசாரியனுக்கு இஷ்டவிநியோகார் ஹனாயிருக்கை"யென்று அருளியுள்ளதையும் காணலாம் (தத்வத்ரயம் 40). பாரதந்தர்யத்தோடு கூடின சேஷத்வமே ஸ்வரூபம் என்பதாம்.

இந்த ஜ்ஞாநம் ஸ்வயத்தநத்தாலன்றி எம்பெருமான் திருவருளால் மட்டுமே உண்டாகத்தக்கது என்று அறிய வேண்டும். இதற்கு எதிராசர் பேரருள் வேண்டும்.

## தெய்வவாரியாண்டான்

ஆளவந்தார் பகவான் திருவுள்ளப்படி திருவனந்தபுரம் எழுந்தருள, தமது *சிஷ்யரான* தெய்வவாரியாண்டானை மடத்தில் இறுத்திச் சென்றார். ஆளவந்தார் சென்றதிலிருந்து தெய்வவாரியாண்டான் நாளுக்குநாள் மெலிந்து வந்தார். இது கண்ட மற்றவர்கள் வைத்தியரிடம் காட்டினர். வைத்தியரும் இது உடலால் வந்த நோயல்ல மன வேதனையால் வந்தது. மனவேதனை தீர்ந்தால் இளைப்பு நீங்கும் என்றார். முதலிகள்

தெய்வவாரியாண்டானை உமக்கு என்ன மனவேதனை என்று கேட்க அவரும் ஆசாரியனைப் பிரிந்த துயரம் தான் என்றுரைத்தார். உடனே மற்றவர்களும் அவரைப் பல்லக்கில் வைத்து ஆளவந்தாரிடம் அழைத்துச் சென்றனர். ஆளவந்தாரை ஸேவிக்கப் போகிறோம் என்ற ஆனந்தம் நெஞ்சில் ஊறஊற உடல் மெலிவும் சிறுகச்சிறுக நீங்கி நடந்து செல்லும் நிலை உண்டாயிற்று தெய்வவாரியாண்டானுக்கு. அனந்தபத்மநாபனைச் சேவித்துத் திரும்பும் வழியில் ஆளவந்தார் தெய்வவாரியாண்டானைச் சந்தித்து அவர் நிலைக்கு இரங்கி கருணை உள்ளங் கொண்டார். ஆளவந்தார் தூரத்தில் அனந்தபத்மாநாபப் பெருமாளுடைய கோபுரத்தை தெய்வவாரியாண்டானுக்குக் காட்டி அதை சேவித்துக் கொள்ளும் என்று கூற, தெய்வவாரியாண்டானும் என்னுடைய கோபுரம் எதிரே நிற்கும் தாங்கள் தான் என்று ஆளவந்தாரையே சேவித்திருந்ததாக ஒரு ஐதீஹ்யம் உண்டு.

## பட்டர்பிரான் ஜீயர்

கோவிந்ததாஸப்பர் என்னும் பெயரையுடைய பட்டர்பிரான் ஜீயர் மணவாள மாமுனிகளை அடைந்து அவரைப்பிரியாது நிழல்போல அடிமைகள் செய்து கொண்டிருந்தார். இவர் ஜீயரின் மோர் பிரசாதத்தை முதலில் உண்டபிறகே மற்றவற்றை யுண்கையை முப்பது வருஷங்கள் அநுஷ்டித்தார். அவருக்கு மாமுநிகளும் எல்லா அர்த்தங்களையும் அருளினார். கோவிந்தப்பதாஸரும் ஆசார்யனைப் பிரியாமலிருப்பவராய் அதனாலே ஓர் இரவு தங்கும்படியான ஊருக்குக் கூடப் போகாமல் மாமுநிகளின் தாள் நிழலாய் வாழ்ந்து வந்தார். ஒரு நாள் பெருங்குழுவாகக் கூடியிருந்தபோது, மாமுநிகள் எல்லோரையும் நோக்கி தேவுமற்றியேன் என்றிருக்குமது அதாவது நம்மையொழிய யறியாதபடியிருக்குமது கோவிந்ததாஸப்பருக்கே யுள்ளது என்று விசேஷமாகக் கோவிந்தாஸப்பரைக் கடாக்ஷித்தருளி அவருக்குத் தம் பெயரால் அழகியமணவாளப்பெருமாளையும் திருவாராதனமாகக் கொடுத்து ஆசார்ய நிஷ்டை உடையவராகச் செய்தார். இவர் மிகவும் விரக்தராய் துறவறமேற்று பட்டர்பிரான் ஜீயர் என்று அழைக்கப்பட்டார்.

## அதிகதபரமார்த்தை:

பரமார்த்தங்கள் கை புகுந்தவர்கள் ஸகல சாஸ்த்ரஸாரார்த்தத்தை உணர்ந்தவர்கள்."உந்தன்னோடு உற்றோமேயாவோம் – உனக்கே நாமாட் செய்வோம்" என்று வகுத்த ஸ்வாமி என்று பகவானை அறிந்து அவனுக்கே ஆட்பட்டுக் குற்றேவல் புரிவது ஸாரமறிந்தவர் கார்யம். இது சிறந்த அறிவே

ஆயினும், "பொன்னாழிக்கை என்னம்மான் நீக்கமில்லா அடியார்தம் அடியார் அடியார் எம்கோக்கள்" என்னும் "எந்தை பிரான் தனக்கடியார் அடியோங்கள்" என்ற ஆழ்வார் சொற்படி அறிந்து நடப்பது ஸாரத்திலும் சீரியது.

## பாகவதர்கள் பெருமை

நம்பிள்ளையைச் சில ஸ்ரீவைஷ்ணவர்கள் "ப்ரபந்நனுக்கு தஞ்சமாக நம்பியிருக்கும் அர்த்தம் எது?" என்று கேட்க, நம்பிள்ளை, 'எல்லா ப்ரமாணங்களிலும் மிக மிகச் சிறந்ததான மந்த்ர ரத்னமாம் த்வயத்தின் அர்த்தத்தையே ப்ரபந்நன் நம்பியிருப்பன்; த்வயார்த்தத்தை மிகவும் நம்பியிருப்பானாகில் எம்பெருமானிடத்திலேயே ஊற்றம் மிகுந்திருக்கும்; எம்பெருமானிடம் ஊக்கம் மிக்கிருந்தால், அந்த அர்த்தத்தைக் காட்டித் தந்த ஆசார்யனிடத்திலே ஊற்றம் மிகுந்திருக்கும்; ஆசார்யனிடம் ஊற்றம் மிக்கிருந்தால், அவர் போன்றவர்களான ஸ்ரீவைஷ்ணவர்களிடம் ஊற்றமிகுந்திருக்கும். இனி, எம்பெருமானையே பற்றியிருக்கை. தேவதாந்தரத்தைப் பற்றுவது போலாம் என்றும், தேவு மற்றறியாது ஆசார்யனையே எல்லாமாகப் பற்றிக் கொண்டிருப்பான் விஷயத்தில் எம் பெருமான் பித்தேறியிருப்பான்; பாகவதர்களையே பற்றிக் கொண்டிருப்பான் விஷயத்தில் எம்பெருமானும் ஆசார்யனும் பித்தேறியிருப்பார்கள். இத்தால் ஆசார்யனிடத்தே ஊன்றி நிற்கை, பாகவத விஷயத்தே ஊன்றி நிற்கை, இவையுண்டானால் அவனிடம் பகவானும் ஆசார்யனும் பாகவதரும் மிகவும் அன்பு கொண்டிருப்பர்' என்றருளினார்.

திறம்பேன்மின் கண்டீர் திருவடிகள் தன்நாமம்
மறந்தும் புறந்தொழாமாந்தர் - இறைஞ்சியும்
சாதுவராய்ப் போதுமின்களென்றான் நமனும்தன்
தூதுவரைக் கூவிச் செவிக்கு.

பாசத்தை கையில் கொண்டு நிற்கும் தன் தூதுவர்களிடம் பிரஸித்தி பெற்ற எமன் விஷ்ணுவின் அடியவர்களிடத்தில் அவர்களுடைய ஆவியை கொண்டு வரும் போது மிகவும் பணிவாகவும், சாதுவாகவும் நடந்து கொள்ள வேண்டும் என்று மிகவும் ரகசியமாக அவர்களுடைய காதினுள் சொல்கிறான் என்று ஆழ்வார் கூறியிருப்பதிலிருந்து எம்பெருமானுடைய அடியவர்களிடத்தில் எமனும் பயந்து அடங்கியவனாய் இருப்பான் என்று திருமழிசையாழ்வார் நான்முகந் திருவந்தாதியில் அருளிச் செய்கிறார்.

குலசேகராழ்வார் ஒருசமயம் திருமலைக்கு சென்று திருவேங்கட முடையானைத் தரிசனம் செய்வதற்காக கூட்டத்தின் நடுவே நின்றுக் கொண்டிருந்தார். அப்பொழுது கோவில் கைங்கர்யபரர்கள் இவர் அரசராய் இருப்பதால் இவரே முன்னே வந்து சேவிக்கலாகாதோ என்று அழைக்க, அதற்கு ஆழ்வார் பாகவதர்களின் நடுவே அவர்கள் தேக ஸ்பர்சம்படும்படி நின்று எம்பெருமானை சேவிப்பதைக் காட்டிலும் தனியே நின்று சேவிப்பது தனக்கு உகந்ததன்று என்று கூறி மறுத்து விட்டார். இந்த நிகழ்ச்சி, ஆழ்வாருடைய பாகவத பக்தியை எடுத்துக் காட்டுகிறது.

## திருப்பாணாழ்வார்

"அமலனாதிபிரான் அடியார்க்கென்னை ஆட்படுத்த விமலன்" என்று தம்முடைய பிரபந்தம் தொடக்கத்திலேயே அருளிச் செய்கிறார். அதனால் பகவத் சேஷத்வம் நிலை நிற்கும்படியாக பாகவத சேஷத்வபரியந்தம் தன்னை பகவான் ஆக்கி வைத்த படியைச் சொல்லுகிறார்.

## செல்வ நம்பி

ஒருசமயம் ஸ்ரீவைஷ்ணவர்கள் தாங்கள் திருவனந்தபுரத்துக்கு செல்லும் வழியில் திருக்கோட்டியூரிலே செல்வ நம்பியின் திருமாளிகையிலே போய்ப் புக்கார்களாக, நம்பி தாம் வெளியூருக்கு சென்றிருக்க அவருடைய தர்மபத்தினி நங்கையார், அவர்களை வரவேற்று உபசரித்து, விதைப்பதற்காக வைத்திருந்த நெல்லைக் கொற்றி அந்த ஸ்ரீவைஷ்ணவர்களை அமுது செய்யப் பண்ணினார். மறுநாள் நம்பி ஊரிலிருந்து திரும்பி வந்து விதைப்பதற்காக வைத்திருந்த நெல்லை எங்கே என்று கேட்க நங்கையாரும் அவைகளை பரமபதத்திலே விளைத்தாக கூறினார். அது கேட்டு செல்வ நம்பியும் மிகவும் மகிழ்ந்திருந்தார். ஸ்ரீவைஷ்ணவர்களை வரவேற்று உபசரிப்பது பரமபதத்திலே எம்பெருமானுக்கு ப்ரீதிரூபமான கைங்கர்யங்களைச் செய்து அவனை மகிழ்வித்தலைக் காட்டிலும் பெரிது.

## அர்த்தகாமாநபேக்ஷை:

அறம், பொருள் இன்பம், வீடு என்று நாம் விரும்பக் கூடிய பயன்களை நான்காகச் சொல்வார் பெரியோர். இவற்றில் தாழ்ந்த பயன்களாகிய அர்த்தம், காமம் அவைகளில் சிறிதும் நெஞ்சுவையாத விரக்தாக்ரேஸர்கள், நம் பூர்வாசாரியர்கள்.

எம்பெருமானார் பிள்ளையுறங்காவில்லிதாஸர் என்பவரிடம் மிகவும் பரிவு கொண்டு பழகுவதை மற்றவர்கள் குறைவாக எண்ணினர். மேலும் அவ்வடியாரை அலக்ஷியமாகக் கருதினர். அதனால் ஸ்வாமி அவ்வில்லி தாஸரின் உண்மை நிலையை உணர்த்த வேண்டுமென்று கருதி ஒரு நாடகம் நடத்தினார். தமக்கு அந்தரங்கமான ஒருவரைக் கொண்டு அம்மடத்தில் உடனிருப்பவர்களின் வஸ்திரங்களில் ஒரு சாண் அகலத் துணியைக் கிழித்து விடச் செய்தார். விடிந்ததும் அவரவர்கள் தம்தம் வேட்டி கிழிந்திருப்பதைப் பார்த்துக் கோபத்தால் தகாதன பேசினர். ஸ்வாமி, "மடத்தில் எல்லோரும் நம்மவர்கள் தாமே! யாரோ அறிந்தோ அறியாமலோ செய்ததைப் பொறுக்கலாமே" என்னவும் அவர்கள் பொறுத்திலர்.

மூன்று நாள்கள் கழிந்த பின் சிலர் பிள்ளையுறங்காவில்லி தாஸரும் பொன்னாச்சியாரும் பிணங்கியிருக்கின்றனர் என்று ஸ்வாமியிடம் விண்ணப்பித்தனர். ஸ்வாமி வில்லிதாசரிடம் காரணம் கேட்டனர். அதற்குத் தாஸர், "மூன்று நாள்களுக்கு முன் நாச்சியார் ஒரு பக்க ஆபரணங்களோடு நின்றாள். காரணம் கேட்டேன். உறங்கிக் கொண்டிருக்கும் போது யாரோ சில ஸ்ரீவைஷ்ணவர்கள் உள்ளே வந்து பொன்னாச்சியாரின் காதணி, கையணிகளைக் கழற்றினராம்; வைஷ்ணவர்கள் கழற்றுகிறார்களென்று உணர்ந்து, மறுபாதியும் கழற்றிக் கொள்ளட்டும் என்று மறுபுறம் புரண்டு படுத்தாளாம். இதைக் கண்டவர்கள் விழித்துக் கொண்டாள் என்று எண்ணி ஒரு பாதி ஆபரணங்களை விட்டு விட்டுப் போய்விட்டார்களாம். இவளுக்கென்ன சுதந்திரம்! பரதந்த்ரையாக இருந்திருந்தால் மற்றவைகளையும் அவர்கள் எடுத்துக் கொண்டிருப்பார்களே, அவ்வைஷ்ணவர்களுக்கு என்ன கஷ்டமோ, அவர்களுக்கு உதவாதவாறு தன் சுதந்திரத்தால் செய்து விட்டாளே! இப்படி சுதந்தரையாயிருக்கும் இவள் முகத்தில் விழிக்கவும் விரும்பவில்லை" என்று பதில் கூறினர்.

இதைக் கேட்டு ஸ்வாமி மற்றவர்களைப் பார்த்து, "கேட்டீரே! மறுபாதி நகைகளையும் கொடுக்க வேண்டுமென்றே மனைவி நினைக்கிறாள். சுதந்திரத்தாலல்லவா மறுபாதி நகைகளை அவர்கள் கொள்ளாமல் போய் விட்டார்கள் என்று கணவர் கோபிக்கிறார். மேலும் சுதந்திரமானவள் என்றும் மனைவியைப் பழிக்கிறார். இவர்களின் நிலை எங்கே! ஒரு சாண் துண்டு கிழிந்ததென்பதற்காக மடத்தையே கலக்கிய நிலை எங்கே!" என்று கூறவும் ஏனையோர்களெல்லாம் அவர் தம் ஞான வைராக்கியங்களுக்கு வியந்தும் தம் நிலை கண்டு வெட்கியும் போயினர். பிறகு ஸ்வாமி இவை யாவும் தாம்

நடத்திய விஷயம் தான் என்று கூறிப் பொன்னாச்சியாரின் நகைகளைத் திரும்பத் தந்து அவர்தம் குணபூர்த்திக்கு மிகவும் கொண்டாடினர். இந்த நிகழ்ச்சியினால் பிள்ளை உறங்காவில்லி தாசருடையவும், பொன்னாச்சியாருடையவும், ஞானபக்தி, வைராக்கியங்கள் விளங்குகின்றன.

## நிகிலஜநஸௌஹ்ருத்பி:

யாவரும் நன்றாக வாழவேணும் என்று நெஞ்சு நிறம்ப எண்ணுமவர்கள்; யாரிடமும் பகையில்லாதவர்கள்.எம்பெருமானாரே இதற்கு ஓர் எடுத்துக்காட்டு என்பதை அவர் வாழ்க்கையில் நடந்த ஓர் நிகழ்ச்சி விளக்குகிறது.

பெரிய நம்பிகள் நியமனப்படி உடையவர் திருக்கோட்டியூர் நம்பியிடம் சென்று நமக்குத் திருமந்த்ரார்த்தத்தையும் சரம ச்லோகார்த்தத்தையும் உபதேசிக்கும்படி வேண்டி நின்றார். இவைகளின் அர்த்தகௌவரத்தை உலகத்தார் அறிய வேண்டும் என்றும், உடையவருடைய ஆர்த்தியைப் பரிக்ஷிக்க வேண்டும் என்றும் திருவுள்ளங் கொண்டு, "மற்றொரு ஸமயம் உபதேசிக்கிறோம். போய் வாரும்" என்று திருக்கோட்டியூர் நம்பிகள் சொல்லி அனுப்பி விட்டார். ஸ்ரீராமாநுஜர் திரும்பவும் திருவரங்கத்துக்கு எழுந்தருளி விட்டார். இவ்விதம் திருக்கோட்டியூருக்குப் பதினேழு தடவை சென்றார். ஒவ்வொரு ஸமயத்திலும், 'பிறகு உபதேசிக்கிறோம்' என்றே நம்பிகள் உரைத்திட்டார். மந்த்ரார்த்தங்களை உபதேசிக்கவில்லை. பின்பு ஒரு ஸமயம் திருக்கோட்டியூர் நம்பிகள் திருவரங்கத்துக்கு எழுந்தருளிப் பெரிய பெருமாளை ஸேவித்துச் சென்றார். அப்பொழுது பெரியவர்கள், "உடையவர் விஷயத்தில் இவ்வளவு பரிகைக்ஷ பண்ண வேண்டுமா?" என்று விவாதத்துடன் விண்ணப்பம் செய்தனர். அந்த வார்த்தைகளைக் கேட்டும் நம்பிகள் பதில் ஒன்றும் சொல்லாமல் திருக்கோட்டியூர் எழுந்தருளி விட்டார். அவ்விடத்திலிருந்து ஸ்ரீவைஷ்ணவர் ஒருவரை அனுப்பி ராமாநுஜரை அழைத்து வரும்படி சொன்னார். ஸ்ரீவைஷ்ணவர் திருவரங்கம் வந்து ஸ்ரீராமாநுஜரிடம் நம்பிகளின் நியமனத்தை விண்ணப்பித்துக் கொண்டார்.

அதைக்கேட்டு உடையவர் உகந்து, 'உடனிருக்கும் கூரத்தாழ்வான், முதலியாண்டான் இருவரையும் அழைத்துக் கொண்டு திருக்கோட்டியூர் எழுந்தருளினார். அப்பொழுது நம்பிகள், "நாம் உபதேசிக்கும் மந்த்ரார்த்தங்களை ஒருவருக்கும் உபதேசிக்கக் கூடாது" என்று நியமித்து, திருமந்த்ரார்த்தத்தையும் சரமச்லோகார்த்தத்தையும் விகதமாக உபதேசித்து அருளினார். உடையவரும் க்ருதார்த்தராய் மிகவும் ஸந்தோஷத்துடன்

எழுந்தருளியிருந்தார். மறுநாள் காலை அத் திருக்கோட்டியூரிலேயே இந்த ரஹஸ்யார்த்தத்தை அறிந்து கொண்டு சிறந்த வாழ்வைப் பெற வேண்டும் என்று ஏங்கியிருக்கின்ற ஸ்ரீவைஷ்ணவர்களையெல்லாம் அழைத்துக் கொண்டு அவ்வூரில் எம்பெருமான் ஸந்நிதியில் அவர்களுக்கெல்லாம் அப்பரம ரஹஸ்யார்த்தங்களை உபதேசித்தார். இந்தச் செய்தியைக் கேட்ட நம்பிகள் யதிராஜரை வரச்செய்து, "நேற்று நாம் இந்த ரஹஸ்யார்த்தங்களை ஒருவருக்கும் உபதேசிக்க வேண்டாம் என்று நியமித்திருக்கச் செய்தேயும் இன்று யாவரும் அறிய அந்த அர்த்தங்களை மற்றவர்களுக்கு உபதேசித்தது ஏன்? இதனால் ஆசாரியன் நியமனத்தை அதிலங்கனம் பண்ணியதாகாதா? இதற்குப் பலன் என்ன ஆகுமென்று அறிவீரோ?" என்று திருவுள்ளம் கலங்கி மிகச் சீற்றத்துடன் கடிந்து கொண்டார்.

இதைக் கேட்ட உடையவர், "ஆசார்ய நியமனத்தை அதிலங்கனம் பண்ணிய அடியேனுக்கு நரகமே பலன்" என்று விநயத்துடன் விண்ணப்பித்தார். "இவ்விதம் அறிந்திருந்தும் நமது நியமனத்தைத் தட்டியது உசிதமாகுமா" என்று நம்பிகள் கேட்க, "அடியேன் ஒருவனே அன்றோ நரகம் புகுவது? இந்த அர்த்த விசேஷங்களைக் கேட்ட ஆத்மகோடிகள் எல்லாரும் தேவரீர் திருவடி ஸம்பந்தத்தால் உஜ்ஜீவிப்பார்கள் என்று எண்ணியே உபதேசித்தேன்" என்று யதிராஜர் விக்ஞாபித்துக் கொண்டார். திருக்கோட்டியூர் நம்பிகளும் உடையவரின் உட்கருத்தை அறிந்து, உகந்து, "இவ்விதம் நமக்குப் பரஸம்ருத்தி கூடிற்றில்லையே' என்று எண்ணினார். எம்பெருமான் கருணைக்கடல் என்று சாஸ்த்ரங்கள் மூலமாக அறிந்திருந்தோம். அதை இன்று இவரிடம் காண்கிறோம். ஆகையால் இவர் "எம்பெருமானாரே" என்று பலர் அறிய நம்பிகள் அருளிச் செய்தார். "எம்பெருமானாரே, உமக்கு ஆக்ஞாதிலங்கன தோஷமில்லை" என்று உகப்புடன் உரைத்திட்டார்.

ராமாநுஜரின் சிறியதாயார் குமாரர் கோவிந்தப்பெருமாள். இவர் பால்யத்தில் ராமாநுஜருடன் வேதாந்தம் பயின்றவர். இவர் கர்மவசத்தால் சைவராகி காளஹஸ்தியில் இருந்தபோது ராமாநுஜர் கோவிந்தப் பெருமாளை வைஷ்ணவராகத் திருத்த வேண்டும் என்று மிகவும் பெரிய திருமலை நம்பிகளைப் பிரார்த்திக்க, அவரும் கோவிந்தப் பெருமாளைத் திருத்தி ராமாநுஜரிடம் கொடுக்கப்பட்டார். வைராக்யபூர்ணராய் இருந்த இவருக்கு ராமாநுஜர் ஸந்யாஸ ஆச்ரமம் தந்து எம்பார் என்று பெயரிட்டு அறிய வேண்டுவன எல்லாம் உபதேசித்தருளினார். தமது ஆசார்யர்களிடம்

படாதபாடுபட்டு பெற்ற பெருமை வாய்ந்த பொருள்களை அவர்பட்ட ச்ரமம் எதுவும் படாமல் எம்பாருக்கு அருளினார். இதுவே ராமாநுஜருடைய கருணைக் குணத்திற்கு எடுத்துக் காட்டு.

### *நிர்ஜிதக்ரோதலோபை:*

கோபத்தையும் லோபத்தையும் வென்றவர்கள், சினமே சிறிதும் இல்லாதவர். கீழ்த்தரமானது எனக்கூடிய எண்ணமோ நடத்தையோ சிறிதுமில்லாதவர்.

க்ருஷ்ணமிச்ரனென்கிற ப்ரதிவாதியை ஸ்வாமி தேசிகன் வாதத்தில் ஜயித்து ஸம்ப்ரதாயத்தை நிலைநாட்டிய பிறகு அவன் ஸ்வாமியின் பெருமைக்குத் தோற்றபோதிலும் ஸ்வாமியொழிந்த ஏனைய ஸ்ரீவைஷ்ணவர்களிடத்தில் தான் அபஜயப்படாமையால் அவர்கள் பக்கல் தன் பெருமையைப் பாராட்டியவனாய் கோஷ்டியில் தான் ஸ்வாமிக்கு அடுத்தபடியாய் நின்று மரியாதைகள் பெறவேண்டுமென்று கேட்டுக் கொண்டான். ஸ்வாமி புன்முறுவல்பூத்து அப்படியே ஆகட்டும் என்று இசைந்தனராம். தன்னைப் போல் ஸ்வாமியும் முதல் ஸ்தானத்தை விரும்பி நிற்பர் என்று அவன் எண்ணிய எண்ணத்தை தவறாக்கி ஸ்வாமி அந்த ஸ்ரீவைஷ்ணவ கோஷ்டியில் கடைசியாக நின்றனராம். அதற்கு கடைசியான ஸ்தானம் கிருஷ்ணமிச்ரனுக்கு கிடைத்தது. ஸ்வாமியின் ஞானம் தனக்கில்லாததோடு அவர் வினயமும் தனக்கில்லையே என்று எண்ணலானான் கிருஷ்ணமிச்ரன். இந்த வ்ருத்தாந்தத்தில் ஸ்வாமியின் பெருமையும் ஒடுக்கமும் ஒதுங்கே தோற்றுவன. ப்ரதிவாதிகள் பக்கல் பெருமையும் ஸ்ரீ வைஷ்ணவர்களான பாகவதோத்தமர் பக்கல் ஒடுக்கமும் இது போன்ற பல வ்ருத்தாந்தங்கள் ஸ்வாமி தேசிகனின் சரித்திரத்தில் நிரம்பியிருக்கின்றன என்பது நம் அனைவருக்கும் தெரிந்ததே.

## 7. திருமந்த்ரத்திலும் த்வயத்திலும் நியதனாகை

ஆசார்யன் நமக்கு உபதேசித்த திருமந்த்ரம் அதன் விவரணமான த்வயம் இவற்றில் பொதிந்துள்ள அர்த்தங்களை, அறிந்து அவற்றிலேயே போது போக்குடையவனாய் அவற்றின்படி வாழ்க்கையை அமைத்துக் கொள்ளல்.

“முமுக்ஷுவுக்கு அறிய வேண்டிய ரஹஸ்யம் மூன்று” என்பது பிள்ளை லோகாசார்யர் ஸ்ரீஸூக்தி.

ச்ரியபதியான ஸர்வேச்வரன் தனது பரம க்ருபையால் வெளியிட்டருளின திருவெட்டெழுத்து (திருமந்த்ரம்) இருபத்தைந்தெழுத்து (த்வயம்) முப்பத்திரெண்டெழுத்து (சரமஸ்லோகம்) ஆன மூன்று ரஹஸ்யங்களும் ஸத்ஸம்ப்ரதாய பரம்பரையாக நாதமுனிகள் தொடங்கி அஸ்மதாசார்ய பர்யந்தமாக நமக்குக் கிடைத்துள்ளன. திருமந்த்ரம், த்வயம் சரமச்லோகம் இவை மூன்றும் வேத வேதாந்தங்களின் சாரமான அர்த்தங்களை ப்ரதிபாதிக்கையால் அவ்வர்த்தங்களின் சீர்மையால் நமது ஆசார்யர்கள் இவைகளை மறைத்துப் போந்து ரஹஸ்யமாகவே உபதேசித்து வந்தனர். இவை நெஞ்சில் தரிக்கவும் அனுஸந்திக்கவும் சுலபமாகவே உள்ளனவாயினும் ஒன்றுக்கொன்று விவரணமாக அமைந்துள்ள இவைகளின் ஆழ்ந்த பொருள்களை கேவலம் புத்தி சாதுர்யத்தினாலோ சாஸ்த்ர ஜ்ஞானம் கொண்டோ அறிந்து கொள்ள முடியாது. ஸதாசார்யன் மூலமாக உபதேசமாக பெற்றால் தான் இவற்றின் உண்மையான அர்த்த ஜ்ஞானம் உண்டாகும். மேலும் மந்த்ரத்தை உபதேசிக்கும் ஆசார்யனிடம் நன்றியுணர்வும் அன்பும் அவசியம் வேணும். மந்த்ரப்ரதிபாதித்யனான எம்பெருமானிடம் கனத்த ப்ரேமம் உண்டாக வேணும்.

திருமந்த்ரம், "மந்த்ராணாம் பரமோ மந்த்ர:" என்கிறபடி எல்லா மந்த்ரங்களிலும் உயர்ந்ததாய் மந்த்ரரஹஸ்யம் எனப்படும், ச்ரம ச்லோகத்திலே "மோக்ஷோபாயமாகக் கூறப்பட்டுள்ள உபாயங்கள் யாவையையும் அறவேவிட்டு என்னையே உபாயமாகப் பற்று" என்று எம்பெருமான் விதிக்கையால் அது விதி ரஹஸ்யமாகிறது. இவை இரண்டும் ஆசார்ய வாக்யம் என்பர் பெரியோர். "உபாயமாகப் பற்றுகிறேன்" என்று த்யவத்தில் நாம் ஸித்தோபாயத்தைப் பற்றுகையால் இது அநுஸந்தான ரஹஸ்யமாய் சிஷ்ய வாக்யமாக இருக்கும்.

இவற்றுள் முதல் முன்னம் அறிய வேண்டியது திருமந்த்ரம். இதை மூலமந்த்ரம் என்றும் திருவஷ்டாக்ஷரம் என்றும் திருவெட்டெழுத்து என்றும் அழைப்பர். முதலில் நம்மை நாம் அறிய வேண்டும். நம்மை நமக்கு உணர்த்துதலாகிற ஸ்வரூபசிக்ஷை பண்ணித் தருவது திருமந்த்ரம். ஆகையாலே முதல் ரஹஸ்யம் திருமந்த்ரமாகிறது.

## திருமந்திரம்

இது சகல வேதசாரம். ஆத்மாக்களுக்கு ஆகாரத்ரயம் எனப்படும் மூன்றுவித ஸ்வபாவங்களுண்டு. அவை அநந்யார்ஹ சேஷத்வம் (நாராயணனுக்கே அடிமைப்பட்டிருத்தல்) அநந்ய சரணத்வம் (அவனையே

உமாயமாகக் கொள்ளுகை). அநந்ய போக்யத்வம் (நாராயணனுக்கே தான் அனுபவிக்கப்படுகின்றவனாய் இருக்கை). அதாவது தான் செய்கின்ற சகல கைங்கர்யங்களும் தனக்கு இன்பமென்றிருக்கை யன்றிக்கே, தனக்கும் அவனுக்கும் என்றிருக்கையன்றிக்கே அவனுடைய இன்பத்துக்கென்றே செய்கை. இவ்வாகாரத்ரயத்தை யறிவிக்கின்ற திருமந்த்ரம் அர்த்த பஞ்சகத்தையும் உணர்த்துகிறது. ஆகையால் ப்ரதம ரஹஸ்மாகிறது.

## திருமந்த்ரத்தின் தோற்றம்

இப்படிப்பட்ட பரமார்த்தங்களையறியாதே ஸம்ஸாரிகள் பகவத் கைங்கர்யத்தை யிழந்து பிறவிப் பெருங்கடலுள் அழுத்தி நோவு படுவதைக் கண்ட ஸர்வேச்வரன் தன் கிருபையாலே இவர்கள் தன்னை யறிந்துய்யும்படி பரம ரஹஸ்யமான இத்திருமந்த்ரத்தை நாராயண ரிஷி யென்னும் தர்ம தேவதையின் பிள்ளையாகப் பிறந்து தன்னுடைய அம்சமான நரன் என்னும் ரிஷிக்குப் பத்ரிகாசிரமத்திலே உபதேசித்தருளினான்.

ஆசாரியன் விஷயத்திலே சிஷ்யன் எவ்வாறு நடந்து கொள்ள வேண்டும் என்னும் சிஷ்ய லக்ஷணத்தை அறியாத உலகத்துக்கு அதனை அறிவிக்கைக்காகத் தானே சிஷ்யனுமாய் நின்று உபதேசம் பெற்று அநுஷ்டித்துக் காட்டினான்.

இத்திருமந்த்ரம் சகல பலன்களையும் கொடுக்கவல்லது. ஜப ஹோமங்களாலே கார்யம் கொள்வார்க்கு அவர்கள் விரும்பிய பலன்களைக் கொடுக்கும். அர்த்த ஜ்ஞானத்தோடு அநுசந்திப்பார்க்கு ஸ்வரூப ஜ்ஞானத்தைப் பிறப்பித்துப் பரம புருஷார்த்த மோக்ஷத்தைக் கொடுக்கும்.

## திருமந்த்ரப்ரகரணம்

திருமந்த்ரம் எட்டு திருவக்ஷரமாய், மூன்று பதமாயிருக்கும். "ஓம் நமோ நாராயணாய" என்பது தான் திருமந்திரம் ஆகும்.

முதல் பதம் அ,உ,ம மூன்று திருவக்ஷரமாய், மூன்று பதமாய் இருக்கும். இரண்டாம் பதம் ந என்றும், ம: என்றும் இரண்டு திருவக்ஷரமாய் இரண்டு பதமாய் இருக்கும். மூன்றாம் பதம் "நாராயணாய" என்று ஐந்து திருவக்ஷரமாய் இரண்டு பதமாய் மேல் "ஆய" வென்று சதுர்த்தியாயிருக்கும்.

ப்ரணவத்தினால் கண்ணபுரமொன்றுடையானுக்கு அடியேன் ஒருவர்க்குரியேனோ? என்பதின்படியே நமக்கும் பரம புருஷனுக்குமுள்ள

சேஷசேஷி பாவமான உறவு சொல்லப்பட்டது. அகாரம் ரக்ஷகனான எம்பெருமானையும் மகாரம் ரக்ஷ்யமான ஜீவனையும் சொல்லுகின்றன. மறைந்த சதுர்த்தி (ஆய) இருவர்க்குமுள்ள உறவைச் சொல்லும்.உகாரத்தினால் இவ்வுறவினால் தேறிய பலன் காட்டப்படும். அதாவது அநந்யார்ஹ சேஷத்வமும் அதனால் பலிக்கும் கைங்கர்யமும்.

நம: என்ற நடுப்பதத்தினால் ஸ்வரூப விரோதி, உபாய விரோதி, ப்ராப்யவிரோதி மூன்றும் கழியும். ஓம் நம: என்பதனால் அவனுக்கே ஆட்பட்டிருக்கையாகிற ஸ்வரூபத்திற்கு விரோதி கழிக்கப்படுகிறது. நமோ நம: என்று சேர்த்தால் எம்பெருமானைத் தவிர்த்த இதர உபாயங்களை நமக்குத் தகுந்த உபாயங்களாக எண்ணுகையாகிற உபாய விரோதி கழியும். நாராயணாய நம: என்று சேர்ந்தால், ப்ராப்யமான பகவத் கைங்கர்யத்தினால் வரும் இன்பம் நமது என்று எண்ணுகையாகிற ப்ராப்யவிரோதி கழியும். "யானே என் தனதே" என்றிராமல் "யானே நீ என்னுடைமையும் நீயே (நானும் உனது; என்னது என்று எண்ணுமவை எல்லாம் உனதே) என்றிருக்கை ஸ்வரூப விரோதி கழிகையாம். நம்மிடம் ஏதோ சக்தி உள்ளதென்று எண்ணுகை உபாயவிரோதியாம். "களைவாய் துன்பம் களையாதொழிவாய் களைகண் மற்றிலேன்" (என் துன்பத்தை களைந்தாலும் களையாவிடினும் உன்னையன்றி வேறு ரக்ஷகன் எனக்கு இல்லை) என்றிருக்கை உபாயவிரோதி கழிந்த நிலை, "மற்றை நங்காமங்கள் மாற்று" கைங்கர்யத்துக்காக இட்டுப் பிறந்த நாம் உன் முகமலர்த்திகாகவே ஒழிவில் காலமெல்லாம் உடனாய் மன்னி வழுவிலா அடிமை செய்வோம். இதனால் வரும் போகம் உன்னுடையதாகவே ஆக வேண்டும். எனது என்ற எண்ணமே கலசக் கூடாது என்றிருக்கை ப்ராப்யவிரோதி கழிந்த நிலை.

இனி நாராயண – ஆய என்ற பதங்களின் அர்த்தத்தை காண்போம்:

நாராநாம் அயநம் ய, ஸ: நாராயண: – நித்யவஸ்துக்களுக்கு ஆதாரமாயிருந்து தாங்குபவன் நாராயணன் என்றதாயிற்று. இதனால் நாராயணனே பரம்பொருள் – பரமபுருஷன் – தனக்கும் மேலானவன் எவனுமில்லாதவன், எல்லையற்ற பெருமையுள்ளவன் என்ற பரத்வம் ஸித்திக்கிறது. இன்னொரு முறையிலும் இச்சொற்களைச் சேர்க்கலாம். அது, நாரா, அயநம் யஸ்ய ஸ: நாராயண: – நாரங்கள் இவனுக்கு ஆச்ரயங்கள் (இருப்பிடம்) அதாவது நித்ய வஸ்துக்களுள் உட்புகுந்து அவற்றுள் அந்தராத்மாவாக உள்ளவன் யாவன் அவன் நாராயணன் என்று பொருளாகுமிங்கு. சிறிது பெரிது என்று கணிசியாமல் எல்லாப்

பொருள்களிலும் மிகப் பெரியவனான பரமன் அவற்றுள் தன்னை முழுதுமாக அமைத்துக் கொள்ளுகையால் அவனின் ஸௌலப்யம் – எளிமை – ஸித்திக்கிறது. ஆக நாராயண என்னும் திருநாமத்தால் தேறுவது பரத்வமும் ஸௌலப்யமும்.

இனி "ஆய" என்ற நாலாம் வேற்றுமை உருபின் அர்த்தம் காண்போம். நாராயணாய – நாராயணனின் பொருட்டு; இத்தால் "சென்றால் குடையாம், இருந்தால் சிங்காதனமாம் நின்றால் மரவடியாம் – என்பதின்படியே பலபடியாக – குடையாகவும் ஆஸனமாகவும் படுக்கையாகவும் பாதுகைகளாகவும் திருவநந்தாழ்வான் போல எல்லா அடிமைகளும் செய்வேனாக வேண்டும் என்று வேண்டுவதைச் சொல்லும். அத்யந்த பாரதந்தர்யம் (அசித்து போல அவனிட்ட வழக்காயிருக்கை) ஸ்வரூபம் என்று நம: பதத்தின் அர்த்தம் சொல்லி இப்போது நமக்கென்று ஒன்றை விரும்பிக் கேட்கலாமோ? என்னில்; கைங்கர்ய ப்ரார்த்தனை நமது ஸ்வரூபத்திலே சேர்ந்ததாகையினால் கேட்கலாம். ஏனெனில் 'தனக்கேயாக எனைக் கொள்ளுமீதே" என்பதே நமது ப்ரார்த்தனை. என்பது. ஆகையால் 'ஒழிவில் காலமெல்லாம் உடனாய் மன்னி வழுவிலா அடிமை செய்ய வேண்டும் நாம்' என்ற ப்ரார்த்தனையும் பாரிப்பும் நம் ஸ்வரூபத்துக்குஇசைந்தவை தாம். இதுதான் "ஆய"விற்குப் பொருள் எல்லாக் காலத்திலும், எல்லா இடங்களிலும் எல்லா நிலைகளிலும் இவ்வடிமை நடக்கும்படி அமைய வேணும்.

உலகாரியர் திருமந்த்ரத்தை எட்டிழையாய் (எட்டெழுத்து) மூன்று சரடாய் (மூன்று சொற்கள்) இருபத்தொரு மங்கள ஸூத்ரத்திற்கு (திருமாங்கல்யம்) ஒப்பிடுகிறார். இத்துடன் ஸம்பந்தமுள்ள ஜீவர்களுக்கு பகவான் பதியாய் (கணவனாய்) நின்று ரக்ஷிப்பான் என்று கருத்து.

திருமந்த்ரார்த்தம் கைபுகுந்தால் ப்ராப்யருசி விஞ்சி இருக்கும். அதாவது ஸ்வாமியாய் பதியாய் ரக்ஷகனாய், அமைந்த எம்பெருமானைக் காணவேணும். அவன் திருவடிகளில் அடிமை செய்ய வேணும் என்ற த்வரை விஞ்சியிருக்கும். அவனைக் கண்டாலல்லது தரியாதபடியும் அவனைக் கண்டுவிட்டால், அவனை எப்போதுமே பார்த்துக் கொண்டே இருப்பதே காரியமாய் விடும். இந்த அநுபவமில்லாமல் "பழுதே பலபகலும் போயின" என்று அழும் நிலையும் உண்டாம். நம் ஆசார்யார்கள் "அன்று நான் பிறந்திலேன் பிறந்த பின் மறந்திலேன்" என்கிறபடியே திருமந்திரத்தை அறிவதற்கு முன் தாங்கள் பிறந்ததாக நினைக்கமாட்டார்கள். திருமந்திரத்தை அறிந்த பின்பு தங்களை மறக்கமாட்டார்கள்.

திருமந்த்ர ஜ்ஞானம் பிறப்பதற்கு முன்பு தம்மைப் பிறந்தவராகவே எண்ணமாட்டார்கள். இம்மந்திரத்தின் அர்த்தமொழிய வேறொன்றையும் கொண்டு பொழுதுபோக்க மாட்டார்கள்.

யத்ர அஷ்டாக்ஷரஸம்ஸித்த: மஹாபாகோமஹீயதே!
ந தத்ர ஸஞ்சரிஷ்யந்தி வ்யாதி துர்பிக்ஷ தஸ்கரா

திருமந்திரம் கைபுகுந்த மஹான்கள் உள்ள இடத்தில் வ்யாதி துர்பிக்ஷம் தஸ்கரம் இவை காணக் கிடைக்கா. வ்யாதியாவது விஷயப்ராவண்யம்; பகவானன்றி இதர விஷயங்களில் போக்யதாபுத்தி; இது நாராயணாய பதத்தின் பொருளினால் தொலைக்கப்படும். துர்பிக்ஷமாவது – ஸர்வரக்ஷகனானவன் அபய முத்ரையைக் காட்டி நிற்கும் போது தானே தன்னைக் காப்பவனாக எண்ணுகை; இது "நம:" வின் பொருளை நினைத்தால் தொலையும். தஸ்கரமாவது திருட்டு – ஆத்மாஹபாரமான திருட்டு; ப்ரவணத்தின் பொருளை நினைத்தால் இது தொலையும்.

## திருமந்த்ரம் உணர்த்தும் நவவித ஸம்பந்தம்

அகார பதத்தாலே பிதா புத்ர ஸம்பந்தம்.
அவரக்ஷணே என்கிற தாதுவினால் ரக்ஷ்யரக்ஷகஸம்பந்தம்
லுப்த சதுர்த்தியாலே சேஷி சேஷ ஸம்பந்தம்.
உகார பதத்தாலே பதி பார்யா ஸம்பந்தம்.
மகார பதத்தாலே ஜ்ஞாத்ரு ஜ்ஞேய ஸம்பந்தம்.
நார பதத்தாலே சரீர சரீரி ஸம்பந்தம்
அயந பதத்தாலே ஆதார ஆதேய ஸம்பந்தம்
ஆய பதத்தாலே போக்த்ருத்வ போக்யத்வ ஸம்பந்தம்.

திருமங்கையாழ்வார், "மற்றெல்லாம் பேசிலும் நின் திருவெட்டெழுத்துங் கற்று நான் உற்றதும் உன்னடியார்க்கடிமை" (பெரிய திரு 8-10-3) உன்னைப் பற்றி எவ்வளவு பேசியிருந்தாலும் உன்னுடைய திருவஷ்டாக்ஷரத்தைக் கற்று அதன் பரம ஸாரார்த்தத்தை நிஷ்கரித்து நானடிமைப் பட்டது உன் அடியார்க்கே யல்லது உனக்கல்ல" என்கையால் பாகவத சேஷத்வமே திருமந்த்ரத்தின் திரண்ட பொருளாகும். இதை நம: பதம் வ்யக்தமாகக் காட்டுகிறது. "தனக்கேயாக எனைக் கொள்ள வேணும். இதுவே நான் உன்னிடம் வேண்டுவது."என்பது நம பதத்தின் ஸாரமான அர்த்தம் அத்தலைக்கே ரஸம்மாம்படி பூ, சந்தனம் போலும் இவ்வாத்ம வஸ்துவும் உபயோகப்பட

வேண்டும். இப்படி அத்யந்த பாரதந்த்ர்யமான நினைவு பிறந்தால் எல்லா நன்மையும் உண்டு; எல்லா தோஷங்களும் தாமே விலகும். ஆகையினால் நம: பதத்தினர்த்தம் நெஞ்சில் பதிந்து அதன்படி வைஷ்ணவத்வ பூர்த்தியுடன் ஒழுகுவது அத்யாவச்யம். இது அவனருளாலும் ஆசார்யாநுக்ரஹத்தாலும் நாமெல்லோர்க்கும் அமைய வேண்டும்.

## த்வய மந்த்ரம்

மந்த்ரத்னமென்றும் ப்ரஸித்தி பெற்றிருக்கும் த்வயமானது விஷ்ணு லோகத்தில் எம்பெருமானால் பிராட்டிக்கு உபதேசிக்கப்பட்டது. ஆசார்யர்கள் திருமந்த்ரத்திற்காட்டிலும் த்வயத்தில் அதிகமாக ஊன்றிப் போருவர்கள். "திருமந்த்ரத்திலே பிறந்து த்வயத்திலே வளர்ந்து த்வயைகநிஷ்டராவீர்" என்று ஆசாரியர்கள் ஆசாஸிப்பர்களாம். மணவாளமாமுனிகளின் திருவதரம் எப்போதும் த்வயாநுஸந்தானத்தினால் ஸ்புரித்துக் கொண்டிருக்குமென்றும் சொல்லப்பட்டுள்ளது. நஞ்சீயர், 'த்வயம் தவிர்ந்த மற்ற அநுஸந்தானம் அனைத்தும் கடலோசைக்குச் சமம்" என்று கூறியுள்ளமை கொண்டு த்வயம் பற்றிய நஞ்சீயர் கருத்தை நன்கறியலாம்.இப்படிப்பட்ட பெருமை த்வயத்திற்கு உள்ளதொன்றாம். ஸ்ரீவைஷ்ணவனாயிருப்பானொருவனுக்கு த்வயரஹஸ்யம் மிகவும் உபாதேயம்.

த்வயமானது இரண்டு வாக்யங்களாய், ஆறு பதங்களாய்ப் பத்து அர்த்தங்களை அறிவிப்பதாயிருக்கும்.

1. ஸ்ரீமந் நாராயண சரணௌசரணம் ப்ரபத்யே.

2. ஸ்ரீமதே நாராயணாய நம:

ஆக பூர்வ வாக்யம் மூன்று பதங்கள், உத்தரவாக்யம் மூன்று பதங்கள்."பெரிய பிராட்டியாரைப் புருஷகாரமாக முன்னிட்டுக் கொண்டு எம்பெருமானுடைய திருவடிகளைப் பற்றுகிறேன். பெரிய பிராட்டியும் அவனுமான சேர்த்தியில் அவனுடைய மகிழ்ச்சிக்காக, எல்லா அடிமைகளும் செய்யப் பெறுபவனாக ஆக வேண்டும்" என்று ப்ரார்த்திப்பதை த்வயம் உணர்த்துகிறது.

பட்டர் த்வயத்தின் அர்த்தத்தை புத்தி பண்ணி ஸப்தாந்தரத்தாலே இவ்வர்த்தத்தை அநுஸந்திக்க வொண்ணாதோ?" என்று உடையவருக்கு விண்ணப்பஞ் செய்ய: "அதுக்குக் குறையில்லை; ஆகிலும் இப்பாசுரத்துக்குச் சுரக்கும் அர்த்தம் வேறொரு பாசுரத்துக்குச் சுரவாதே" என்று அருளிச் செய்ததாக ஐதீஹ்யம் உண்டு. (வார்த்தாமாலை 106).

இதன் கருத்தாவது, "வேறொரு ப்ரமாண வாக்யத்தாலே த்வயத்தின் அர்த்தத்தை அநுஸந்திக்கக் கூடாதா?" என்பது பட்டரது கேள்வியின் கருத்து. "அர்த்தமே முக்யமாகையாலே, அப்படி த்வயத்தின் அர்த்தம் முழுவதையும் வெளிப்படுத்தும் ப்ரமாண வாக்யம் இருந்தால் அதைக் கொண்டு த்வயார்த்தத்தை அநுஸந்திக்கக் குறையில்லை; ஆனால் த்வயார்த்தம் முழுவதையும் சுரக்கும் வேறொரு ப்ரமாணம் இல்லாமையாலே த்வயத்தைக் கொண்டே இவ்வர்த்தங்களை அநுஸந்திப்பதையே நம் ஆசார்யர்கள் ஆதரித்துப் போருகிறார்கள்" என்பது எம்பெருமானாருடைய பதிலின் கருத்து.

பிள்ளைலோகாசார்யர் எடுத்துக்காட்டியுள்ள ஒரு நிகழ்ச்சி, நஞ்சீயருடைய மிகச் சிறந்த குணத்தையும், த்வய மந்த்ரத்தில் அவருக்கிருந்த நிஷ்டையையும் நன்கு புலப்படுத்துகிறது.

வீராணத்து அருளாளப் பெருமான் எம்பெருமானார் என்பவர் நம்பிள்ளையை முன்னிட்டுக் கொண்டு நஞ்சீயரிடம் வந்தார். "இவனுக்கு நல்வார்த்தை கூற வேண்டும்" என்று நம்பிள்ளை நஞ்சீயரை வேண்டினார். நஞ்சீயர், "ஸம்ஸாரிகளில் ஒருவர்க்கும் நல்வார்த்தை கூறுவதில்லை என்று முடிவு செய்து விட்டேன். எனவே நீரே உபதேசியும்" என்று கூறிவிட்டார். "தேவரீர் எழுந்தருளியிருக்கும் போது அடியேன் கூறுவதாவது? அவனுக்கு த்வயத்தை உபதேசிக்காவிட்டாலும் வேறு மந்த்ரத்தையாவது உபதேசித்து அனுப்பக் கூடாதோ?" என்றார் நம்பிள்ளை. நஞ்சீயர் வேறு வழியில்லாமல் அவனை அழைத்துக் கொண்டு போய்க் குருபரம்பரையுடன் த்வயத்தையே உபதேசித்தார். இதைக் கண்ட நம்பிள்ளை, "வேறு மந்த்ரத்தை உபதேசிப்பதாக அழைத்துக் கொண்டு போய், த்வயத்தையே உபதேசித்து விட்டதற்குக் காரணம் என்ன?" என்று கேட்டார். அதற்கு நஞ்சீயர், "நான் உபதேசம் செய்யாமல் தவிர்த்து விடலாம் என்று பார்த்தேன். ஆனால் நானே உபதேசிக்க வேண்டும் என்றான பின்பு நான் நம்பியிருப்பதையேயன்றோ அவனுக்கும் உபதேசிக்க வேண்டும். வேறொன்றை உபதேசித்தால், அவனை ஏமாற்றியதாகாதோ?" என்றார்.

நஞ்சீயர், அந்திம தசையில் நோய்ப்பட்டார். அப்போது அவருடைய சீடருள் ஒருவர், த்வயாநுசந்தானம் செய்யக்கூடாதா!" என்று கேட்க, "அதென்ன நடையாடும் உங்களுக்கில்லாமல் இப்போதாக எனக்கோ வேண்டுவது?" என்று நஞ்சீயர் அருளினார். இதனால் த்வயம் ஸதா அநுஸந்திக்கத்தக்கது; இறுதிக் காலத்துக்கு மட்டும் தான் அவசியம் என்பது இல்லை என்றபடி.

## நம்பிள்ளை

ஒருசமயம், நம்பிள்ளை நோயுற்றிருந்தபோது பிள்ளை எங்களாழ்வான் என்ற ஸ்வாமியின் தூண்டுதலாலே அம்மங்கியம்மாள் என்கிற ஸ்வாமி ஒரு யந்த்ரத்தை நோய் போவதற்காக நம்பிள்ளையின் கையிலே வைத்துத் தொடப்புக, நம்பிள்ளை அதைப் பொறாமல் ஒதுங்கினார். அதற்கு அவர்கள் த்வயத்தையாவது அனுசந்திக்கலாகாதோ என்று கூற, அதற்கு நம்பிள்ளை, 'நான் அறிந்தவற்றை யன்றோ நீங்கள் சொல்வது; நானும் ஒரு அர்த்தத்தைத் தஞ்சமென்றிருப்பன்; அதாவது "நஞ்சீயர் தம் முடிந்த நிலையில் த்வய மந்த்ரம் தவிர வேறு மந்த்ரங்கள் சிவபஞ்சாக்ஷர சமமாகும்' என்றருளினர் என்றார். ஆனால், திருமந்த்ரம் என்னாகும்' என்ன, அதுவும் த்வயார்த்தத்தின் சுருக்கமாகையாலே அதுவும் த்வயார்த்தம் தான் என்று பதில் கூற, ஆயின் த்வயத்தை அநுஸந்தானம் செய்யலாமே என்று வேண்டினர். அதற்கு நம்பிள்ளை, 'விடாய்த்தவன் நீரருந்துமாப் போலே பகவத் விஷயப் பெருவிடாய் கொண்ட வைஷ்ணவனுக்கு ஸதா ஜபிக்கத் தக்கதாயிருப்பதாகையாலே இப்போதாக என் வியாதி போகைக்காக த்வயத்தாலே சரணம் புகுவது ஸ்வரூபஹாநி; மற்றவர்களின் நோய் போகைக்காகவும் கூட சரணம் புகுவது இவ்வாத்மாவின் தன்மைக்குக் கேடாம் ஏனெனில், தன் விஷயமாக முயற்சித்தால் தன்னுடையதான - ரக்ஷகனான பகவான் இஷ்டப்படி இருக்கையாகிற பாரதந்த்ர்யத்தைத் தூஷித்ததாகும். இதனால் வேறு மந்த்ரங்களின் தொடர்பைப் பொறாத த்வய மந்த்ரத்திலேயே ஊன்றி நிற்கும் நிலைமையும், அந்த த்வயத்தை மற்றொரு பலத்துக்காக உபாயமாக்கிக் கசக்கிப் பிழியப் பெறாமையும், தனக்காகவோ பிறருக்காகவோ நோய் நீங்குவதற்காக ப்ரார்த்திப்பதன் தோஷமும் சொல்லிற்றாயிற்று.

## சரமச்லோகம்

"ஸர்வதர்மாந் பரித்யஜ்ய மாமேகம் சரணம் வ்ரஜ, அஹம் த்வா ஸர்வ பாபேப்யோ மோக்ஷயிஷ்யாமி மாசுச:" என்பது சரமச்லோகம். 'எல்லா தர்மங்களையும் (உபாயம் என்கின்ற நினைவை) விட்டு என்னை ஒருவனையே சரணமாகப் பற்றுவாயாக. எல்லாப் பாவங்களிலிருந்தும் நான் உன்னை விடுவிக்கிறேன், வருந்தாதே" என்று கண்ணபிரான் அர்ஜுனனுக்கு போர் களத்தில் தேர்த் தட்டின் மீது அமர்ந்து உபதேசித்த இச்லோகம் பகவத் கீதையில் (18–66) உள்ளது. இந்த சரமச்லோகம் விதி வாக்யமாக இருந்த போதிலும் இதன் சாரார்த்தத்தைக் கருதி நம் ஆசார்யர்கள் இதை ரஹஸ்யமாகவே கொண்டுள்ளார்கள்.

"நாம் எதைக் குறித்தும் கவலை கொள்ள வேண்டாம் என்ற பெருமாளுடைய இந்த வார்த்தை தப்பாது என்று நம்பிக்கையுடனிருப்பது ஒன்றே வேண்டுவது" என்று நஞ்சீயர் அருளிச் செய்துள்ளார்.

நமது ரக்ஷணபரத்தை அவனிடம் ஒப்படைத்தபின்னர் பேற்றைப்பற்றிய கலக்கம் துளியும் கூடாது. சரண்யனான நமக்குப் புகலாயிருந்து எல்லா பாபங்களையும் போக்குத் தருவதாக அவன் திருவாய் மலர்ந்தருளுகிறான். இது ஸத்யம்; சரண்யன் தன் காரியத்திலிருந்து தவறவே மாட்டான் என்ற அத்யவஸாயம் மிகவும் அவசியம். ஸதா இம்மந்த்ரங்களின் பொருள்களை நாம் சிந்தித்துக் கொண்டே இருக்க வேண்டும். இதுவே போது போக்காக (காலக்ஷேபமாக) ஆக வேண்டும். அதுவும் அவனது இன்னருளே.

## 8. ஆசார்ய ப்ரேமம் கனத்திருக்கை

இதுவரை சொன்னவற்றை எல்லாம் உபதேசத்தாலே நமக்குணர்த்திய ஆசார்யன் பக்கல் ஆழ்ந்த பக்தியுடன் இருக்கை; அதனால் தூண்டப்பட்டு அவனுகந்த கைங்கர்யங்களைச் செய்தல் வேண்டும் என்ற கருத்தை இந்த வாக்யம் உணர்த்துகிறது.

"யஸ்ய தேவோ பராபக்திர் யதா தேவே ததா குரௌ" என்று ஸ்வேதாஸ்வதரோபநிஷத் கூறுகிறது.

எவன் ஒருவனுக்கு எம்பெருமானிடத்தில் மேலான பக்தி இருக்கிறதோ, அவனுக்கு அத்தெய்வத்திற்கு ஒப்பான ஆசார்யனிடத்திலும் அவ்வாறே பக்தி இருத்தல் வேண்டும் என்று கூறுகிறது.

ஆசார்ய வைபவத்தை நாடறியப் பேசுவதே ஸச்சிஷ்யனின் பணி "குரும் ப்ரகாசயேத் தீமாந்"என்பது சாஸ்த்ரம் நமக்கிடும் கட்டளை. ஸதாசார்ய ஸம்பந்தத்தினால் தான் பெற்ற பயனை மற்ற யாவரும் பெற்று உய்ய வேண்டும் என்ற நல்ல நோக்கத்துடன் ஆசார்யனின் க்ருபை முதலான பெருமைகளை ஊரறிய விளக்கமுறச் செய்ய வேண்டும். தன் அகங்காரத்தால் பகவானுடைய அபிமானத்தை அழித்துக் கொண்ட சேதனனுக்கு இவன் தாழ்ந்த நிலையையே பற்றாசாகக் கொண்டு இவனை அங்கீகரித்து இவனுடைய உய்வின் பொருட்டு பல நன்மைகளையும் செய்து போகும் பரமதயாளுவான ஆசார்யன் இவன் நம்மவன் என்று ஒருவனை மதித்து பகவானிடம் கொண்டு சேர்த்தால் அவனால் விலக்கப் போகாது. பகவான் அந்தர்யாமியாய் நம் முன்னே இருப்பினும் நாம் தவறு செய்யும் போது உடனுக்குடன் தடுப்பதில்லை அவன்.

ஆசார்யன் தான் அங்கீகரித்தவர்களை மீண்டும் தாழ்ந்து விடாமல் தடுத்துத் திருத்தி பணி கொள்ளுமவன்.

"ஆசார்யாபிமான மொழியக் கதியில்லை"என்றும், "ஆசார்யாபிமானமே உத்தாரகம்" என ஸ்ரீவசனபூஷணம் காட்டுகிறது.

ஆசார்யன் விஷயத்தில் ஒவ்வொருவரும் கடைப்பிடிக்க வேண்டிய விஷயங்கள்:

1. ஆசார்யன் செய்த உபகாரத்துக்கு நன்றி பாராட்டுதல்.
2. ஆசார்யன் வார்த்தையில் நம்பிக்கை கொள்ளல்.
3. ஆசார்யனிடம் அன்பு காட்டுதல்.
4. ஆசார்யனை பிரிவதில் தரியாமை
5. ஆசார்யனிடம் எப்போதும் கூடி இருத்தல்.
6. ஆசார்யனை மங்களாசாஸனம் செய்தல்
7. ஆசார்யனையே ப்ராப்ய ப்ராபகங்களாக எப்போதும் நினைத்தல்.
8. ஆசார்யனுடைய திருமேனியையும் திருக்குணங்களையும் எப்போதும் அனுபவிக்க விரும்புதல்.

## 1. ஆசார்யன் செய்த உபகாரத்துக்கு நன்றி பாராட்டுதல்

நம்பிள்ளையினுடைய கோஷ்டி ஸம்பத்தையும் ஞான ஸம்பத்தையும் அதனாலுண்டான அவருடைய பெருமையையும் கண்டு நடுவில் திருவீதிப் பிள்ளை பட்டர் பொறாமை கொண்டு எப்பொழுதும் நம்பிள்ளையை வெறுத்திருப்பர். இவர் கூரத்தாழ்வானுடைய பேரர்: (பெரிய) பட்டருடைய குமாரர். அவர் அரசனின் ஆஸ்தானத்துக்குப் போகும்போது நம்பிள்ளையின் சீடரான பின்பழகிய பெருமாள் ஜீயரையும் அழைத்துச் சென்றார். ஜீயரும் 'நம் பரமாசார்ய வம்சத்தவரன்றோ' என்று பட்டரோடு ஆஸ்தானத்துக்குப் போனார். அங்கு ராஜா, பண்டிதனாகையாலும் இவர்களை ஸத்காரம் பண்ணி இருந்தான். "சக்ரவர்த்தித் திருமகன் தன்னை 'ஆத்மாநம் மாநுஷம் மந்யே' என்று சக்ரவர்த்திக்குப் பிள்ளையாக மனிதனாகச் சொல்லிக் கொண்டவன், எப்படி தெய்வத் தன்மையைக் காட்டக் கூடியதான மோக்ஷத்தை ஜடாயுவுக்கு அளித்தான்?" என்று கேட்டான்.

நடுவில் திருவீதி பிள்ளை பட்டருக்குச் சிந்திக்க வேண்டியிருந்தது. நல்ல வேளையாக ராஜா ராஜ்ய கார்யமாக வேறொன்றில் கவனம் செலுத்தினான். அவ்வேளை பட்டர் பின்பழகியபெருமாள் ஜீயரிடம் 'இவ்விடத்தில் நம்பிள்ளை அருளிச் செய்வது எப்படி?'' என்று கேட்க, ஜீயரும் 'ஸத்யேந லோகாந் ஜயதி' என்று நிர்வஹிப்பர் என்ன, பட்டரும் பண்டிதராகையாலே மனதில் விசாரித்து 'ஒக்கும்'என்றிருந்தார். மீண்டும் ராஜா தன் கவனத்தைப் பட்டரிடம் திருப்பி, 'பதில் சொல்லவில்லையே' என்ன, 'நீர் வேறே கார்யத்தில் கலந்திருந்தீர்; கவனமாகக் கேட்கவேணுமே என்றிருந்தேன். இப்போது கேளும்' என்று ''ஸத்யேந லோகாந் ஜயதி, தீநேந தாதேந ராகவ: குரூந் சுச்ரூஷயா, வீரோ தநுஷாயுதிசாத்ரவாந்' (ஸ்ரீராமபிரான் ஸத்யத்தாலே எல்லா உலகங்களையும், தாநத்தாலே எளியவர்களையும் சுச்ரூஷையாலே ஆசார்யர்களையும் யுத்தத்தில் வீரனான அவன் வில்லினாலே பகைவர்களையும் வெல்லுகிறான்) என்கிற ச்லோகத்தைச் சொன்னார். ராஜா மிகவும் கொண்டாடினான்; எழுந்து தண்டன் ஸமர்ப்பித்தான்; அளவில்லா ஆநந்தமடைந்தான்; மறுபடியும் வணங்கினான்; மிகச் சிறந்ததான ஆபரணம் முதலான வெகுமதிகளையும் அதிகமான தனத்தையும் கொடுத்துப் பட்டரைக் கொண்டாடி அனுப்பினான்.

அவற்றை ஏற்றுக் கொண்டு பட்டர் பின்பழகிய பெருமாள் ஜீயரைக் கையைப் பிடித்துக் கொண்டு மிகவும் உருக்கமாக, 'ஜீயரே! இந்தத் தனத்தையும் என்னையும் நம்பிள்ளை திருவடிகளிலே சேர்க்க வேண்டும்' என்று வேண்டிக் கொள்ள, ஜீயரும் அவ்வாறே நம்பிள்ளை கோஷ்டியிலே கொண்டு போய்ச் சேர்க்க, நம்பிள்ளையும் பரமாசார்யருடைய வம்சத்தரான அவரை மிகவும் விரும்பித் தண்டனிட்டு, 'இது என்ன ஸ்வாமி' என்று கேட்க, பட்டரும் நம்பிள்ளையின் திருமுகச் செவ்வியைப் பார்த்து, இது தேவரீருடைய திவ்ய சூக்திகளின் பதினாயிரங் கோடியிலே ஒன்றுக்குப் பெற்ற தனம்; இதையும் அடியேனையும் அங்கீகரிக்க வேணும். ஸம்ஸாரியான ராஜா தேவரீரின் சிந்தின வார்த்தைக்குத் தோற்றுக் கொடுத்தானென்றால், அடியேன் பக்கத்து வீட்டிலேயிருந்தும் இத்தனை நாள் தேவரீரின் திருவடிகளை இழந்து கிடந்தது மட்டுமின்றி, தேவரீர் விஷயத்தில் பொறாமை கொண்டும் திரிந்தேனே; அப்படிப்பட்ட இல்வாத்மாவைத் தேவரீருக்குச் சமர்ப்பிக்கை தவிர வேறில்லை; அங்கீகரித்தருள வேணும்' என்று வேண்டினார். நம்பிள்ளையும் பட்டரை வாரியணைத்துக் கொண்டு அங்கீகரித்து எல்லாப் பொருள் நலங்களையும் வழங்கித் தம்மைப் பிரியாதபடி அடிமை கொண்டருளினார்.

### கிடாம்பியாச்சான்

ஸ்ரீவைஷ்ணவ ஸம்ப்ரதாயத்தின் முக்கியமான ஆசார்யரான ஸ்ரீராமாநுஜருக்கு கிடாம்பியாச்சான் என்பவர் சிஷ்யனாக இருந்தார். அவரும் பல வித சாஸ்த்ரங்களிலே பண்டிதராக விளங்கினவர். ஸ்ரீராமானுஜருடைய மடத்தில் அடியவர்களுக்கு விருந்து உபசாரம் மிகவும் விசேஷமாக நடைபெறும். அவ்வாறு ததீயாரதனம் நடந்து கொண்டிருந்த போது, ஸ்ரீராமாநுஜருடைய சிஷ்யரான கிடாம்பியாச்சான் என்பவர், ஒருவருக்கு அவருடைய பின்புறத்தில் நின்று கொண்டு தண்ணீர் கொடுத்தார். இதனைக் கண்ட ஸ்ரீராமாநுஜர் ஓடி வந்து கிடாம்பியாச்சான் முதுகில் அறைந்து, "ஒருவர் தண்ணீர் கேட்டால் இப்படியா கொடுப்பது? அவருடைய முகத்திற்கு நேரே நின்று கொடுக்கலாகாதோ? " என்று அவரைக் கேட்டார். உடனே கிடாம்பியாச்சான் அந்த தண்ணீர்ப் பாத்திரத்தை கீழே வைத்துவிட்டுஸ்ரீராமாநுஜருடைய காலில் விழுந்து,"பணிமானம் பிழையாமே அடியேனைப் பணி கொண்டு அறியாதன அறிவித்த அத்தா" என்று மிக்க மகிழ்ச்சியோடு வணங்கினார்.

### நம்பி திருவழுதிவளநாடு தாஸர்

நம்பி திருவழுதிவளநாடு தாஸர் என்றொரு சிஷ்யர் முதலியாண்டான் ஸ்ரீபாதத்தையடைந்தவர். ஒரு சமயம் ஏதோ ஒரு காரணத்தால் அவர் பேரில் கோபம் கொண்டு அவரை மிகவும் முனிந்து தள்ளிவிட்டார் ஆண்டான். ஆயினும் தாஸர் எங்கும் செல்லாமல் ஆண்டான் வீட்டு வாசலிலே பட்டினி கிடந்தார்.மறுநாள் ஆண்டான் அமுது செய்யப்போகும் போது கோபமெல்லாம் தணிந்து அன்புடன் தாஸரைப்பற்றி விசாரித்தபோது அவர் வாசலிலே உணவும் கொள்ளாமல் இருப்பதாக அறிந்து அவரை ஏன் இங்கேயே கிடந்தாய்? என்று வினவ, தாஸரும் இரு நாள் இருபிடி சோறிட்டவன் அடித்தாலும் அவன் வாசல் விட்டுப் போறதில்லை நாய். எனக்குப் போக்கிடம் வேறு இல்லை நான் விலகினேனாகில் ஆசாரியன் விஷயத்தில் நன்றி இல்லாதவனாய் நாயினும் தாழ்ந்தவனாக மாட்டேனோ? என்பது தாஸர் கருத்து. அவரை ஆண்டான் உகந்து பணிகொண்டார் என்று சொல்லத் தேவையில்லை.

## 2.ஆசார்யன் வார்த்தையில் நம்பிக்கை கொள்ளல்

### திரிபுராதேவியார்

திரிபுராதேவியாரை ஒருவர் நீங்கள் ப்ரமாண சாஸ்த்திரத்தில் கூறியுள்ளபடி ஸ்ரீமந் நாராயணன் தான் ஆச்ரயணீயன் என்று பற்றினீர்களா?

என்று கேட்க அது ஒன்றுமன்று எங்களுடைய ஆச்சார்யரான எம்பெருமானார் காழிச்சால் மூலையில் (தென்கிழக்கு) உள்ள தேவதையை ஆச்ரயித்தாராகில் அதுவே எங்களுக்கும் ஆச்ரயணீய வஸ்துவாகக் கடவது என்று பதில் கூறினார். இது அவருடைய ஆசார்ய விச்வாஸத்தைக் காட்டும்.

## தெண்டியூர் கொண்டி

திருமலை திருப்பதிக்கு இராமானுஜர் சீடர் குழாங்களுடன் சென்று தங்கியிருந்த சமயம் ஒரு இடைச்சியிடம் தயிர் வேண்டுமென்று விலை கேட்டார்கள். தெண்டியூர் கொண்டி என்பவள், ஸ்ரீவைஷ்ணவ கோஷ்டியைப் பார்த்து விலை சொல்லாமலே, வேண்டுமென்கிற தயிரைக் கொடுத்து விட்டாள். அவள் அங்கு கூடியிருக்கும் ஸ்ரீ வைஷ்ணவர்களை பார்த்துக் கொண்டே எதிரில் நின்றாள். "தயிருக்கு மொத்தம் என்ன கிரயம் பணம் கொடுக்க வேண்டும்'' என்று கேட்டனர்.ஸ்ரீவைஷ்ணவ தாசர்களைப் பார்த்ததும், "பக்தி ஞானப்பற்றுதலுண்டாகி விட்டது இடைச்சிக்கு. பணம் வேண்டாம்; எனக்குஸம்ஸாரபந்தம் விட்டு, நல்ல மோக்ஷ மார்க்கத்தில் போக வழி செய்யுங்கள்" என்று கேட்டுக் கொண்டனள். எனக்கு மோக்ஷம் கொடுத்தருளுங்கள் என வேண்டிக் கொண்டாள்."எங்களுக்கு மோக்ஷம் கொடுக்க அதிகாரமில்லை. அதை கொடுப்பவர் திருமலையின் மீது அமர்ந்திருக்கிறார். அவரைக் கேட்டுக் கொள்" என்று யதிராஜர் அருளினார்.

இதைக் கேட்ட இடைச்சி துணிந்த மனதுடன், "சுவாமி, அவர் பேசமாட்டார். தாங்கள் ஒரு சீட்டு எழுதி சிபாரிசு, செய்து மோட்சமளிக்கும்படி எழுதி கொடுங்கள்" என கேட்கலானாள். ஸ்ரீயதிராஜரும், அப்படியே யிசைந்து, ஸ்ரீவேங்கடாசலபதிக்கு ஒரு சீட்டு எழுதிக் கொடுத்தார். கூடயிருந்தவர்கள் இதென்ன விநோதம் என திகைத்து யோசிக்கலானார்கள்.

அந்த இடைச்சி, சந்தோஷமாய் இராமானுஜரிடமிருந்து அந்த சீட்டை வாங்கிக் கொண்டு, ஸ்வாமி புஷ்கரணியில் ஸ்நானம் முடித்துக் கொண்டு, பிரதக்ஷிணமாய் வந்து, ஸ்ரீவேங்கடாசலபதியைத் தொழுது, கொண்டு வந்து சீட்டை சந்நிதியில் சமர்ப்பித்தாள். அர்ச்சகர்கள், "இதென்ன சீட்டு?" என்று கேட்டனர். "ஸ்ரீயதிராஜ ஸ்வாமி கொடுத்தார்" என இடைச்சி கொண்டி சொன்னாள்.

அர்ச்சகர் அந்த சீட்டைக் கையில் வாங்கி, ஸ்ரீவேங்கடாசலபதி முன் கொணர்ந்ததும், பெருமாள் கைநீட்டி வாங்கிக் கொண்டார். ஸ்ரீவைஷ்ணவ சித்தாந்த பிரதிஷ்டாபனாசார்யனான ஸ்ரீ உடையவர் சீட்டு என கிரகித்து

மோக்ஷம் கொடுத்தேன் என்றருளியிருந்தார். ஸ்ரீ யதிராஜர் சீட்டு எழுதியனுப்பியிருக்கிறாரே என்றால் தயக்கமுண்டாயில்லையே. உடனே பிரகாசமான ஒளியுடன் விமானம் வந்து விட்டது. இடைச்சி கொண்டி அதன் மீதமர்ந்து பரமபதம் சேர்ந்தாள்.

இடைச்சி பரமபத நிலையடைய, கர்மஞான பிரபத்தி மார்க்கமில்லை. தயிர் விற்ற இடைச்சிக்கு மோக்ஷமா! ஆசார்யனான எம்பெருமானாரிடம் இடைச்சி கொண்ட விச்வாஸத்தை இந்த நிகழ்ச்சி எடுத்துக் காட்டுகிறது.

## 3. ஆசார்யனிடம் அன்பு காட்டுதல்

ஒருமுறை பட்டர் பல்லக்கில் எழுந்தருளிய போது நஞ்சீயர் தாமும் பல்லக்கைத் தமது தோளிலே வைத்துச் சுமக்க முற்பட்டார். அப்போது பட்டர், "துறவியாகிய நீர் இப்படிச் செய்வது தகாது" என்று கூற, நஞ்சீயர், "தேவரீருக்குக் கைங்கரியம் செய்வதற்குத் துறவறம் இடையூறு என்றால், துறவறத்தையும் துறந்து விடுகிறேன்" என்றாராம். இதனால் துறவிகள் மற்றவர்களுக்குப் பணிவிடை செய்யக்கூடாது என்கிற ஸாமாந்ய தர்மத்தைவிட எந்த நிலையிலும் ஆசார்யருக்குப் பணிவிடை செய்வது என்ற விசேஷ ஸ்ரீவைஷ்ணவ தர்மத்திலேயே நஞ்சீயர் ஊன்றியவர் என்பது புலப்படுகிறது.

பட்டர் கூரகுலோத்தமன் என்கிற ஊரில் எழுந்தருளியிருந்த போது அங்கு நஞ்சீயர் அமைந்திருந்த நந்தவனத்தில் பட்டருடைய வரவால் இடையூறு ஏற்பட்டது என்று அங்கிருந்த ஏகாங்கிகள் சிலர் கூறினர். இதைக் கேட்ட நஞ்சீயர், "நம் பெருமாள் திருகுழற்க்கற்றை சிக்கு நாறுகிறதென்றோ நான் நந்தவனம் அமைத்திருக்கிறேன்? அடியேனுடைய ஆசார்யரான பட்டருக்கும் அவரது குடும்பத்தினருக்கும் விருப்பப்படி நந்தவனம் பயன்பட வேண்டும் என்பது தான் என்னுடைய நோக்கம். அதற்கேற்ப நடந்து கொள்ளுங்கள்" என்று ஏகாங்கிகளைக் கடிந்து கொண்டார்.

நஞ்சீயருடைய மடத்திற்கு பட்டருடைய மூத்தபெண் வந்து, "இங்கு காய்ந்த சருகுகள் இருக்குமா?" என்று கேட்டுவர, நஞ்சீயர் தன் கண்ணுக்கு எதிரிலுள்ள சில இடங்களில் பார்த்து விட்டு இல்லையென்று சொல்லிவிட்டார். ஆனால் அப்பெண் சென்ற பிறகு பார்த்தபோது ஓரிடத்தில் சருகுகள் இருப்பதைக் கண்டு அவற்றைத் தம்மடியிலே கட்டிக் கொண்டு பட்டருடைய திருமாளிகைக்குச் சென்றார். இதைக் கண்ட பட்டர், "இவற்றை நீரே கொண்டு வர வேண்டுமோ? யாரேனும் ஒருவரிடம் கொடுத்தனுப்பக்

கூடாதோ?'' என்று கேட்க, நஞ்சீயர், ''முதலில் இல்லையென்று சொல்லிவிட்ட பாவத்தை நானே போக்கிக் கொள்ள வேண்டாமோ?'' என்று பதில் கூறினார். ஒருவர் செய்த தவற்றுக்குத் தாமே கழுவாய் தேட வேண்டும் என்பதையும், ஆசார்யருடைய குடும்பத்தினர் மீதும் பக்தியுடன் இருக்க வேண்டும் என்பதையும் செயலில் காட்டினார் நஞ்சீயர்.

நம்பிள்ளை தமது அடியாரோடு திருவெள்ளறையைச் சேவித்து மீளும் போது காவேரி வெள்ளமிட்டு ஓடிக் கொண்டிருந்தது. கரையில் ஓடம் காணவில்லை. பரிசில் மட்டும் இருந்தது. அதில் ஏறி நடுக்காவேரி வந்தனர். பொழுதும் சாய்ந்து மழையும் மந்தாரமுமாய் இருண்டது. திசை தெரியவில்லை. அப்பரிசிலும் அமிழ்ந்துவிடும் போலிருக்க, அப்பரிசில் விடுவான். 'யாரேனும் நாலிருவர் தாழியிலிருந்து இறங்கினால் கரை சேரலாம்' என்றான். யாரும் அதற்கு முற்படவில்லை. ஒரு அம்மையார் (நம்பிள்ளையை அடைந்திருந்தவள்) 'தாழிக்காரா! நீ நூறு வயதிருப்பாய்; ஜாக்ரதையாகக் கண் போன்றவரான நம்பிள்ளைகளைக் கரை சேர்ப்பாய்' என்று கூறி ஆற்றிலே குதித்து விட்டாள். யாரும் எதிர்பாராமல் நிகழ்ந்ததாகையால் எல்லோரும் அதிசயித்தனர். பரிசிலும் கரை சேர்ந்து எல்லோரும் கரையேறினர். நம்பிள்ளை மனம் கசிந்து, 'ஐயோ! ஒரு ஆத்மா தட்டுப்பட்டுப் போயிற்றே' என்று அடிக்கடி கூறிக் கொண்டிருந்தார். அவ்வம்மையும் நீரில் குதித்ததும் ஒரு மேட்டுத் திடரில் ஒதுக்கப்பட்டிருந்தாள். அதுவும் கரைக்கு அருகாமையிலிருந்தது. அதனால் நம்பிள்ளையின் குரல் கேட்டு அவ்வம்மையார். 'அடியேன் இங்கே சுகமேயிருக்கிறேன். கவலை கொள்ள வேண்டாம்' என்று குரல் கொடுத்தார். உடனே பிள்ளையும் பரிசிலையனுப்பி அவ்வம்மையை அழைத்துக் கொண்டார். அவ்வம்மை வந்ததும் தண்டனிட்டு, 'ஆற்றிலேயும் ஒருமேடாய் நின்று அடியேனை ரக்ஷித்து அருளிற்றே!' என்று கூறி பிள்ளையும் 'உம்முடைய நம்பிக்கை யிதுவானால் அப்படியுமாகலாம்' எனப் பதில் கூறினார். இதனால் சிஷ்யன் தன் சரீரம், சொத்து, ப்ராணன் இவைகளை அழித்துக் கொண்டும் ஆசார்யனைக் காக்க வேணும் என்ற நிலையுண்டாக வேணும்; உண்டானால் ஈசுவரன் அவனைத் தான் பேணிக் காக்குமென்பதாயிற்று.

## 4. ஆசார்யனை பிரிவதில் தரியாமை

இவ்வார்த்தை ஆசார்யவிச்லேஷ ப்ரஸங்கத்தில் மூச்சடங்கப் பெற்ற ஒரு பரமபாகவதரின் வ்ருத்தாந்தத்தை விளக்குகிறது. 'ப்ராப்ய ப்ராபகங்களாயிருப்பது நாமே என்று அந்த ஸ்ரீவைஷ்ணவருக்குச் சொல்லும்' என்று பெருமாள் அருளிச் செய்தார் என்றபடி. திருக்கச்சிநம்பி பெருமாள்

அருளிச் செய்த ராம க்ருஷ்ண வராஹ சரமஸ்லோகங்களை அந்த ஸ்ரீவைஷ்ணவருக்கு அர்த்தத்தோடே கூட உபதேஸித்தார் என்று கருத்து. அந்தணர் குலத்தைச் சேர்ந்த ஒரு ஸ்ரீவைஷ்ணவருடைய தேஹபந்துக்கள் நம்பியினுடைய ப்ரபாவமறியாமல், அவர் வைச்யர் என்பதையே பார்த்து, வைச்யரை ஆச்ரயிக்கிறார்கள் என்று தெரிந்து கொண்டு, அந்த ஸ்ரீவைஷ்ணவரும் அவர்களிடமிருந்து தப்புவதற்காக, தேவப்பெருமாள் கோவிலின் முன்புறமிருக்கும் அநந்தஸரஸ்ஸில் நீராடி ப்ராயசித்தம் செய்து கொள்ள வருவதாகப் பொய் கூறி, நம்பி திருவடிவாரத்தை அடைந்து வணங்கி, அவரை அகலமாட்டாமல் நிற்க, நம்பியும் தேஹபந்துக்களோடு விரோதித்துக் கொண்டு அவர்களிடம் போகாமல் நீர் இங்கிருப்பது தவறு' என்று நிர்பந்தமாக அவரைப் போகச் சொல்ல நம்பியின் பிரிவு பொறுக்கமாட்டாமல் பெருவருத்த முற்றவராய், அப்போதே மூச்சடங்கிப் பரமபதமடைந்தார் என்று கருத்து.

எம்பெருமானார் திருநாட்டுக்கு எழுந்தருளும் போது ஸ்வாமி திருவடிகளைப் பிடித்துக் கொண்டு எம்பார், "பொருளல்லாதவென்னைப் பொருளாக்கிப் போதரே என்று சொல்லிப் புத்தியிற் புகுந்து, தன்பாவாதரம் பெருகவைத்த பெருமானே! உம்மைப் பிரிந்திருக்கப் போமோ" என்று கதற உடையவரும், 'நம்பெருமாள் நம்மைப் பிரிய வைக்கமாட்டான்; பதறாதேயிரும்' என்று சொல்லித் தம் திருவடிகளால் எம்பார் திருமுடியை அலங்காரம் செய்து திருநாட்டுக்கு (பரமபதத்துக்கு) நடந்தருள, எம்பாரும் தேறியிருந்து உடையவர் அருளியிருந்த அர்த்தங்களை யெல்லாம் பட்டர் முதலானார்க்கு அருளிச் செய்து கொண்டிருந்தார். ஒரு நாளாக உடையவரை நினைத்து நைந்து எம்பார் நம்பெருமானிடம் சென்று உடையவரைப் பெறப் போக வேணும் என்ன அவனும் ஆம் என்ன, எம்பாரும் திருநாட்டுக்கு எழுந்தருளினார்.

## பிள்ளையுறங்காவில்லிதாசர்

பாகவத ஸம்ச்லேஷம் பிறந்தபின்பு பகவத் ஸம்ச்லேஷம் பழியாயிருந்தபடி என்பார் பெரியவாச்சான்பிள்ளை. எம்பெருமானார் ஒருநாள் திருமலைக்குப் போக இருப்பதாக அறிந்து பிள்ளையுறங்காவில்லிதாசர் நம் இல்லம் சென்று தாளிட்டுக் கொண்டு முக்காடும் இட்டுக் காண்கின்றனகளும் என்கிற பாசுரத்தை அநுஸந்தித்துக் கொண்டிருந்து அங்குச் சென்று வண்பூமணிவல்லியரே பிரியவர்தாம் என்று சொல்லலாகாதோ? என்றாராம். காண்கின்றனகளும் என்ற பாசுரத்துக்கு அடுத்தபாசுரமான இப்பாசுரத்தில் உள்ள வண்பூமணிவல்லியாரே பிரியவர்தாம் என்று சொல்லி வரும்படி அனுப்பியதையும் நோக்க, பொருள் தேடத்தலைவன் திருமலைக்குப் போக

நினைத்ததாக தலைவி பழியிட்டாள். நீதானே அப்படி நினைத்தாய் என்கிறான் தலைவன். அதாவது எம்பெருமானைக் காட்டிலும் அவன் அடியார்களான பாகவதர்களைச் சிறப்பித்தல் மரபு. பாகவதர்களுடைய கூட்டுறவு தோன்றியபின் பகவானும் தேவையில்லை என்று பாகவதர்களைச் சிறப்பித்துக் கூறுதலில் நோக்கு.

## 5. ஆசார்யனோடு எப்போதும் கூடியிருத்தல்

எம்பெருமானாரை கூரத்தாழ்வானும், முதலியாண்டானும் எப்போதும் பிரியாது கூடியே இருப்பார்கள். இக்காரணம் பற்றியே எம்பெருமானாரும், இவர்கள் இருவரையும் பவித்திரமும், த்ரிதண்டமாகவே கொள்வார். ஸ்ரீவைஷ்ணவ யதிகள் கையில் விஷ்ணு ரூபமான முக்கோலை எப்போதும் பிடித்திருப்பர். அதன் உச்சியில் கொடி போன்று தொங்க விடப்பட்டிருக்கும் சிறிய வெள்ளை வஸ்த்ரத்தை ஜலபவித்திரம் என்பார்கள். த்ரிதண்டமும் ஜல பவித்திரமும் எப்போதும் பிரியாதிருப்பவை ஆகும். திருக்கோட்டியூர் நம்பி யதிராஜருக்கு ரஹஸ்யார்த்தங்களை ப்ரஸாதிக்க இசைந்து "தண்டும் பவித்திரமுமாக அவரொருவர் மட்டுமே வருவது" என்று நியமிக்க, உடையவர் ஆழ்வானையும் ஆண்டானையும் கூட அழைத்துக் கொண்டு நம்பி திருமுன்பே சென்றதாகவும், ஆசாரியரிடம் முதலியாண்டானை த்ரிதண்டமாகவும் கூரத்தாழ்வானை பவித்திரமாகவும் அறிமுகப்படுத்தியதாகவும் குருபரம்பராப்ரபாவ ப்ரஸித்தம்.

ஆழ்வான் ஸம்ஸாரத்தில் ஆர்த்தியின் களத்தாலே கலங்கிப் பெருமாள் திருவடிகளிலே "அடியேனைத் திருநாடேறப் போம்படி திருவுள்ளமாக வேணும்" என்று விண்ணப்பஞ் செய்ய, பெருமாள் திருவுள்ளமாய் ஆழ்வான் பிரார்த்தித்தபடி நம்பெருமாள் அவருக்குத் திருநாட்டை அருள, உடையவர் அதை மாற்றும் படி செய்ய வேணும் என்று கோயிலுக்குப் புறப்பட்டு, பஞ்சுக் கொட்டான் திருவாசலளவாக எழுந்தருளி, பாதிதூரம் சென்ற பின்பு நாம் மறுபடி விண்ணப்பஞ் செய்தல் பெருமாளும் செய்தருளுவர், நம்மடியாக பெருமாளை இரண்டு வார்த்தை சொன்னவனாக ஆக்கிவிட கூடாது என்று திரும்பி ஆழ்வார் இருக்குமிடம் சென்று அவரை ஏன் இப்படிச் செய்தீர் என்று கேட்க ஆழ்வானும் பரமபதத்திலே முன்புள்ளார் பின்புள்ளாரை வரவேற்கும் முறையுண்டாகையால் ஆசார்யனுக்கு முன்பு தான் பரமபதம் சென்று ஆசாரியனை வரவேற்பதற்காக தான் இவ்வாறு செய்வதாக கூறினார். ஆழ்வான் விச்லேஷம் பொறுக்கமாட்டாமல் "ஒரு மகள் தன்னையுடையேன்" என்றும் "உலகம் நிறைந்த புகழால் திருமகள் போல வளர்ந்தேன்" என்றும்

"செங்கண்மால் தான் கொண்டு போனான்" என்றும் அருளிச் செய்தாரென்று பிரஸித்தமிறே.

முதலியாண்டான் யதிராஜ பாதுகங்களாக போற்றப்படுகிறார். இவரை யதிராஜர் தம்மை பிரியாது எப்போதும் கையிலிருக்கும் த்ரிதண்டமாக மதித்திருந்தார். முதலியாண்டான் விரும்பியது ஸ்வாமியின் திருவடி நிலைகளாக மதிக்கப்படுதலையே. அர்ச்சாஸ்தலங்களில் எம்பெருமானுடைய திருவடிநிலைகளை ஸ்ரீசடகோபன் என்றும், நம்மாழ்வார் பாதுகங்களை ஸ்ரீராமானுஜன் என்றும், ஸ்ரீராமாநுஜ பாதுகங்களை முதலியாண்டான் என்றும் வ்யவஹரிப்பது மரபு.

## வேதாந்தி

வேதாந்தங்களில் மிகவும் வல்லவராய் இருந்த படியால் வேதாந்தி என்று அழைக்கப்பட்டார் மாதவாசாரியர் என்ற இயற்பெயரையுடைய நஞ்சீயர். இவர் முதலில் அத்வைதத்தில் சிறந்த அறிஞராய் விளங்கினார். ஸ்ரீராமாநுஜர் இவ் வுலகை நீத்துப் பரமபதம் அடைவதற்கு முன் பராசரபட்டரை அழைத்து, "மேல் நாட்டில் வேதாந்தி என்றொரு பெரிய வித்வான் இருக்கிறார் என்று கேள்விப் பட்டோம். நீர் அங்கேறப் போய் அவனை நம் தர்சன ப்ரவர்த்தகனாம்படி திருத்தும்" என்று அருளிச் செய்தார். எம்பெருமானாரின் நியமனப்படி, பட்டரும் வேதாந்தியை திருநெடுந்தாண்டக சாஸ்த்ரம் கொண்டு திருத்தினார். வேதாந்தியும் விசிஷ்டாத்வைத மதமே மிகச் சிறந்தது என ஒப்புக் கொண்டு பட்டர் திருவடிகளில் சரணடைந்தார். பட்டரும் அவருக்கு பஞ்ச ஸம்ஸ்காரங்களைச் செய்து விட்டு திரும்பினார்.

## வேதாந்தி நஞ்சீயராதல்

வேதாந்தி திருமாலடியார்களைப் பூசித்துக் கொண்டிருந்தார். ஒருநாள் இரண்டு ஸ்ரீவைஷ்ணவர்கள் வேதாந்தியின் வீட்டில் பசிக்கு உணவு கேட்டனர். வேதாந்திகளுக்கு இரு மனைவியர். அவர்கள், 'உங்கள் வேதாந்திகள் ஸ்நாநத்துக்குப் போயுள்ளார். இங்கே உணவில்லை' என்றனர். அவ்வைஷ்ணவர்கள் வேதாந்திகளிடம் இதைக் கூற வேதாந்தி மிக வருந்தி தம் தனத்தை மூன்று பங்குகளாக்கி இரு மனைவியர்க்கும் இரண்டு பங்குகளைக் கொடுத்து அவர்களை விட்டு நீங்கி மீதி ஒரு பங்கைத் தாம் கொண்டு, இல்லற மின்றேல் துறவறம்" என ஸந்யாஸியாகி ஸ்ரீரங்கத்துக்குப் பட்டரைச் சேவிக்கப் புறப்பட்டார். ஸ்ரீரங்கத்தை யடைந்து பட்டரிடம் தாம் கொண்டுவந்த தனத்தைத் தம்முடையதென்ற அபிமானமில்லாமல்

பட்டருடையதாகச் சமர்ப்பித்துத் தம்மைப் பிரியா வடிமைகொள்ள வேணும் என்று வணங்கினார். பட்டரும் அவரின் வைராக்ய நிலையறிந்து அவரை, "நம் சீயரே!" என்று வாரி அணைத்துக் கொண்டார். அது முதல் வேதாந்திக்கு நஞ்சீயர் என்ற திருநாமம் ஒக்கிற்று. பட்டரும் நஞ்சீயருக்கு எல்லா அர்த்தங்களையும் உபதேசித்துப் பிரியாமல் வைத்துக் கொண்டார்.

## 6. ஆசார்யனுக்கு மங்களாசாஸனம் செய்தல்

நம்பிள்ளைகளின் காலக்ஷேபக் கோஷ்டியில் பெருத்த திரளைக் கண்டு மிக்க ஆனந்தமடைந்த ஸ்ரீவைஷ்ணவனான ராஜா ஒருவன், நம்பெருமாள் கோஷ்டியா? நம்பிள்ளை கோஷ்டியா? என்று வினவுவனாம். அப்படிப் பெரும் புகழானரான நம்பிள்ளை நம் பெருமாளைச் சேவித்திருக்கும் போது முதலியாண்டானின் திருப்பேரனாரும் கந்தாடையாண்டான் குமாரருமான கந்தாடைத் தோழப்பர் நம்பிள்ளையின் பெருமை கண்டு பொறாமை கொண்டு பெருமாள் முன்பே பலவாறாக நிந்தித்தார். நம்பிள்ளை இது கேட்டு அபசாரப்பட்டோமே என்று நடுங்கிப் பெருமாளைச் சேவித்து விட்டு மடத்துக்கு எழுந்தருளி எல்லோரையும் அனுப்பி விட்டுத் தாம் அமுது செய்யாமல் பொழுது சாயுந்தனையும் காத்திருந்தார்.

கந்தாடைத் தோழப்பர் நம்பிள்ளையைச் சந்நிதியில் நிந்தித்து விட்டுத் தம் திருமாளிகைக்குத் திரும்பினார். இச்செய்தி அறிந்த சிறந்த ஞானத்தோடு கூடிய அவர் தேவிகள் மிகவும் மனங் கலங்கி விட்டுக் கார்யங்கள் ஒன்றும் செய்யாமல் வாளாவிருந்தனர். உள்ளே நுழைந்த தோழப்பர் அவளைப் பார்த்து, 'இதுவரை நாம் கைப்பிடித்த நாள் தொடங்கி நம்மிடம் ஆசார்யனிடம் அன்பு கொண்டு எதிர் கொண்டு நிற்கும் வழக்கம் தவிர்ந்ததில்லையே; இன்று ஏன் மாற்றம்? என்று கேட்க, தேவிகளும் "ஆழ்வார் திருவவதார மென்னலாம்படியும், நம்பெருமாளுக்குப் ப்ராணராயுமிருக்கிற நம்பிள்ளைகளைப் பெருமாள் ஸந்நிதியிலே காரணமில்லாமல் நிந்தித்துப் பாகவதாபசாரப்பட்டு, அபசாரப்பட்டோமே என்கிற அநுதாபமுமின்றிக்கே உஜ்ஜீவிக்க நினைக்கிற உம்மோடு எனக்கு என்ன பணியுண்டு; விவாஹ காலத்தில் அடியேனுடைய உடம்பு மட்டும் தான் உமக்குத் தரப்பட்டது; அதை நீர் எப்படி வேடுமானாலும் செய்து கொள்ளுங்கள்: இந்த ஆத்மா ஏற்கனவே ஆசார்யாதீனமாகி விட்டது" என்று சொல்லத் தோழப்பரும் குடிப்பிறப்பாலும் வித்யையாலும் தேவிகள் சொல்லியதை ஆய்ந்து இசைந்து வருந்தி, 'இப்போது என் செய்யக்கடவேன்' என்று வியாகுலப்பட, "ஆற்றிலே போட்டுக் குளத்திலே தேடலாமோ! அபசாரப்பட்ட இடத்திலேயே பிழை வேண்டிக் கொள்ளுங்கள்;

தயாளு ஆகையாலே பொறுத்தருள்வார்'' என்று மனைவி கூறினாள். தோழப்பர், 'பல்லோர் முன் பழித்துத் தனிமையில் எப்படிப் போவது?' என்று தயங்கித் தேவிகளையும் அழைத்துக் கொண்டு கையில் விளக்கேற்றி நம்பிள்ளையின் மடத்துக்குப் புறப்பட வெண்ணி வீட்டுக்கு வெளியே வந்ததும் திண்ணையில் வெள்ளை உடுத்தி முக்காடிட்டு ஒருவர் படுத்திருப்பதைக் கண்டார். முன் கூறியபடி நம்பிள்ளை பொழுதுபட்டதும் தோழப்பர் திருமாளிகையில் படுத்துக் கிடந்தார்.

தோழப்பர் 'யாரது?' என்று குரல் கொடுக்க நம்பிள்ளைகளும் வாரிச் சுருட்டி எழுந்து, 'அடியேன் கலிகன்றி தாஸன்' என்று தண்டன் ஸமர்ப்பித்தார். உடனே தோழப்பர், 'இதென்! நாம் புகழுடையோம்; நம்மைப் பெருமாள் முன்னே பரிபவிப்பதோ என்று கோபத்தோடு வந்து படுத்து மூர்க்குச் செய்வதோ?' என்று கேட்க, நம்பிள்ளை, ''அங்ஙனன்று; முதலியாண்டானின் திருப்பேரனாரான தேவரீரின் மனங்கலங்கும்படி இருந்திட்டு, அபசாரப்பட்ட மஹாபாவியான அடியேற்கு இவ்வாசவல்லாது வேறு கதியின்றி வந்து கிடக்கிறேன்' என்று நைச்யமாகக் கூறினர். 'இஃதொரு அதிகாரி விசேஷமே!' என்று வியந்து அவரைத் தோழப்பர் அணைத்து, 'இதுநாள்வரை ஒரு சிலர்க்குத் தான் நீர் ஆசார்யர் என்றிருந்தேன்; அது சரியல்ல; நீர் உலகுக்கெல்லாம் ஆசார்யராவீர்!' என்று கூறி நம்பிள்ளையை மிகவும் உகந்து லோகாசாரியர் என்று பெயரிட்டுப் பிள்ளையை உள்ளே அழைத்துச் சென்று அவரை உகப்பித்து அவரிடம் அர்த்தங்களையெல்லாம் கேட்டுத் தெளிந்து செய்த செய்கையராயினர்.

ஆசார்யனை மங்களாசாஸனம் பண்ணுவதற்கு எம்பெருமானே சிஷ்யனாக அவதரித்த ஒரு நிகழ்ச்சி.

ஒரு சமயம் பெருமாளுக்குப் பவித்ரோத்ஸவம் நடந்து கொண்டிருந்தது. பெருமாளும் பெருங் குழுவோடு எழுந்தருளியிருந்தார். எல்லாவடியார்களும் சேவித்துக் கொண்டிருந்தனர். அச்சமயம் தம்மடியார்கள் சூழ வரவரமுநிகள் பெருமாளுக்கு மங்களாசாசனம் செய்ய எழுந்தருளினார். எம்பெருமானாரின் பெருமையைத் திருக்குறுங்குடி நம்பி வெளியிட்டாப்போலே தாமும் பெரிய ஜீயரின் பெருமையைத் தாம் அவருக்குச் சிஷ்யனாகி வெளியிட வேண்டுமென்று பெருமாள் திருவுள்ளம் கொண்டு ஜீயருக்கு அருள்பாடிட்டு ஸ்ரீசடகோபனை சாதித்து, "நாளை முதல் பெரிய திருமண்டபத்தே நம்மாழ்வாரின் திருவாய்மொழியை ஈடு முப்பத்தாறாயிரம் முதலான ஐந்து உரைகளையும் நாம் கேட்கும்படி உரையும்" என்று பணிக்க, ஜீயரும் பேரருள்

என்று சிரமேற் கொண்டு, 'இப்படி அடியேனையும் பொருளாப் பணிப்பதே' என்று அவனருளை எண்ணி அற்றை மறுநாள் முதல் ஈடு தொடங்கி ஐந்து வ்யாக்யானங்களுடன் திருவாய்மொழியைத் தொடங்கிப் பெருக்கமாக உபந்யஸித்தருளா நிற்க, இப்படி ஒரு ஸம்வத்ஸரம் இடையூறின்றித் திருவாய் மொழியை உரையுடன் ஜீயர் உபந்யஸித்தருளினார். பெருமாளும் பெருங் குழுவுடன் நிதமும் திருச்செவி ஏற்றருளினார். ஜீயருடைய உபந்யாஸப் பெருக்கைப் பெருமாள் மிகவும் உகந்தார்.

அன்று திருவாய்மொழி காலக்ஷேபம் முடிவு பெறும் நாள் நம்பெருமாள் நிதமும் போலே நாச்சியாருடனும் நித்யசூரிகளுடனும் ஆழ்வார் பதின்மாருடன் கூடிப் பெருங்குழுவாகப் பெரிய மண்டபத்தே எழுந்தருளியிருந்து சாற்றுமறை நடக்க நியமித்தார். மணவாளமாமுநிகளும் திருவாய்மொழி வ்யாக்யானத்தை முடித்தருளினார். பெருமாளும் திருப்பரிவட்டம், பழங்கள் முதலானவற்றைக் கொண்டுவரச் செய்து காணிக்கையாக வைத்தார். அப்பொழுது ஒரு ஐந்து வயது குழந்தை காணிக்கைகளுக்கும் பெருமாளுக்கும் நடுவே வந்து நின்றது. அக்குழந்தை ரங்கராஜன் என்னும் பேருடையதாய் அர்ச்சகரொருவரின் குழந்தையாயிருந்தது. எனினும் அழகு மிளிர்ந்திருந்தது. அதைக் கண்ட பெரியோர்கள் குழந்தை இடையிலே நிற்கிறதே என்று அப்பாற் கொண்டு விட்டனர். அக்குழந்தை மறுபடியும் அங்கேயே வந்து நின்றது. எல்லோரும் வியந்து அக்குழந்தையைப் பார்த்து, 'என்ன செய்யப் போகிறாய்?' என்று கேட்டனர். உடனே அக்குழந்தை மணவாள மாமுநிகள் பக்கமாகக் கைகூப்பிக் கொண்டு,

ஸ்ரீசைலேச தயாபாத்ரம் தீபக்த்யாதி குணார்ணவம்
யதீந்த்ரப்ரவணம் வந்தே ரம்ய ஜாமாதரம் முநிம்

(திருமலையாழ்வாரின் தயைக்குப் பாத்ரபூதராயும், ஞாநம், பக்தி முதலான குணங்களுக்குக் கடலாயும், யதீந்தரரான எம்பெருமானாரிடத்தில் அன்பு மிக்கவராயுமிருக்கிற அழகிய மணவாள மாமுநிகளை வணங்குகிறேன்) என்கிற சுலோகத்தைச் சொல்லிவிட்டு ஓடி மறைந்து விட்டது. இதைக் கண்டும் இந்தத ச்லோகத்தின் அர்த்த விசேஷத்தைக் கேட்டும் எல்லோரும் வியந்து போயினர். இக்குழந்தையைத் தேடியும் காணவில்லை. ஸ்ரீரங்கராஜனேதான் ஆசாரியனான மணவாள மாமுனிகளை மங்களாசாஸனம் பண்ண வேண்டி இப்படிச் செய்தான் என்று ஒருமிடறாக எல்லோரும் கருதினர். மேலும் ஆசார்யனுக்கு தன்னுடைய உடைமைகள் அனைத்தையும் ஸமர்ப்பிக்க வேண்டும் என்பதற்காகத் தன்னுடைய

சேஷவஸ்துக்கள் அனைத்தையும் அவரிட்ட வழக்காக்கினார். தன்னுடைய சேஷ வஸ்துக்கள் எல்லாவற்றுக்கும் பிரதிநிதியாக ஆதிசேஷனையே மாமுனிகளுக்கு ஸமர்ப்பித்து விட்டான். அதனால் தான் இன்னும் மாமுனிகள் ஸகல திவ்ய தேசங்களிலும் ஆதிசேஷனையே ஆஸநமாகக் கொண்டு எழுந்தருளியிருக்கிறார். ஆசார்யருடைய திருநக்ஷத்திரத்தையும் தீர்த்தத்தையும் சிஷ்யன் நடத்திவைக்கக் கடவன் என்பதற்குச் சேர இன்றும் ஸ்ரீரங்கத்தில் மணவாளமாமுனிகள் திருநக்ஷத்ரமான ஐப்பசித் திருமூலத்தன்றும் தீர்த்த தினமான மாசி கிருஷ்ணபக்ஷ த்வாதசியன்றும் முன்னர் பிரஸாதம் பகுமானங்கள் முதலியவற்றை மாமுனிகள் ஸன்னிதிக்கு அனுப்பி வைக்கிறார். இப்படி தன்னுடைய ஆசார்யருடைய திருநக்ஷத்ர தீர்த்த தினங்களைத் தானே நடத்தி வைத்து சிஷ்யனிருக்கும் இருப்பை நன்கு அறிவித்தானாய்த்து.

## 7. ஆசார்யனையே ப்ராப்ய ப்ராபகங்களாக எப்போதும் நினைத்தல்

வடுக நம்பி என்ற ஒரு சிஷ்யர் உடையவருக்கு இருந்தார். இவரை ஆந்திர பூர்ணர் என்றும் கூறுவர். இவர் எம்பெருமானாரையே பேறும் பேற்றைத்தரும் மார்க்கமுமாகக் கொண்டவர். ஒருசமயம் உடையவர் வெளியூருக்கு எழுந்தருளும்போது வடுகநம்பி உடையவருடைய திருவாராதனப் பெருமாளையும் தமது திருவாராதனமான உடையவர் திருவடி நிலைகளையும் (மரவடி) ஒன்றாகச் சேர்த்துக் கொண்டு போக, அது கண்டு உடையவர், 'வடுகா! இதென்ன! பெருமாளையும் எனது மரவடிகளையும் இப்படி சேர்த்து வைத்திருக்கிறாயே!' என்ன நம்பியும் 'உங்கள் பெருமாளை விட எங்கள் பெருமாளென்ன குறைந்தவரோ' எனப் பகர்ந்தார். மற்றொரு சமயம் பால் அடுப்பில் காய்ந்து கொண்டிருக்கையில் அழகிய மணவாளன் திருவீதியிலெழுந்தருள, 'வடுகா! பெருமாளைச் சேவிக்கவாராய்' என்று உடையவர் அழைக்க, 'உங்கள் பெருமாளைச் சேவிக்க வந்தால் எங்கள் பெருமாளுக்குப் பால் பொங்கி வழிந்து விடும்' எனக் கூறினார். 'பெருமாளின் கண்ணழகைப் பாராய்!' என்றபோது, 'என்னமுதினைக் கண்ட கண்கள் மற்றொன்றினைக் காணாவே!' எனக் கூறினார்.

வடுகநம்பி உடையவரின் பிரசாத மீதியை கைகளில் ஏற்று உண்டு கைகளை அலம்பாமல் தலையில் துடைத்து கொள்வது வழக்கம். இது கண்டு எம்பெருமானார், "இப்படிச் செய்யக் கூடாது. கையை அலம்பிக்கொள்ளும்'

என்று அலம்பச் செய்தார். அதுபோலவே பெருமாள் பிரசாதத்தை ஸ்வீகரித்துப் பின் கையை அலம்பிக் கொண்டார். அது பார்த்து, 'இது செய்யலாமோ?' என்று கேட்க, நேற்று சொன்னபடி செய்தேன் என்றார். இது போன்று ஆசாரியனைத் தவிர தேவு மற்றறியாத நிலை கண்டு உடையவரே உமக்குத் தோற்றோம்' எனச் சொல்லும் படியான நிலையை உடையவர் வடுகநம்பி.

ஆசார்யக் கைங்கர்யம் தனக்குப் பசிவிளைத்துண்கை; பாகவத கைங்கர்யம் தாய்க்கு சோறிடுகை; பகவத் கைங்கர்யம் ஒப்பூணுண்கையும் மூப்புக்குச் சோறிடுகையும் என்று வடுகநம்பி அருளிச் செய்வர்.

## 8. ஆசார்யனுடைய திருமேனியையும் திருக் குணங்களையும் எப்போதும் அனுபவிக்க விரும்புதல்

ஒரு சமயம் திருக்கோட்டியூர் நம்பி மேல் தளத்தில் தனியே தியானம் செய்து கொண்டிருந்தார். அதுகண்டு உடையவர், "த்யானத்துக்கு விஷயம் என்ன? மந்திரம் எது?" என்று கேட்டார். நம்பிகள் "ஆசார்யரான ஆளவந்தார் ஸ்நானம் செய்யும் போது குனிந்த நிலையில் தெரியும் அவரின் முதுகுதான் என் தியானத்துக்கு விஷயம்; மந்திரம், அவருடைய திருநாமமாகிற "யமுனைத் துறைவர்" என்பதே" என்று கூறி, ஸ்ரீவைஷ்ணவனுக்கு ஆசார்யனுடைய திருமேனியே ஸதா தியானிக்கத் தருவது என்றும், அவன் திருநாமமே ஸதாஜபிக்கத் தருவது என்றும் உணர்த்தினார்.

ஆசார்யன் சிஷ்யனுடைய ஸ்வரூபத்தைப் பேணக் கடவன் சிஷ்யன் ஆசார்யனுடைய தேஹத்தைப் பேணக்கடவன் என்பது ஸ்ரீவசநபூஷணத்தில் பிள்ளைலோகாசார்யர் அருளிச் செய்துள்ளார்.

பட்டர் திருக்கோட்டியூருக்கு எழுந்தருளும்போது வழியிலே பசி தாகங்களால் இளைப்புற்று நஞ்சீயரை நினைத்தார். நிழல்போல நீங்காது வழிபாடு செய்பவரான நஞ்சீயரோ, அங்ஙனம் பட்டர் கோயிலை விட்டுப் புறப்பட்ட செய்தியையுணர்ந்து அமுதும்நன்னீரும் எடுத்துக் கொண்டு அவரைத் தேடிச் சென்று அவரெழுந்தருளிய வழியை அறிந்து பின் தொடர்ந்து கொண்டிருந்தார். ஆதலால், அவ்வாசிரியர் தம்மை நினைத்த அவ்வளவிலே 'அடியேன்' என்று சொல்லி அணுகி அவரை அமுது செய்யப் பண்ணிவைத்து இளைப்பாற்ற, பட்டர், அப்பொழுது, ஆசார்யனது திருமேனியின் பரிவில் நஞ்சீயருக்கு உள்ள ஜாக்கிரதையைக் குறித்துத் திருவுள்ளமுகத்து அவர்க்கு விசேஷகடாக்ஷம் செய்தருளினார். இவ்வாறு ஆசார்யாநுக்கிரகத்துக்குப் பூர்ண பாத்திரமாயினார் நஞ்சீயர்.

ஸ்ரீராமாநுஜர் திருவரங்கன் செல்வங்களை தீயவரிடமிருந்து அரங்கனுக்காக்கி கைங்கர்யங்கள் நல்ல முறையில் நடக்கும்படி சீர்திருத்தங்கள் செய்ய முற்பட்டபோது சிலர் அவரை முடித்துவிட திட்டமிட்டு அவர் பிக்ஷையெடுக்கும் ப்ரஸாதத்தில் விஷத்தைக் கலந்து இட்டனர். இதைக்குறிப்பாக உணர்ந்த உடையவர் சில நாட்கள் உணவருந்தாமலே உபவாஸமாக இருந்துவிட்டார். இதைக் கேள்விப்பட்ட ஆசார்யரான திருக்கோட்டியூர் நம்பி பரிவினால் உந்தப்பட்டு ஸ்ரீரங்கம் விரைந்தார். அவர் வந்து கொண்டிருப்பதையறிந்த ராமாநுஜர் அவரையெதிர் கொண்டழைக்க காவிரிக்கரைக்குச் செல்ல அங்கு நம்பி எதிரே வந்து கொண்டிருந்தார். உடனே அங்கேயே அவரை ராமாநுஜர் ஸாஷ்டாங்கமமாக தெண்டனிட்டுக் கிடந்தார். நல்லவெய்யில் நேரமாதலால் மணல் மிகவும் சூடாக இருந்தது. நம்பியோ உடையவரை எழுந்திரும் என்று சொல்லவில்லை. இது கண்ட கிடாம்பியாச்சான் என்னும் இராமானுநுஜருடைய சிஷ்யர் மனம் வெதும்பி, "இதென்ன சிஷ்யாசார்ய க்ரமம்? கருமுகை மாலையை வெய்யிலிலிட்டு வாட்டுவதோ? விஷம் வைத்தவர் செயலைவிட இது கொடுமையாயுள்ளது" என்று சொல்லி இராமானுநுஜருடைய திருமேனியை வாரியெடுத்து அணைத்துக் கொண்டார். நம்பி இது கண்டு மிகவும் உகந்து, "ஆச்சான்! உம்மைப் போன்ற பரிவுள்ளவரையன்றோ யாம் தேடியது. இனி உடையவருக்கு நீரே மடப்பள்ளி கைங்கர்யம் பண்ணி ஏகமாதுகரமாக அவர் பிறரிடம் பிக்ஷைக்குப் போக வேண்டாதபடி ஸமர்ப்பியும்'' என்று நியமித்தார். கிடாம்பியாச்சானுக்கு உடையவரிடமிருந்த பரிவானது ஸ்வாமியினுடைய ஆசார்யரையே கடிந்து பேசுமளவுக்கு துடிக்கப் பண்ணியது.

ஆளவந்தாருக்கு முதுகில் ராஜபிளவு என்னும் நோய் உண்டாயிற்று. ஒரு நாள் காலக்ஷேப கோஷ்டியில், "இந்த நோயை ஏற்றுக் கொள்வார் யாரேனும் உண்டோ?" என்று ஆளவந்தார் வினவினார். உடனே மாறனேரி நம்பி எழுந்து, "அடியேனுக்குத் தந்தருள வேண்டும்" என்று மிக்க வினயமுடன் பிரார்த்தித்தார். உயர்ந்த உத்தம குணசீலராகிய மாறனேர்நம்பி தமது ஆசார்யரிடம் கொண்ட பக்தியின் காரணமாக அந்த ராஜபிளவை ஆசார்ய ப்ரசாதமாக ஏற்றுக் கொண்டார். பிறகு ஆளவந்தார் நோய் நீங்கப் பெற்றார்.

பின்பழகிய பெருமாள் ஜீயர் என்பவர் நம்பிள்ளை திருவடிகளிலே வழுவிலா எல்லா வடிமைகளையும் பிரியாது செய்து வந்தார். ஒரு சமயம் அவர் நோய்வாய்ப்பட்டார். அதனால் அவர் தமக்கு மிகவும் வேண்டியவர் களான ஸ்ரீவைஷ்ணவர்களிடம், "அடியேன் இப்போதைக்குப் பரமபதிக்கக்

கூடாது; அதனால், நீங்கள் பெருமாளிடம் 'ஏழை ஏதலன்', 'ஆழி எழ' என்னும் பதிகங்களையும் விண்ணப்பித்து வேண்டிக் கொள்ளுங்கள்" என்று கேட்டுக் கொள்ள, அவர்களும் அப்படியே செய்து அவரும் நோயினின்றும் நீங்கினார்.

இதையறிந்த சில ஸ்ரீவைஷ்ணவர்கள் நம்பிள்ளையிடம், "வயதிலும் ஞானத்திலும் மூத்தவரான இவர் ஆத்ம நிலைக்குச் சேராத, தனக்கென ஒரு ப்ரயோஜனத்தைப் பெருமாளிடம் வேண்டலாமா?" என்று குறை கூறினார். அதற்கு நம்பிள்ளை, "அவருடைய அபிப்ராயத்தை நாம் அறியோம். எல்லா சாஸ்த்ரங்களிலும் வல்லவரான பிள்ளை யெங்களாழ்வானைக் கேளுங்கோள்" என்ன, அவர்களும் கேட்க, எங்களாழ்வானும் 'ஸ்ரீரங்க ஐஸ்வர்யத்தில் தாமும் ஒருவராக எண்ணமாகலாம்' என்ன; நம்பிள்ளை திருநாராயணபுரத்தரையரைக் கேட்பிக்க, அரையரும் 'இங்கு தொடங்கிய கைங்கர்யம் முற்றுப் பெறாமையாலே யிருக்கலாம்' என்றார். நம்பிள்ளையும் ரொம்ப சரி என்று அம்மங்கியம்மாளைக் கேட்பிக்க, அவரும் 'நம்பிள்ளை கோஷ்டியிலிருந்து பகவத் விஷயம் (திருவாய்மொழி வ்யாக்யானம்) கேட்கிறவர்களுக்கும் பரமபதம் இனிக்குமோ' என்ன, பிள்ளையும் பிறகு பின்பழகிய பெருமாள் ஜீயரைப் பார்த்து, "இவற்றிலேது நும் இசைவு?" என்று கேட்க, 'இவற்றிலொன்றுமன்று; தேவரீர் திருமஞ்சனம் கண்டருளித் திருப்பரியட்டம் உடுத்தி உலாவும் போது சிறு வியர்வையோடு கூடிய திருமுக மண்டலச் செவ்வியையும் அடியேன் சுற்றி சுழற்றி வீசுகிற கைங்கர்யத்தையும் விட்டுப் போக இச்சையில்லாமையாலே' என்று பெருமாள் ஜீயர் பதில் கூறினார். இதுகேட்டு எல்லோரும் இப்படி ஒரு ஐச்வர்யம் கூடுவதே எனக் கொண்டாடினர்.

குணமலைப்பாடி என்ற ஊரின் தலைவனான காங்கேயன் என்னும் வேளாளன் தன் சேனையுடன் வந்திறங்க அவனையும் அவன் சேனையையும் விருந்திட்டு நன்றாக உபாதித்தார். இதனால் மகிழ்ந்த காங்கேயன், "உமக்கு எது வேணுமானாலும் தருகிறோம் கேளும்" என்று ஆத்தானைக் கேட்க. அவரும், "உம்மிடம் முன்னமே பெரியதொரு உபகாரம் பெற்றோமே" என்று பதில் கூறினார். இது கேட்டு அந்த வேளாளன், "அப்படியொன்றும் உபகாரம் தான் பண்ணியதாக நினைவில்லையே என்று கூற, ஆத்தான் எங்களாசார்யர் நான் கோயிலிலே மண்பெற்றது அவ்வேளாளனாலே என்று உம்மைப் பலமுறை உகந்து கூறக் கேட்டதுண்டு. இதற்கு மேம்பட உபஹாரம் வேறு ஒன்றுமில்லை" என்று ஆத்தான் பதிலிறுத்தாராம். நமதாசார்யனின் மதிப்பைப் பெற்றவரை நாம் உகந்து பூஜிக்கவேண்டும் என்பது நாமறியக் காட்டப்படும் பொருள் இங்கு.

## 9. ஆசார்யன் பக்கலிலும் எம்பெருமான் பக்கலிலும் க்ருதஜ்ஞனாய்ப் போருகை

தத்வஜ்ஞானம் பிறப்பித்த ஆசார்யன் ஸந்நிதியில் கிஞ்சித் காரத்தோடே அவனுக்கபிமதமாக வர்த்திக்க வேண்டும். ஆசார்யன் நித்ய ஸம்ஸாரியான என்னைக் காப்பாற்றும் பொருட்டுள்ளான், அறியாதவையெல்லாம் ப்ரயாஸைப்பட்டு அறிவித்தான் என்று ஆசாரியனிடமும் அவனைக் காட்டி தந்த எம்பெருமானிடமும் க்ருதஜ்ஞனாய் இருக்க வேண்டும். பகவானுடைய உகப்புக்காக நாம் ஆசார்யனிடம் மிக்க அன்பு இருக்க வேண்டும். ஆசார்யனுடைய உகப்புக்காக பகவத் விஷயத்திலும் அன்பு காட்ட வேண்டும். தேவு மற்றறியேன் என்று ஆசார்யனையே தெய்வமாகப் பற்றியிருப்பான் ஒருவனுக்கு எம்பெருமான் தானே மேல் விழுந்து தன்னைக் கொடுக்கும் என்பதை "திருமாமகள் கொழுநன் தானே வைகுந்தம் தரும்" என்ற ஆழ்வார் ஸ்ரீஸூக்தி உணர்த்துகிறது.

ஆசார்ய ருசி பரிக்ருஹீதமான விஷயம் என்று பகவத் விஷயத்தை உத்தேசமாகக் கொள்ள வேண்டும் என்பது நம் முன்னோர்கள் காட்டியுள்ள ஸித்தாந்தம். ஆசார்ய ஸம்பந்தத்தை அறுத்துக் கொண்டு பெறுவதனால் பகவத் விஷயமும் விலக்கப்பட வேண்டியதே.

### கூரத்தாழ்வான்

கிருமிகண்ட சோழன் உபத்ரவத்தாலே எம்பெருமானார் மேல்கோட்டை திருநாராயணபுரத்துக்கு எழுந்தருளினபோது வைணவ த்வேஷியைக் கண்ட கண்கள் கூடாவென்று தரிசனத்துக்காகத் தம் தரிசனங்களைத் தந்த ஆழ்வான் ஸ்ரீரங்கத்தில் நம்பெருமாளைச் சேவிக்க எழுந்தருள, அச்சோழன் எம்பெருமானார் ஸம்பந்தம் பெற்றவர்களைத் திருவரங்கம் பெரிய கோயிலுக்குள் விடலாகாது என்று ஆஜ்ஞைவிட்டு வைத்தான். இதையறியாத கூரத்தாழ்வான் ஒரு சமயம் கோயிலுக்குள் செல்லப்புக, அப்போது ராஜ ஸேவர்கள் திருவாசலிலேயிருந்து ராமானுஜ ஸம்பந்தமுடையார் புகுரவொண்ணாது என்று தடுக்க, வேறு சிலர் ஆழ்வான் ஆத்ம குணபூர்த்தியுடைவர், உள்ளே போகவிடுங்கள் என்று கூற இத்தைக் கேட்ட ஆழ்வான் ஆத்ம குணங்கள் ஆசார்ய ஸம்பந்தத்துக்கு உடலென்று சொல்லுவார்கள். ஆனால் என்னுடைய ஆத்மகுணங்கள் எம்பெருமானார் ஸம்பந்தத்தை அறுத்துக் கொள்ளுகைக்குடலாயிற்று என்று புறப்பட்டருளி

நமக்குப் பெருமாள் வேண்டாம் எம்பெருமானார் ஸம்பந்தமே அமையும் என்று மீண்டெழுந்தருளினார். இத்தால் பாகவத விஷயத்துக்குப் புறம்பான பகவத் விஷயமும் உத்தேச்யமன்று என்றதாயிற்று. ஆசார்யனே தனக்கு ப்ராப்யம் ப்ராபகம் என்று காட்டினார்.

## மதுரகவியாழ்வார்

ஆசார்யவைபவத்தை நாடறியப் பேசுவதே ஸச்சிஷ்யனின் பணி. "குரும் ப்ரகாசயேத் தீமாந்" என்பது சாஸ்த்ரம் தமக்கிடும் கட்டளை. ஸதாசார்ய ஸம்பந்தத்தினால் தான் பெற்ற பயனை மற்ற யாவரும் பெற்று உய்யவேண்டும் என்று நல்ல நோக்கத்துடன் ஆசார்யனின் க்ருபை முதலான பெருமைகளை ஊரறிய விளக்கமுறச் செய்யவேண்டும். இந்த பணியை நன்றாக செய்வேன் என்கிறான் மதுரகவியாழ்வார் கீழ்கண்ட பாசுரத்தில்

கண்டு கொண்டு என்னைக் காரிமாறப்பிரான்
பண்டை வல்வினை பாற்றி யருளினான்
எண்டிசையும் அறிய இயம்புகேன்
ஒண்டமிழ்ச் சடகோபன் அருளையே

பொற்காரியாரின் பெருங்குளத்தின் தோன்றிய பேருதவியாளரான ஆழ்வார் என் தாழ்ச்சியைப் பாராதே குளிர கடாக்ஷித்து கைக்கொண்டு பலபல பிறவிகளின் வெகுகாலமாக சேமிக்கப்பட்ட கொடிய பாபங்களை உருமாய்ந்து போகும்படி பண்ணி தம்புகழை வாயாரப் பேசும்படி அருள் பாவித்தார். அழகிய தமிழில் பல ப்ரபந்தங்களை அருளிச் செய்த ஆழ்வாரின் பரமக்ருபையை எட்டுத் திக்கிலுமுள்ளவர்கள் யாவரும் அறியும்படி எடுத்துச் சொல்வேன் என்கிறார். கண்டு, கொண்டு என் வல்வினை பாற்றியருளினான் என்றதால் ஆழ்வார் தன்னைத் தேடிக் கொண்டு வந்து அடியேனைக் கண்டு அருள் நோக்காலே கைக் கொண்டு வெகுகாலமாக அடியேன் திரட்டி வைத்துள்ள பலபல பிறவிகளில் அனுபவித்தாலும் சிறிதும் குறையாமல் நிற்கும் பாபச் சுமையை பொடிபொடியாக விழுந்து இருந்த இடம் தெரியாமல் தொலைத்தருளினார் என்று நன்றி பெருக்குடன் ஆழ்வார் பாசுரமிடுகிறார். "மாம் சரணம் வ்ரஜ ஸர்வபாபேப்யோ மோக்ஷயிஷ்யாமி" என்று கண்ணன் திருவாக்கு. "என்னை புகலாக அடை, உனது எல்லா பாபங்களையும் தொலைக்கிறேன்" என்றபடி. "தோஷோ யத்யபி தஸ்யஸ்யாத்" –பாபத்தோடரிலும் விடேன், காத்தே தீருவேன் – என்பது சக்ரவர்த்தி திருமகன் திருவாக்கு. ஆழ்வாரின் அருளின ஏற்றமோவெனில் என்னை அவரே வந்து கண்டு

கொள்ளும்படியும், மேல் வரும் காலமெல்லாம் மீண்டும் தாழாதபடி வாழும்படியும் அமைத்தது. இலக்குவனைப் போல் ராமனிடமே பற்று வையாமல் ராமபக்தனான ரதனையே ஸ்வாமியாகக் கொண்ட சத்ருக்தாழ்வான் படியிது. "ஆசார்யாபிமானமே உத்தாரகம்" என்று பேற்றுக்கு அதை சரமோபாயமாக நமது ஆசார்யர்கள் கொண்டு ஒழுகியதற்கு ப்ரமாணம் மதுரகவி சொல்லலாம்.

### ஸோமாயாஜியாண்டான்

சோழ அரசனிடமிருந்து ஸ்ரீவைஷ்ணவ தர்சனத்துக்கு ஏற்பட்ட தொல்லை காரணமாக ஸ்ரீ ராமானுஜர் பல ஆண்டுகள் மேல் நாட்டில் வாழும்படி யாயிற்று. அந்த காலத்தில் தான் அப்பெரியார் திருநாராயணபுரத்தில் திருநாராயணனுக்கு ஸன்னதி ஏற்படுத்தினார். முகம்மதியர்களால் அபகரிக்கப்பட்டு டில்லியில் இருந்த உத்ஸவமூர்த்தி ராமப்பிரியரும், உடையவரால் எழுந்தருளப் பண்ணப்பட்டு, யதிராஜ ஸம்பத்குமாரர் என்று உடையவருடைய செல்வப் பிள்ளையாக ஸன்னிதியில் பிரதிஷ்டிப்பிக்கப் பெற்றார். திருநாராயண புரத்தில் ஸோமாயாஜியாண்டான் (இவரை ஸோமாசி யாண்டான் என்று குறிப்பது வழக்கம்) என்று ஒரு பக்தர் இருந்தார். அவர் கையில் வீணையுடன் உருக்கமாகப் பாடி செல்வப் பிள்ளையைப் பஜனம் செய்து வந்தார். பாட்டுக்கு உகப்பவன் ஆகையால், பகவானும் அவரிடம் மிகவும் அன்பை பொழிபவனாய் "தன்முகத்துச்சுட்டி தூங்கத் தூங்க, உடன் கூடிக்கிண்கிகிணி ஆரவாரிப்ப, உடைமணி பறை கறங்க" என்று கொண்டாடும் படி தளர்நடை நடந்து வந்து ஆடி மகிழ்ந்து, ஆண்டானையும் மகிழ்விப்பது வழக்கமாயிற்று. இந்த ஆனந்தானுபவத்தில் திளைத்த ஆண்டானுக்கு, "நம்மிடமன்றோ செல்வப்பிள்ளை இப்படிப் பழகுகிறான்" என்ற அஹம்பாவம் தலையெடுக்க ஆரம்பித்தது.

இதைக் கண்ட எம்பெருமானார் (ஸ்ரீராமானுஜர்) பரமபாகவதரான இவர் அஹங்காரத்தால் ஸ்வரூபத்தைக் குலைத்துக் கொண்டு புருஷார்த்தமான மோக்ஷத்தை இழந்து விடுகிறாரே என்று தம் இயல்பான பொங்கும் பரிவாலே ஆண்டானைத் திருத்த முற்பட்டார். ஆண்டானை அழைத்து, "ஆண்டான், உமது பக்திக்கும் பாட்டுக்கும் உகந்து செல்லப்பிள்ளை உம்மிடம் விபவரூபத்துடன் கலந்து களிக்கிறான். அடியேனுக்கு ஒரு ஸந்தேஹம். இதைப் பெருமாளிடம் கேட்டு தெளிவு பிறப்பிக்க வேண்டும். அதாவது, ஆசாரியனான திருக்கோட்டியூர் நம்பி வார்த்தையை மீறியதால் அடியேனுக்கு மோக்ஷ புருஷார்த்தம் உண்டு என்பது நிச்சயமில்லை. நம்பிகளுடையதும்

மற்ற ஆசார்யர்களுடையதுமான அபிமானமும் கிருபையும் நம்மிடம் உண்டாகையால், இழந்தேனாகவும் நிச்சயிக்க முடியவில்லை. இதைக் கேட்டுச் சொல்லும்" என்று பிரார்த்தித்தார்.

ஆண்டானும் செல்வப் பிள்ளையிடம் இதைக் கேட்க பெருமாளும் "நம் மிராமாநுசனுக்குப் பேற்றில் குறையுண்டோ? அவர் அபிமாநத்தில் ஒரு திவலை உண்டாகில், மோக்ஷம் கைவிலங்கு நெல்லிக்கனியாயிற்றே. அப்படியிருக்க அவர் பேற்றைப் பற்றி ஏன் க்லேசிக்க வேண்டும்?" என்று திருவாய் மலர்ந்தருளினான். இதை ஆண்டான் சொல்லிடக் கேட்ட உடையவரும் மிகவும் மகிழ்ந்து, "ஆண்டானே! நமது பேறு பற்றித் தெளிந்தோம். உமது பேறு பற்றிக் கேட்டுச் சொல்வீர்" என்று கேட்க, ஆண்டானும், 'இவர் இப்படிக் கேட்கிறரே' என்ற வருத்தத்துடன் பகவானிடம் தனக்கு மோக்ஷம் உண்டோ என்று கேட்க, செல்லப்பிள்ளையும், "உமக்கு மோக்ஷம் உண்டு என்று நிச்சயமாகச் சொல்வதற்கில்லை. உமது உபாஸனையின் சீர்மை பற்றி பகவதநுபவமாகிற இந்தப்பலன் கிடைக்கிறது. உபாஸனபலமான புண்ணியத்திற்கும் அநுபவத்திற்கும் கரியாய்க் கழித்து விடும். நீர் பாடினீர், நாம் ஆடினோம். அவ்வண்ணமேயொழிய மோக்ஷத்தில் உமக்கு அதிகாரம் ஏது?" என்று விடை பகர்ந்தான். இதைக் கேட்டு ஆண்டான் இடிந்து விட்டார். "அடியேனுக்கு உய்யும்வகையை காட்டவேணும்" என்று பிரார்த்திக்க எம்பெருமானும் பரமக்ருபையுடன் "நம் மிராமாநுசனுடைய ஸந்தேஹத்தைத் தெளிவிக்கச் சொன்ன விஷயத்தை நினைத்துப்பாரீர்! அவர் அபிமானம் உமக்குண்டாகில் மோக்ஷம் நிச்சயம்," என்றான்.

மறுநாள் ஆண்டான் உடையவர் திருவடிகளில் வேர் அற்ற மரம் போல் விழுந்து, "அடியேன் உய்யும் படி க்ருபை பண்ண வேணும்" என்று ஆர்த்தியுடன் பிரார்த்தித்து, அவரிடம் கனத்த பிரேமத்துடன் அவர் திறத்து எல்லா அடிமைகளையும் செய்வாராயினார். ஆசாரியனிடம் சிஷ்யன் இருக்கும்படிக்கு ஒரு எடுத்துக் காட்டாகவே விளங்கலானார். "எம்பெருமானார் திருவடிகளே சரணம்" என்று சோமாசியாண்டான் அநுஸந்தானத்திலுள்ள பரிவும் இனிமையும் வேறு யார் வாக்கிலும் காண கிடைக்காது என்று இவருக்குத் தனிப் பெருமை உண்டு. இதற்கு ஒப்புசொல்ல வேண்டுமானால், பட்டர் தம் வாக்கால் அழகியமணவாளனையும் அனந்தாழ்வான் திருவேங்கடமுடையானையும், விச்வாமித்திரர் "கௌசல்யா ஸுப்ரஜாராம" என்று சக்கரவர்த்தி திருமகனையும் மங்களாசாஸனம் பண்ணுவதையே சொல்ல வேண்டும்.

### நஞ்சீயர்

நஞ்சீயர், பிரம்மத்திற்கு குணங்களோ, உருவமோ, உடைமைகளோ கிடையாது என்று கூறுகின்ற அத்வைத மதத்தைச் சார்ந்தவராக இருந்து, பட்டரால் திருத்திப் பணி கொள்ளப்பட்டு விசிஷ்டாத்வைதியாக ஆனவர்; "ஈச்வரனுக்கு விக்ரஹமில்லை விபூதியில்லை என்கிறவர்கள் முன்பே ஆப்ததமரான இவர் திருவுடம்பு வான்சுடர் என்னப்பெறுவதே! ஈச்வரனுக்கு விக்ரஹமில்லை குணமில்லை என்கிறவர்கள் பண்ணி வைக்கமாட்டாத பயமில்லை. அவர்கள் அநுவர்த்தித்து அது கேட்க இராதபடி பெருமாள் நமக்குப் பண்ணின உபகாரம் என்!" என்றருளிச் செய்வர் சீயர்.

எம்பெருமான் தன்னைப் பெறுகைக்கு உபாயமாக கர்ம ஞானாதி களாகிற இதர உபாயங்களைக் காட்டி ஸ்வயத்நபரர்களை தன்முயற்சியால் பலம்பெற வேணும் என்றிருப்பவர்களை தன்னை உபாயமாகக் கொள்ளாத படிக்கு அகற்றி விடுவதுண்டு. எம்பெருமானைப் பெறுகைக்கு உபாயங்களாக கர்மயோகம் முதலானவற்றை சாஸ்த்ரங்கள் வாயிலாக எம்பெருமானே வெளியிட்டிருக்கிறான். ஆனபோதிலும் எம்பெருமான் ஒருவனுக்கே பர தந்த்ரனான இச்சேதனன் அவனைப் பெற அவன் கை பார்த்திருக்க வேணுமே தவிர தன் அறிவாற்றலால் ஒன்றை செய்து எம்பெருமானைப் பெற பார்ப்பது நான் ஒன்றுசெய்துபயன் பெற்றேன் என்னும் அஹங்கார மமகாரங்களை உண்டாக்கி இவனுடைய எம்பெருமானுக்கேயான நிலையை அழித்து விடுமாகையாலே அவைகளைப் பற்றிய உண்மையான அறிவுடையவன் செய்ய முயலவே மாட்டான். அந்நிலையில் எம்பெருமானைப் பெறுவிக்கும் உபாயம் எம்பெருமானே என இவனுக்கு எம்பெருமான் அறிவிப்பது பேருபகாரமாகும். இப்பேருபகாரத்துக்கு இப்படி உபகரித்தானே என்று அனுஸந்திப்பதைவிட வேறு கைம்மாறு எதுவும் நம்மால் செய்யப் போகாது.

### உபகார ஸங்க்ரஹம்

ஸ்வாமி தேசிகன் எம்பெருமான் நமக்கு செய்கின்ற உபகாரங்களை உபகாரஸங்க்ரஹம்' என்ற நூலில் வெளியிடுகிறார்.

1. பிரளய காலத்தில் அசித்தோடு வாசியறக் கிடந்த ஜீவாத்மாவின் மீது மிகவும் கருணை கொண்டு கரணகளேபரங்களைக் கொடுத்து பிறவியை எம்பெருமான் அளித்தது ஓர் உபகாரம்.

2. பிரமனைப் படைத்து அவன் வழியாக வேதங்களை உலகில் நடையாடச் செய்தது ஒரு உபகாரம்.

3. வேதங்களின் கருத்துக்களை நாம் உணரும்படி சாஸ்த்ரங்களை வெளியிட்டான் எம்பெருமான்.

4. சாஸ்த்ரங்களை அளித்து ப்ரவர்த்தகர்களையும் ஏற்படுத்தினான்.

5. ஆழ்வார்களையும், ஆசார்யர்களையும் அவதரிக்கச் செய்து நம்போல்வார் அவர்களை பின்பற்றும்படி செய்தார். எம்பெருமானே ஆசாரியன் வடிவில் நின்று உபதேசிக்கும்படி திருவுள்ளம் கொண்டான். சிறந்த ஆசார்யர்களைத் தந்து அவர்களின் கடாட்சம் நம் மீது விழும்படி செய்தான். சாத்வீகர்களான பெரியோர்களுடன் ஸம்பாஷணம் செய்யும் வாய்ப்பை நமக்கு அருளியுள்ளான். எம்பெருமான் நம்மிடம் அன்பு கொண்டு நமக்குத் திருமுகம் கொடுத்தருளும் நிலையில் அவன் உள்ளான். நம்மை ஆச்சார்யர்களுடைய திருவடிகளில் பணிவிடைகளைச் செய்யவித்துள்ளான்.

6. நம்மிடம் உள்ள பாபங்களே அளவேயில்லை. நம்மை மரம், செடி முதலிய தாவரங்களாகவே, பசு, மான் முதலிய விலங்காகவோ படைத்திருந்தால் நம் கதி என்ன? சாஸ்த்ரங்களுக்கு வசப்படாத அந்தப் பிறவியில் நல்ல காரியங்களைச் செய்து நற்கதி பெற வழி உண்டா? இல்லையே. அவ்வாறன்றிச் சாஸ்த்ரத்துக்கு கட்டுப்பட்டு நடக்கத் தகுதியான மனிதப் பிறவியையன்றோ அளித்துள்ளான். அதுவும், மிலேச்சர் முதலிய பிறவிகளை அளிக்காமல் நல்ல புண்ணிய *சீலர்களின்* குலத்திலே நம்மைப் பிறக்கச் செய்தான். ஸத்துவ குணம் மிகுந்து நல்ல செயலையே புரியவந்த இந்த்ரியங்களைப் பெற்ற சரீரத்தைக் கொடுத்து நம்மை உருவாக்கினான். இதனால் நாளடைவில் நம் ஆத்மாவை எம்பெருமானிடம் ஸமர்ப்பிக்கும் மனப்பாங்கு ஏற்படுகின்றது. மோக்ஷத்தில் நிலையான பற்றையும், அவனே உண்டாக்குகிறான். ஆசார்யனைக் கொண்டு எம்பெருமான் திருவடிகளில் நம்மை சரணாகதி செய்யும்படி பண்ணுபவனும் அவனே.

எத்தகைய விசேஷ உதவிகளை நமக்கு புரிந்துள்ளான் எம்பெருமான் என்று எம்பெருமானை கொண்டாகிறார் ஸ்வாமி தேசிகன்.

## 10. ஜ்ஞானமும் விரக்தியும் சாந்தியும் உடையனாயிருக்கும் பரமஸாத்விகனோடே ஸஹவாஸம் பண்ணுகை

இவ்விஷயங்களில் நாம் கலங்கினாலும் கலங்காமல் நிற்கும்படி உசாத்துணையாக இருக்கவும். இவை மேலும் வளர்ந்து செல்லுகைக்காகவும்

ஞானம் வைராக்யம், ஆகிய இவை பூர்ணமாக உடைய பரமஸாத்விகமான பாகவதரோடே ஸஹவாஸம் பண்ணுகை.

## எம்பெருமானார்

ஒருநாள் ஓர் ஊமையை அழைத்துக் கொண்டு எம்பெருமானார் மடத்தினுள்ளே சென்று கதவைத் தாளிட்டார். அந்த ஊமை விலக்ஷணமான நிலையிலிருந்தும் அறிவுக்குத் தகுதியற்றிருந்தார். அதனால் ஊமைக்குத் தம் திருவடிகளைத் தொட்டுக் காட்டி, "இதையே தஞ்சமாக எண்ணிக் கொண்டிரும்" என்று ஜாடையினாலே உணர்த்தினார். அவ்வூமையும் அதை யுணர்ந்து விழுந்து வணங்கி முகம் மலர்ந்தான். இந்த நிகழ்ச்சியை ஆழ்வான் கதவின் இடுக்கு வழியால் கண்டு, "ஐயோ! நாம் சாஸ்த்ரங்களையெல்லாம் அறிந்ததனாலல்லவா இப்பெருங்கருணை (நிர்ஹேதுக க்ருபை – வெறிதேயருள்) நமக்குக் கிட்டவில்லை; ஊமையாய்ப் பிறந்திலோமே!" எனப் புழுங்கினார். அந்த ஊமை வைஷ்ணவரும் உடையவர் திருமேனி ஸேவையும் திருவடிகளையுமே ப்ராப்யமாக எண்ணியிருந்தார்.

உடையவருடைய ஆசார்யரான பெரிய நம்பி தமது குமாரரான புண்டரீகாக்ஷரை உடையவரிடம் ஆச்ரயிக்கப் பண்ணியிருந்தார். சேரக்கூடாத ஸஹவாசத்தினால் அவர் ஒருநாள் ஆசார்ய கோஷ்டியை விட்டு யாருமறியாமல் சென்றுவிட, க்ருபையே வடிவெடுத்த இராமானுசனும் அன்று காலக்ஷேப கோஷ்டியில் அவன் இல்லாதிருப்பதைக் கண்டு, அங்கிருந்த முதலிகளிடம் அந்தப் பிள்ளை எங்கே என்று கேட்க, அவர்களும் அவன் அன்று வரவில்லை என்று பதில் கூற, உடனே இராமானுசர் க்ரந்தத்தை மூடி வைத்து விட்டு அவனைத் தேடிப் புறப்பட்டார். தேடி அலைந்து தாம் செல்லக்கூடாத இடத்துக்கும் சென்று அவனை அழைத்தார். தூரத்திலேயே இராமானுசர் வருவதைக் கண்டு அந்த பிள்ளை, "ஜீயா நான் உம்மை விட்டேன் என்னை அழைக்க வேண்டா" என்று கூற, உடையவரோ, "நீர் நம்மை விட்டாலும் நாம் உம்மை விடுகிறோமில்லை" என்று தம் அருள் நோக்கால் அவரை கடாக்ஷிக்க அழைத்து போய் திருத்தினார் என்பது வரலாறு.

## திருவரங்கத்தமுதனார்.

அரங்கநகரப்பன் செல்வத்தை எம்பெருமானார் திருத்தி வருகிறபோது அக்கோயிலில் புரோஹிதம் புராணம் படித்தல் முதலான கைங்கர்யங்களைச் செய்துவரும் சொல் வல்லாரான பெரியகோயில் நம்பி என்பவர் உடையவருக்கு எதிராக நடந்து கொண்டிருந்தார். இதனால் உடையவர் அவரைக்

கைங்கர்யத்தினின்றும் நீக்க நினைத்தார். அன்றிரவு நம்பெருமாள் இராமாநுஜ முநியின் கனவில், 'நெடுங்காலமாக நம்மையே நம்பிக் கொண்டிருக்கும் அந்நம்பியை நீக்க வேண்டாம்' என்றருளினான். எம்பெருமானார் ஆழ்வானைக் கூவி விரோதம் செய்யும் பெரிய கோயில் நம்பியை "நம்பெருமாள் நாம் ஒன்றும் செய்யக் கூடாதென்கிறார். அதனால் நாம் பெருமாள் கோயிலுக்குப் (காஞ்சீபுரம்) புறப்படுவோம்' என்றார். ஆழ்வான் உடையவரிடம், 'இதைச் சொன்ன பெருமாள் நிச்சயமாக அவரை நமக்கு அநுகூலமாக்குவார். அதனால் பொறுத்துப் பார்ப்போம்" என்ன, 'ஆகில் நீரே அவரைத் திருத்தும்' என்று எம்பெருமானார் பணித்தார். அப்படியே ஆழ்வானும் அப்பெரிய கோயில் நம்பியை திருத்தி எம்பெருமானார் திருவடிகளைச் சார்ந்து உய்யும்படி செய்தார். உடையவரும் அவருக்கு அமுதனார் என்று திருநாமம் இட்டார். திருவரங்கத்தமுதனாரும் அன்று முதல் எம்பெருமானாரிடம் அன்பு கொண்டு ஒழுகி வந்தார்.

இவர் எம்பெருமானார் விஷயமாக ப்ரபந்ந காயத்ரி என்கிற ராமாநுஜ நூற்றந்தாதியை அருளினார். இந்த ப்ரபந்தத்தில் அமுதனார் "காரேய் கருணை இராமாநுசா இக்கடலிடத்தில் யாரே அறிபவர் நின்னருளின் தன்மை" என்றும், "என்னைப்புவியில் ஒரு பொருளாக்கி அருள் சுரந்த முன்னைப் பழவினை வேரறுத்து" என்றும் எம்பெருமானாருடைய கிருபையை பலபடியாலும் கொண்டாடுகிறார். "இராமாநுச! என்றும் எவ்விடத்தும் என்புற்ற நோயுடல் தோறும் பிறந்து இறந்து எண்ணமே துன்புற்றுவீயினும் உன் தொண்டர்கட்கே அன்புற்றிருக்கும்படி என்னையாக்கி அங்காட்படுத்தே" என்று எம்பெருமானாரிடம் வேண்டுகிறார். இந்த ப்ரபந்தத்தில் பாசுரம் தோறும் இராமாநுஜருடைய திருநாமத்தை அமைத்திருப்பது ஒரு சிறப்பாகும். இதை நம்பெருமாள் காதாறக் கேட்டு இன்புற்றுத் திவ்வியப் பிரபந்தத்துள் இறுதி ப்ரபந்தமாகச் சேர்க்கக் கட்டளையிட்டார். இப்பிரபந்தத்துக்கு எம்பெருமானார் தாமே கேட்டுகந்த ஏற்றமுமுண்டு.

எம்பெருமானாரின் கீர்த்தி திக்கெட்டும் பரவியிருந்தது. இத் தருணத்தில் மாயாவாத மதமான அத்வைதத்தைச் சார்ந்த யஜ்ஞமூர்த்தி என்ற மகா வித்வான் ஒருவன் கங்கா ஸ்நானத்துக்குச் சென்று அங்கு கங்கைக் கரையிலுள்ள வித்வான்களையெல்லாம் வெற்றி கொண்டவனாய் எல்லா சாஸ்திரங்களிலும் கரை கண்டவனாய் பெரும்புலவனாய் இருந்தான். அங்கேயும் எம்பெருமானாருடைய வைபவம் பரவி அவன் காதிலும் விழுந்தது. உடனே ஸ்ரீரங்கம் போய் ராமாநுஜரை தர்சிக்க வேணுமென்று உறுதி

கொண்டான். அதற்குத் தக்கவாறு அநேக சாஸ்த்ரங்களை எழுதிச் சுமையாகக் கட்டி வண்டியில் ஏற்றிக் கொண்டு ஸ்ரீரங்கம் வந்து சேர்ந்தான்.

எம்பெருமானாருடைய மடத்துக்குத் தன் கல்வி செருக்கெல்லாம் தெற்றெனத் தெரியும்படி பெரு மதிப்புடன் சென்று, "என்னுடன் தர்க்கம் செய்யவேணும்" என்று கேட்டான். எம்பெருமானாரும் அதற்கிசைந்து, "அப்படியே செய்வோம், நீர் தோற்றால் என்ன செய்வீர்?" என்ற வினவினார். "நான் தோற்றால் உம்முடைய பாதரக்ஷைகளைச் சுமப்பேன்; என் பெயரை மாற்றி உம்முடைய பெயரையும் ஏற்றுக் கொள்வேன்; தவிரவும் உம்முடைய சமயத்தையே சார்வேன்" என்று கூறி, "நீர் தோற்றால் என்ன செய்வீர்?" என்று கேட்டான் யஜ்ஞமூர்த்தி, "நான் தோற்றேனாகில், என்னுடைய நூல்களை நான் தொடுவதில்லை. உமக்குத் தோற்றோமென்று சொல்வேன்" என்று பதில் விளம்பினார் எம்பெருமானார்.

இவ்வாறு ப்ரதிக்ஞை செய்து கொண்டு "வாதப் போர் பதினெட்டு நாள்கள்" என்று எல்லைப்படுத்திக் கொண்டு இருவரும் ஒருவரையொருவர் வெற்றி காணவேணுமென்று மத்தகஜங்கள் போல வாதப்போர் புரிந்தனர். ஒருவர் யுக்தியை ஒருவர் மறுத்துக் கொண்டு 16 நாள்கள் வாதம் செய்தனர். 17வது நாள் யஜ்ஞமூர்த்தியின் யுக்தி பலமாக இருந்தது. எம்பெருமானார் மறு யுக்தி எதுவும் தோன்றாமையால் பதில் கூறாமல் தம் மடத்துக்கு எழுந்தருளினார்.

எம்பெருமானாருக்குப் பெரிய மனக்கவலை ஏற்பட்டு விட்டது. தமது திருவாராதனைப் பெருமாளான பேரருளானனுக்கு அமுது படைத்துப் பின் பெருமாளிடம் வெறுப்போடு, "பெருமாளே! ஆழ்வார் தொடங்கி ஆளவந்தார் வரை இந்த தரிசனம் (சமயம்) இடையீடின்றி ஓங்கி வளர்ந்து வந்தது. இன்று அடியேனால் இத்தரிசனம் தோற்கக்கடவதோ! இது நாள் வரை உம்முடைய தான ஆத்மா, திருமேனி, அவற்றைப் பற்றிய உருவம், குணங்கள், உலகங்கள் இவை யாவும் சத்தியமென்று வேத சாஸ்த்ரம் முதலான ப்ரமாணத்தை நடத்திக் கொண்டு வந்தீர்; இப்போது ஒரு மாயாவாதியைக் கொண்டு வந்து அடியேனுடைய காலத்தில் எல்லா ப்ரமாணங்களையும் அழித்துப் போட்டு விளையாட்டுக் கொள்ளத் திருவுள்ளமோ! அப்படியாகில் நும் திருவுள்ளப்படி செய்தருள்க" என்று விண்ணப்பித்துத் தாம் உண்ணாமல் மனவேதனையுடன் கண்ணயர்ந்தார்.

அன்றிரவு பேரருளாளன் எம்பெருமானாரின் கனவில் தோன்றி, "இளையாழ்வீர்! நீர் கவலுவதேன்? உமக்கு மிகச் சிறந்த சிஷ்யனை ஆக்கித்

தந்திருக்கிறோம். உம்முடைய பரமாசார்யரான ஆளவந்தார் அருளிய மாயாவாத கண்டனத்தை சொல்லி அவனை வெற்றி கொள்வீர்!'' எனத் திருவாய் மலர்ந்தருளினார்.

''இது ஒரு ஸ்வனப்னம் இருந்தபடி என்'' என்று உகப்போடு எம்பெருமானார் விடியலில் காலைக்கடன்களை முடித்துக் கொண்டு தம் திருவாராதனப் பெருமாளான பேரருளாளனை வணங்கி, ஆளவந்தார் அருளிய மாயாவாத கண்டன யுக்திகளை மனதில் ஆய்ந்து கொண்டு பெரு மிடுக்குடனே வாதத்துக்கு எழுந்தருளினார். எம்பெருமானாரின் அந்த நடையின் மிடுக்கையும், நேற்றிருந்த நிலைக்கு இன்றிருக்கும் நிலையின் வேறுபாட்டையும், அவர் திருமுகத்தில் வெற்றியின் நிழல் தெற்றென விளங்குவதையும் கண்டு, ''இது மானுடமன்று, தெய்வம்!'' என்று நிச்சயித்து யஜ்ஞமூர்த்தி சடக்கென எழுந்து, ''தேவரீருக்குத் தோற்றேன்'' என்று சொல்லிக் கொண்டு எம்பெருமானாரின் திருவடிகளில் சாஷ்டாங்கமாகத் தண்டன் சமர்ப்பித்து, அடியேனை இறங்கியருளவேணுமென்று வேண்டி நின்றார். எம்பெருமானாரும் ''இதுவென்! வாதம் செய்ய வேண்டாமோ?'' என்ன ''தேவரீருக்கும் பெரிய பெருமாளுக்கும் (அரங்கனுக்கும்) பேதமில்லை யென்று நன்றாக அறிந்து கொண்டேன். இனி அடியேன் தேவரீரின் முன்னிலையில் வாய் திறக்கவொன்னாது'' என்று யஜ்ஞமூர்த்தி கூறினார்.

யக்ஞமூர்த்தி தான் வைத்திருந்த ஏக தண்டத்தை (அத்வைத ஸந்யாஸிகள் கையில் வைத்திருப்பது) முறித்தெறித்தார், உடையவர் திருவடிகளில் மறுபடியும் வணங்கிக் கிடந்தார். ஸ்வாமியும் அவரை எடுத்தணைத்துக் கொண்டு மிகவும் கருணை கூர்ந்தார். யஜ்ஞமூர்த்தியும் அடியேனுக்கு த்ரிதண்டம் (முக்கோல்), காஷாயம் முதலியவைகளைத் தந்து அடியேனை அடிமை கொண்டருள வேண்டுமென்று வேண்டினார். உடையவரும் அப்படியே ஆகட்டுமென்று அருளி, முன்பு அத்வைத ஸந்யாஸியாய் இருந்தபோது பிராம்மணனுக்கு இன்றியமையாத சிகை(குடுமி), யஜ்ஞோபவீதம் (பூணூல்) இரண்டையும் விட்டதனால் அதற்குச் சாஸ்த்ரங்களில் ப்ராயச்சித்தம் செய்வித்துக் குடுமி பூணூல்களைத் தரிக்கச் செய்து, பிறகு பஞ்ச ஸம்ஸ்காரத்தையும் செய்வித்து, த்ரிதண்டம் காஷாயம் முதலியவைகளையும் தந்து நீர் உள்ளதனையும் தரித்திருமென்று சொல்லி வைஷ்ணவ ஸந்யாஸியாக்கினார். மேலும், தமக்குக் கனவின் மூலம் பேரருளாளன் அருள் செய்த உபகாரத்துக்கு நினைவு உள்ளதாக அவருக்கு அருளாளப் பெருமான் என்ற பெயரையும் வாதத்தின் ஆரம்பத்தில் சொன்னபடி

தம்முடையதான எம்பெருமானார் என்ற பெயரையும் ஒன்று சேர்த்து அருளாளப் பெருமாள் எம்பெருமானார் என்று திருநாமம் சூட்டினார். பேரருளாளனின் மற்றொரு பெயர் தேவராஜன் என்பது. அந்த நாமத்தைக் கொண்டும் யஜ்ஞ மூர்த்திக்குத் தேவராஜமுநி என்று மறுபெயரும் சூட்டினார். அன்று முதல் யஜ்ஞமூர்த்தி அருளாளப்பெருமாள் எம்பெருமானார் என்று வழங்கலானார்.

பின்னர் ராமாநுஜமுநி தேவராஜ முநியை அழைத்துக் கொண்டு திருவரங்கத்தெம்பெருமானைச் சேவிக்கப்பண்ணி, தீர்த்த ப்ரஸாத ஸ்ரீசடகோபங்களையும் பெறச் செய்தார். அப்படியே அவரைத் தம் மடத்துக்கும் அழைத்துச் சென்று தம் பேரருளாளனையும் திருவடி தொழச் செய்து, "இவர் காணும் உம்மை நம்மிடம் சேர்ப்பித்தது!" என்று உகந்து கூறித் தீர்த்த ப்ரஸாதங்களை அடையச் செய்து வாழ்வித்தார்.

## அருளாளப்பெருமாள் எம்பெருமானார் தனிமடல் தவிர்த்தல்

பிறகு உடையவர் அருளாளப் பெருமாள் எம்பெருமானாரின் பெரும் புலமையை மதித்து அவருக்காக அழகான ஒரு மடத்தை யுண்டாக்கி அதில் அவரை வாழச் செய்தார். ஒரு சமயம் மேல் நாட்டிலிருந்து (மைசூர் பிரதேசம்) சில ஸ்ரீவைஷ்ணவர்கள் எம்பெருமானாரைச் சேவிக்கவேண்டுமென்று ஸ்ரீரங்கத்துக்கு வந்தனர். அவர்கள் அங்குள்ள ஒருவரைக் கண்டு எம்பெருமானார் மடம் எங்கேயிருக்கிறது என்று கேட்டனர். அதற்கு அவர், "எந்த எம்பெருமானார் மடம்?" என்று பதில் வினா எழுப்பினார். இதைக் கேட்ட அவர்கள் "இதென்! உலகிற்கு ஒரு சூர்யனேயன்றோ இருப்பது! அது போல ஜகதாசார்யரான எம்பெருமானார் ஒருவரேயன்றோ எங்களால் அறியப்பட்டனர். மற்றுமொரு எம்பெருமானாரும் உளராவரோ?" என்று கேட்டனர். அதற்கு உத்தரமாக, "அருளாளப் பெருமாளெம்பெருமானார் என்ற ஒரு ஸந்யாஸியும் இந்த ஸ்ரீரங்கத்தில் தனியாக மடத்தில் வாழ்கிறார். அதனாலே தான் நாம் அவ்வாறு வினவினோம்" என்று கூறி ராமாநுஜ முநியின் மடத்துக்குப் போகும் வழியைச் சொல்லியனுப்பினர். அவர்களும் ஸ்வாமி எம்பெருமானாரைச் சேவித்துச் சுகமே சென்றார்கள்.

இவ்விஷயத்தை அறிந்த அருளாளப் பெருமாள் எம்பெருமானார், "ஐயோ! நாம் தனியாகக் குடியிருந்து ஸ்வாமி எம்பெருமானாருக்குப் போட்டியாக ஆனோமே; அபசாரப்பட்டோமே!" என்று நெஞ்சு கலங்கினார். உடனே தம் மடத்தை இடித்து விட்டு எம்பெருமானார் மடத்தே வந்து ஸ்வாமிக்குத் தண்டனிட்டு, "ஸ்வாமி! அடியேன் இதுநாள் வரையிலும்

சுதந்தரத்தாலே அஹங்கரித்து (அகம்பாவம் கொண்டு) திரிந்தேன். இன்று தான் அகத்தை அழித்து ஒரு பொருளாக உள்ளவனாக தேவரீரின் திருவடியடைந்து ஸத்தைப் பெற்றேன் (உள்ளவனாக ஆனேன்). மறுபடியும் அகந்தையாலே ஸத்தை அழித்து அநர்த்தப்படவோ? தனியே மடம் அமைந்ததால் இந்நிலையுண்டாயிற்று. அதனால் அடியேனைத் தனியே வைக்காமல் தேவரீரின் திருவடி நிழலிலேயே வைத்துக் காக்கவேண்டுகிறேன்" என்று வேண்டினார். எம்பெருமானாரும் "அவ்வாறே" என்று அணைத்துத் தம்முடைய திருவடிகளிலே சேர்த்துக் கொண்டார். அருளாளப் பெருமாளெம்பெருமானாரும் தம்முடைய நிஷ்டையான 'ஆசார்யனே எல்லாமாவான்' என்கிற பொருளைத் தெளிவுபடுத்தி ஞானசாரம் பிரமேயசாரம் என்கிற இரண்டு ப்ரபந்தங்களைச் செய்து உலகை உய்வித்தார்.

ஸ்ரீரங்கத்தில் ஸ்ரீராமானுஜர் காலத்தில் பெருமாள் சாத்தும் வஸ்திரங்களை ஸலவைபண்ணும் ஸ்ரீவைஷ்ணவ வண்ணாத்தான் பெருமாளின் வஸ்த்ரங்களைத் துவைத்து உலர்த்தி மடித்து அழகாக முதலில் எம்பெருமானாரிடம் காட்டுவது வழக்கம். ஒரு சமயம் இவன் எம்பெருமானுடைய திருப்பரிவட்டங்களை அழகியதாகவாட்டி எம்பெருமானாருக்குக் காட்ட. அது கண்டு மிகவும் உகந்து உடையவர் அவனைக் கைப்பிடித்து பெருமாள் திருமுன்பே சென்று அவன் தொட்டு வாட்டிய வஸ்த்ரங்களைப் பெருமாளுக்குக் காட்டி, "தேவரீருக்காக இவன் கைங்கர்யத்தை கடாக்ஷித்து ஸம்மானிக்க வேணும்" என்று வேண்ட, பெருமாளும் கண்டு மகிழ்ந்து இவனுக்காக கம்ஸனுடைய வண்ணான் நமக்கு நல்லாடைகள் தராமல் இகழ்ந்த குற்றத்தை க்ஷமித்தோம் என்று திருவுள்ளமானாராம். ஒரு பணியாளன் தன் பணியை விசேஷ ப்ரதிபத்தியுடன் நன்றாகச் செய்தான் என்று உடையவர் அவனைப் பெருமாளின் அருளுக்கு விசேஷபாத்திரமாக்கி அவன் குலத்தவன் முன்பு பண்ணிய குற்றம் நீங்கச் செய்தார்.

## கூரத்தாழ்வான்

கூரத்தாழ்வான் ஞானத்தில் போல ஆத்மகுண பூர்த்தியிலும் ஆசார்ய பக்தியிலும் மிகப் பெருத்தவர். தமது அருள் நோக்காலே பிறரைப் பவித்திரமாக்க (மனத்தூய்மை பெறுவிக்க) வல்லவர். ஒருவர் தமது குமாரர் துஷ்ட ஸஹவாஸத்திலிருந்து விலகி வந்து ஸ்ரீவைஷ்ணவக் கோலத்தோடு தம்மை வந்து தண்டன் ஸமர்ப்பித்த போது "கூரத்தாழ்வானைக் கண்டாயோ?

அவர் உன்னைக் குளிர நோக்கப் பெற்றாயோ?" என்று கேட்டாராம். ஆழ்வானை சேவிப்பதன் பலன் இது.

## பட்டர்

ஒரு நாள் பட்டரை அடைந்த சிஷ்யர் ஒருவர் ஸஹவாஸ தோஷத்தாலே கலங்கி பட்டரிடம் உமக்கும் நமக்கும் பணியில்லை என்று கூற அவரிடம் பட்டர் நீர் விட்டாலும் நாம் விடமுடியுமோ என்று பலாத்கரித்து அவரை திருத்தி பணிக்கொள்ள அவரும் திருந்தி விரக்தராய் பட்டரை விடாதே இருந்தார். இதனால் சதாசார்யன் தன்னை அடைந்தவன் ஆச்சார்யனை விட்டாலும் ஆச்சார்யன் அவனை விடாது நின்று காக்கும் என்பது தெளிவு.

## நஞ்சீயர்

ஒரு முறை பிள்ளையாத்தான் என்னும் செல்வர் நஞ்சீயரிடம் திருவாய் மொழிக்குப் பொருள் கேட்கச் சென்றார். சீயர் அவரைப் பிள்ளைபால் கேட்குமாறு அனுப்பிவைத்தார். பெருஞ்செல்வந்தரும் உயர்குடிப்பிறப்பாளரும் ஆன அவர் நம்பிள்ளையைத் தெண்டனிடத் தயங்கினார். நஞ்சீயர் துறவியாதலால் அவரைத் தெண்டனிட்டு வணங்கலாம், நம்பிள்ளையோ தம்மினும் இளையராய் இல்லறத்திருந்ததால் தெண்டனிடத் தகாது என்று அவர் எண்ணினார். அதனால் நஞ்சீயர் நம்பிள்ளையை அழைத்து அச்செல்வருக்குப் பாங்கானபடி பொருள் உரைக்குமாறு ஆணையிட்டார். சீயரின் குறிப்பறிந்த பிள்ளை அச்செல்வரை ஓர் இருக்கையில் உயர் இருத்தித் தாமே தெண்டனிட்டுக் கீழிருந்து அவருக்குத் திருவாய்மொழிப் பொருளை உபதேசித்து வந்தாராம். 'நாதனை ஞாலமும் வானமும்.......' (திருவாய் 3–7–3) என்ற திருவாய்மொழி வந்தவாறே அடியார்களின் ஏற்றத்தை உணர்ந்து நம்பிள்ளையை அன்று தெண்டனிடப் புகுந்தாராம். நம்பிள்ளை அதனை ஏற்க மறுத்ததும் சீயரையிட்டு வற்புறுத்திப் பிள்ளையின் திருவடிகளில் தெண்டனிட்டுக் கிடந்தாராம். இவ்வாறு சீடரை வணங்கி வழிபட்டுப் பொருள் உரைத்து நல்வழிப்படுத்திய பெருந்தகைப் பண்பாளர் நம்பிள்ளை என்று அறிகிறோம்.

## மணவாளமாமுனிகள்

மணவாளமாமுனிகள் ஸ்ரீரங்கத்தில் ஆசாரியராய் வாழும் போது தினமும் காவேரிக்கு சென்று நீராடி அனுஷ்டானங்களை செய்து கொள்வர். ஸன்னிதியில் திருமஞ்சன கைங்கர்யம் பண்ணும் ஸ்வாமி ஒருவர் தினமும்

மாமுனிகள் திருமேனியை நனைத்து வரும் ப்ரவாஹத்தில் ஸ்வாமிக்குப் பின் நின்று நீராடுவார். தீர்த்த ஸம்பந்தம் உண்டாகி அவர் திருவடிகளில் ஆச்ரயித்து அவர் அனுக்ரஹத்திற்கு விசேஷபாத்ரபூதராய் ஞான அனுஷ்டானம் ஸம்பந்தராய் அவருக்கு தொண்டு பூண்டு வாழ்ந்து வந்தார். இவரை திருமஞ்சனம் அப்பா என்று அன்புடன் அழைப்பார்கள்.

## தொண்டனூர் நம்பி

தொண்டனூரில் ஒரு சைவப்பண்டாரம் வீடு தோறும் சென்று சோறு பிச்சையெடுத்து உண்பவன் ஒரு நாள் சோறு கிடைக்காமல் பசியால் வருந்த இது கண்டு ஒரு ஸ்ரீவைஷ்ணவர் அவனை நோக்கி, "நீ தொண்டனூர் நம்பி அகத்தின் வாயிலில் நின்று "ஸ்ரீமதே ராமாநுஜாயநம: என்று உறக்கச் சொன்னால் அவர் சோறு படைப்பார்" என்று கூறினார். அவனும் அப்படியே நம்பி வாசலில் நின்று பலமுறை ஸ்ரீமதே ராமாநுஜாய நம: என்று சொல்ல நம்பி வெளியே வந்து பார்க்க அவன் சைவப் பண்டாரமாயிருக்க அவனை நோக்கி " நீர் ஏது ஸ்ரீமதே ராமாநுஜாய நம: என்று கூவினாய்?" என்று கேட்க அவனும் நடந்ததை அப்படியே சொன்னான். தொண்டனூர் நம்பியும் அவன் நிலைக்கிரங்கி அவனுக்கு உணவளித்தார். பண்டாரத்துக்கு உணவளித்தது பற்றி சில வைஷ்ணவர்கள் நம்பியைக் குறை கூற அவர் அவர்களிடம் சென்று "அடியேன் செய்தது தவறேயாயிடுக; க்ஷமித்தருள வேணும்; ஆனால் ஆசார்ய திருநாமத்தை ஒரு முறை உச்சரித்தவனுக்கு யாது பலன்?" என்ன அவர்கள், "பரமபதப்ராப்திக்குக் குறையில்லை" என்ன "பல முறை சொன்னால்?" என்ன, அவர்கள் வாளாவிருந்தனர்.

இது கண்ட பண்டாரம் "நம்மால் இந்த நல்லவருக்குக் குறையாயிற்றே!" என்று வருந்தினான். நம்பியிடம் ப்ரஸாதப்பட்டதனாலும் அவன் மனம் திருந்தி தனது சைவ வேஷத்தைக் களைந்து, திருமண்காப்பணிந்து நம்பி திருவடிகளில் ததீயாராதனத்தில் பாகவதர்கள் அமுது செய்த இலைகளை எடுத்து ஸ்தல சுத்தி பண்ணும் கைங்கர்யத்தை நம்பிபக்கல் வேண்டிப் பெற்று அதில் ஊன்றியிருந்தான்.

## முடிவுரை

வைஷ்ணவம் இருவகைப்படும். ஆப்யந்தரம், பாஹ்யம் (உள் வைஷ்ணவம், வெளி வைஷ்ணவம்) எனப்படும். வெளி வைஷ்ணவமாவது: ரூப நாம பாஷா வைஷ்ணவம். ரூபம் என்பது தோள்களில சங்கு சக்கர சின்னங்களைத் தரித்தல், நெற்றியிலும் அங்கங்களிலும் திருப

காப்பணிதல், கழுத்தில் துளசி மணி, தாமரைமணி மாலைகள் அணிதல் ஆகியவை. நாமம் என்பது எம்பெருமானுடைய திருநாமங்களை நாமும் வைத்துக் கொண்டு, நம்முடைய குழந்தைகளுக்கும் வைத்தல். பாஷை என்பது அடியேன்குடிசை, தேவரீர் திருமாளிகை, கறியமுது, சாற்றமுது, திருக்கண்ணமுது போன்ற வைணவ பரிபாஷை பேசுதல்.

உள்வைஷ்ணவமாவது ஞானம், பக்தி, வைராக்யம் முதலிய ஆத்ம குணங்கள் நிறைந்திருக்கை.

இவைதவிர, வைஷ்ணவர்கள் பத்துவிதமாகப் பாகுபகுத்தப் படுகின்றனர்.

1. அத்வேஷி, 2. அநுகூலன், 3. நாமதாரி, 4. சக்ராங்கி, 5. மந்த்ரபாடி, 6. வைஷ்ணவன், 7.ஸ்ரீவைஷ்ணவன், 8. ப்ரபந்நன், 9. ஏகாந்தி, 10. பரமைகாந்தி என்று பத்து விதமாகப் பிரிக்கப்படுகின்றனர்.

1. அத்வேஷி: பகவத்பாகவத விஷயங்களில் த்வேஷம் இல்லாதிருப்பவன்.

2. அநுகூலன்: முன் சொன்ன அத்வேஷத்தோடு அநுகூலபுத்தியும் உடையவன். அதாவது விஷ்ணு ஆலயங்களுக்குச் செல்லுதல், உற்சவங்களில் கலந்து கொள்ளுதல், பகவத் பாகவத விஷயங்களில் உபகரித்தல், வைஷ்ணவர்களோடு கலந்து பழகுதல் முதலிய நன்மைகளை உடையவன்.

3. திருநாமாதாரி: முன் சொன்னவற்றோடு ஹரியினுடைய பரம பாவனமாய் ஓராயிரமாய் உலகேழ் அளிக்கும் பேராயிரங்களில் ஒன்றைத் தனக்குப் பெயராகத் தரித்திருப்பவன்.

4. சக்ராங்கி: முன் சொன்னவற்றோடு வேத சாஸ்த்ரங்களில் விதித்துள்ளபடி விஷ்ணுவினுடைய திவ்யாயுதங்களான சங்க சக்ர சின்னங்களை ஆசாரியன் மூலமாக தோள்களிலே தரித்துக் கொண்டுள்ளவன். இது திருமண் காப்புக்கும் உபலக்ஷணம்.

5. மந்த்ரபாடி: முற்கூறியவற்றோடு சகல பண்புகளையும் கொடுக்க வல்ல பகவந் மந்த்ரமான திருவஷ்டாக்ஷர மந்த்ரத்தை உபதேசம் பெற்று ஜபித்துக் காரியம் கொள்ளும்வன்.

6. வைஷ்ணவன்: முன் கூறியவற்றோடு ஐம்புலன் இன்பங்களையும், தேவதாந்தரங்களையும் விட்டு முக்தியடைவதற்கு கர்ம ஜ்ஞானங்களை அங்கமாக உடைய பக்தியை உபாயமாக அநுஷ்டிப்பவன்.

7. ஸ்ரீவைஷ்ணவன்: முன்சொன்ன தகுதிகளோடு பற்றற்ற மனத்தில் ச்ரிய:பதியை இருத்தி எப்பொழுதும் எண்ணெயொழுக்கு போல இடைவிடாமல் பக்தி செய்வதோடு ஒழிவில் காலமெல்லாம் உடனாய் மன்னி வழுவிலா அடிமைசெய்கையாகிற சம்பத்தையுடையவன்.

8. ப்ரபந்நன்: முற்கூறிய தகுதிகளோடு பகவத் ப்ராப்திக்கு சாஸ்த்ரங்களில் கூறப்பட்ட எல்லா உபாயங்களும் சுலபமாக அநுஷ்டிக்க முடியாதவை; பலபிறப்புகளில் பாவங்கள் கழிந்த பிறகு முக்தியளிப்பவை: ஆத்மாவின் பாரதந்த்ர ஸ்வரூபத்துக்குச் சேராதவை என்று அறிந்து அவற்றை விட்டு பகவானையே ப்ரபத்தி பண்ணி அப்ரபத்தியையே உபாயமாகக் கொண்டவன்.

9. ஏகாந்தி: முன்கூறிய தகுதிகளையெல்லாம் உடையவனாய்த் தான் பண்ணும் ப்ரபத்தியும் உபாயமன்று என்று நிச்சயித்து அவ்வெம்பெருமானையே உபாயமாகப் பற்றியவன்.

10. பரமைகாந்தி: மேற்கூறிய எல்லா நன்மைகளையும் உடையவனாய், ஸ்வதந்த்ரனான ஈச்வரனை உபாயமாகப் பற்றுவதையும், மற்ற ஸாதனாந்தரங்களோடு சமமாக எண்ணத் தன்னை திருத்தித் திருமகள் கேள்வனுக்கு ஆக்கியருளிய ஆசார்யனையே உபாய உபேயமாகப் பற்றி ஆசார்யனிட்ட வழக்காக இருப்பவன்.

ஆசார்யனையே எல்லாமாகக் கொண்டும் ஸ்ரீராமாநுஜர், பிள்ளைலோகாசார்யர், வேதாந்த தேசிகர், மணவாளமாமுனிகள் போன்ற மஹாசார்யர்கள் அருளிச் செய்துள்ள ஸ்ரீவைஷ்ணவ லக்ஷணத்தைப் பின்பற்றிக் கொண்டும் இருந்தால் மோக்ஷம் நிச்சயம் கிட்டும் என்ற நம்பிக்கை கொள்ளவேண்டும்.

ஸ்ரீவைஷ்ணவ உலகுக்கு ஜகதாசார்யரான எம்பெருமானார் திருவடிகளைப் பற்றிக் கொண்டேமேயானால், அவருக்கு உண்டான பேறு நமக்கும் கிட்டும் என்று மணவாளமாமுனிகள் ஆர்த்தி பிரபந்தத்தில் அருளிச் செய்துள்ளார்.

இந்த வரங்கத்தினிதிருநீ என்றரங்கர்
எந்தை எதிராசர்க் கீந்தவரம் - சிந்தை செய்யில்
நம்மதன்றோ? நெஞ்சமே! நற்றாதை சொம் புதல்வர்
தம்மதன்றோ? தாயமுறைதான்.

என்பது ஸ்ரீமணவாள மாமுனிகள் அருளிச் செய்த ஆர்த்தி ப்ரபந்தத்தில் இறுதிப் பாசுரம் (60), ஸ்ரீரங்கநாதன் எம்பெருமானாருக்கு ஒருவரம் ஈந்து அவர் பெற்றததாகவும், தந்தையுடைய ஸொத்து பிள்ளைக்கு வாரிசு முறையாக வருவது போல (புத்ர பௌத்ர பாரம்பர்யமாய் என்று லௌகிக ஸொத்துப் பத்திரங்களில் எழுதுவது முறை) எதிராசர் திருவடி ஸம்பந்தம் பரம்பரா ப்ராப்தமாகப் பெற்ற தமக்கும் அரங்கன் உடையவருக்குத் தந்த வரத்தில் பாத்யதை (சொந்தம்) உண்டு என்கிறது இப்பாசுரம்.

ஸ்ரீரங்கத்தில் ஒரு பங்குனி உத்தரத் திருநாளில் எந்தை எதிராசர் ஸ்ரீரங்கநாச்சியார் சேர்த்தியில் நம்பெருமாளைத் திருவடி தொழுது த்வயாநுஸந்தாநத்துடன் சரணம் புகுந்தார். அப்போது பெருமாளுக்கும் உடையவருக்கும் ஒரு ஸம்வாதம் (உரையாடல்) நிகழ்ந்தது. அதில் பெருமாள் "த்வயமர்த்தாநு ஸந்தாநேந ஸஹ யாவச்சரீரபாதம் அத்ரைவ ஸ்ரீரங்கே ஸுகமாஸ்வ" என்று நியமித்து, திருத்தேர்த் தட்டிலும் ( ஸர்வ தர்மாந் இத்யாதி) கடற்கரை வெளியிலும் ( ஸக்ருதேவ இத்யாதி) நாமே சொன்னோம். ஸத்ய மூர்த்தியான நம் வசநத்தில் துளியும் ஐயம் வேண்டாம். பேற்றில் சிறிதும் ஐயமின்றி இங்கேயே இனிதே இரும் – "நிஸ்ஸம்சய: ஸுகமாஸ்வ" என்று பணித்ததே கீழே உதாஹரித்த "இந்தவரங்கத்தினிதிரு நீ" என்ற பாசுரத்தில் அருளிச் செய்யப்பட்டது.

நமக்கு சுமார் ஆயிரமாண்டுகளுக்குமுன் எழுந்தருளியிருந்த எம்பெருமானாருக்கு அரங்கன் வரமளித்தது உண்மை. அது பரம்பரா ப்ராப்தமாக நம்மவரையும் பர்யவஸிக்கும்படி என்? என்ற ஸந்தேஹம் பலர் மனதில் எழக்கூடும். உடையவருக்குப் பல நூற்றாண்டுகள் பிந்தியவரான மணவாள மாமுனிகளின் பாசுரத்தினால் இது ஸ்பஷ்டம். "எந்தை ஸொம் நம் மதன்றோ தாயமுறைதான்?" என்பது இத்தைத் தெளிவாக்குகிறது. பாட்டனார் சொத்து தந்தை மூலம் பேரனுக்கும், அப்படியே அந்த ஸந்ததியில் வருபவருக்கும் அநுபவிக்கக் கிடைக்கிறதன்றோ? இவ்விஷயத்தை வேதாந்த தேசிகன் ஒரு நல்ல உதாரணத்துடன் விளக்கியருளுகிறார். ந்யாஸதிலகத்தில் "அந்தோ அநந்த க்ரஹண" என்ற ச்லோகத்தில் குருடன் கண் தெரிந்தவன் கைப்பற்றி நடந்து தன்னிடம் சேருவாரையும், காலில்லாதவன் தக்க வாகனம், மூலம் வேண்டுமிடம் சேருவதையும் உதாரணம் காட்டி, மேலே என்று ஒரு த்ருஷ்டாந்தம் காட்டியருளுகிறார். என்றோ இருந்த அரசனிடத்தில் சேவகம் புரிந்து பரிசாகப் பெற்ற நிலபுல சொத்துக்களை அவன் பரம்பரையில் வருமவர்கள் ராஜஸேவையில் எவ்விதத் தொடர்பும் இல்லாதவராயினும்

அநுபவிப்பது போல" என்பது இந்த உதாரணம். முதலிரண்டும் நேர் தொடர்புள்ளவன் பலன் பெறுவதைக் காட்டும் உதாரணங்கள். மூன்றாவது நேர் தொடர்பின்றி பரம்பராப்ராப்தமான அநுபவத்தைச் சொல்வது. இந்த மூன்றாவது த்ருஷ்டாந்தத்தை தேசிகனருளியது பரம்பரையான திருவடி ஸம்பத்தையே காட்டுவதன்றோ?

இந்த ப்ரகாரம் மூலத்திலிருந்தே தெரிந்து கொள்ளலாம்படி இருந்தாலும் ஆசார்யர்களுடைய ஸ்ரீஸூக்திகளின் மூலம் தெளிவது விசேஷமன்றோ! இந்த விஷயம் வேதாந்த தேசிகராலும் ந்யாஸதிலகத்தில் ஒரு ச்லோகத்தில் வ்யக்தமாக அருளிச் செய்யப்பட்டுள்ளது.

உக்த்யா தநஞ்சய விபீஷண லக்ஷ்யயா தே
ப்ரத்யாய்ய லக்ஷ்மண முநேர் பவதா விதீர்ணம்
ச்ருத்வாவரம் தததுபக்த மதாவலிப்தே
நித்யம் ப்ரஸீத பகவந் மயி ரங்கநாத.

தநஞ்சயனைக் (அர்ஜுனனைக்) குறித்தும் விபீஷணனைக்குறித்தும் தான் சொன்ன "ஸர்வதர்மாந்" "ஸக்ருதேவ" இந்த ச்லோக விஷயங்களை எம்பெருமானாரிடம் எடுத்துரைத்து "இதி மயைவ ஹி உக்தம்" என்றதையும் சொல்லி, மேலே "பவதா விதீர்ணம் வரம் ச்ருத்வா" என்கிறார். "தததுபந்த மதாவலிப்தே" என்று செருக்குறுவதாக அருளிச் செய்கிறார். அதாவது எம்பெருமானார் திருவடி ஸம்பந்தம் பரம்பரா ப்ராப்தமாக நமக்குக் கிடைத்துள்ளபடியால் அரங்கன் எந்தை எதிராசர்க்கீந்தவரம் நமக்கும் தாய முறைப்படி பொருத்தமன்றோ? என்று.

இந்த கத்யத்தில் முதல் முன்னம் ஸ்வாமி ராமாநுஜர் பிராட்டியைப் புருஷகாரமாக சரணம் பற்றுகிறார். "பகவந் நாராயண" இத்யாதி சூர்ணிகையாலே. அதற்கு நாச்சியார் "அஸ்துதே, தயைவ ஸர்வம் ஸம்பத்ஸ்யதே" என்று தம் சோதி வாய் திறந்து ப்ரதி வசநமருளிச் செய்கிறார். "ஸம்பந்தி ஸம்பந்தி நிரஸ்தரணமபி ஸர்வ சப்தாபிப்ரேதம்" என்று இங்கு வ்யாக்யானமிடப்பட்டுள்ளது. "நீர் பண்ணிப் புகும் ப்ரபத்தி நிறைந்த பயனுள்ளதாகும். உமது ஸம்பந்த ஸம்பந்திகளுக்கும் ஆகும்" என்று கருத்து. இதனால் எம்பெருமானார் திருவரங்கனிடமிருந்து பெற்ற வரம் அவருடைய ஞாந பரம்பரை ஸம்பந்தமுடைய யாவருக்கும் பலவத்தாகும் என்பதில் ஐயமில்லை. "எம்பெருமானார் திருவடிகளே சரணம்" என்று நாம் க்ருதக்ருத்யராய் மார்பில் கைவைத்துறங்கலாம்.

## துணைநூற்பட்டியல்

1. யதிராஜபாதுகா – மாத இதழ்கள்
2. கீதாசார்யன் – மாத இதழ்கள்
3. ஸ்ரீரங்கநாதபாதுகா – மாத இதழ்கள்
4. ஸ்ரீந்ருஸிம்ஹப்ரியா – மாத இதழ்கள்
5. ஸ்ரீ வைஷ்ணவ ஸ்ரீ – மாத இதழ்கள்
6. பராசரபட்டர் வைபவம் – ஸ்ரீவைஷ்ணவஸ்ரீ வெளியீடு
7. ஸ்ரீராமானுஜர் வாழ்க்கை வரலாறு – திரு கல்யாணராமன்
8. ஸ்ரீவைஷ்ணவன் – ஸ்ரீ உ.வே. வி.என். கோபாலதேசிகன்
9. ஐதிஹ்ய நிர்வாஹ ரத்நமாலா – ஸ்ரீ உ.வே. ப்ரதிவாதி பயங்கரம் அண்ணங்கராசாரியர் ஸ்வாமி, காஞ்சீபுரம்.
10. ஸ்ரீவசநபூஷணம் – வ்யாக்யானம்– ஸ்ரீ உ.வே. ப்ரதிவாதி பயங்கரம் அண்ணங்கராசாரியர் ஸ்வாமி, காஞ்சீபுரம்.
11. முமுக்ஷுப்படி – வ்யாக்யானம் – ஸ்ரீ உ.வே. ப்ரதிவாதி பயங்கரம் அண்ணங்கராசாரியர் ஸ்வாமி, காஞ்சீபுரம்.
12. திவ்யப்ரபந்த கோஸம் – ஸ்ரீ.உ.வே. புத்தூர் கிருஷ்ணஸ்வாமி ஐயங்கார்
13. குருபரம்பரை – ஆழ்வார் அமுத நிலைய வெளியீடு
14. ஸ்ரீவைஷ்ணவம்– ஆழ்வார் அமுத நிலைய வெளியீடு
15. நஞ்சீயர் ஆற்றிய வைணவ சமயப் பணி– திருமதி பூமா வேங்கடகிருஷ்ணன்.
16. வார்த்தாமாலை
17. திருமாலை – பெரியவாச்சான்பிள்ளை வ்யாக்யானம்
18. ஸ்ரீதேசிக ஸ்தோத்ர மாலா – லிப்கோ வெளியீடு
19. ரஹஸ்யத்ரய ஸாரம்
20. உபகார ஸங்க்ரஹம்

## நூலாசிரியரைப் பற்றி

திருமதி ஸத்யபாமாபார்த்தசாரதி அவர்கள் வானமாமலை கலியன் ஸ்வாமியின் சிஷ்யர்களான திரு கோவிந்தன் ஐயங்கார் அவர்களுக்கும், திருமதி ராதா அவர்களுக்கும் மகளாகப் பிறந்து, திரு பார்த்தஸாரதி அவர்களை மணவாளராக அடைந்தார். வேதியியலில் B.Sc பட்டமும், சென்னைப் பல்கலைகழகத்தின் வைணவத் துறையில் Diploma பட்டமும் அதன்பிறகு முதுகலை (M.A.) பட்டமும் பெற்று முதல் நிலையில் (First Rank) தேறினார். ஸ்ரீவைஷ்ணவ கல்வி நிறுவனமான ஸ்ரீவைஷ்ணவஸ்ரீ என்கிற அமைப்பு



நடத்திய மூன்று ஆண்டு கல்வித் திட்டத்தில சேர்ந்து முதல் நிலையில் (First Rank) தேறி ஸ்ரீவைஷ்ணவஸ்ரீ என்ற விருதையும் பெற்றார். வைணவ ஸம்ப்ரதாயத்தில் மிகவும் ஈடுபாடு உடையவர். மனநிலை குன்றியவர்களுக்காக இயங்கி வரும் தொண்டு நிறுவனமான தமிழ்நாடு மாநிலத்தின் ஸ்பெஷல் ஒலிம்பிக்ஸ் கமிட்டியில் அங்கத்தினராக பல ஆண்டுகளாக பணியாற்றி வருகிறார். ஸ்ரீவைஷ்ணவ ஸம்ப்ரதாய அர்த்தங்களை வரியடைவே கற்பதில் ஆர்வமுள்ளவரான இவர் பற்பல அறிஞர்களிடம் தொடர்ந்து காலக்ஷேபம் கேட்டு வருகிறார்.